22-5

# உபநிஷத்ஸாரம்

ப்ரச்ன-முண்டக-மாண்டூக்ய-ஐதரேய

உபநிஷத்துக்கள்









RAMAKRISHNA MATH
MYLAPORE. MADRAS-600 004

# உபநிஷத்ஸாரம்

## ॥ उपनिषत्सार: ॥

प्रश्न-मुण्डक-माण्डूक्य-ऐतरेय-उपनिषद:

ப்ரச்ன-முண்டக-மாண்டூக்ய-ஐதரேய
உபநிஷத்துக்கள்

(ஸ்ரீ ராமகிருஷ்ண தீபம் எனும்
உரையுடன் கூடியது)

உரையாசிரியர்
''அண்ணா''



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் சென்னை-4

# பொருளடக்கம்

# குறிகளின் விளக்கம்

| | |
|---|---|
| அ-அவயவப் பொருள் | ஈச-ஈச-உபநிஷத்து |
| உ-ம்-உதாரணம் | கே-கேன ,, |
| ஒ-ஒப்பிடுக | கட-கட ,, |
| கீ-பகவத் கீதை | ப்ர-ப்ரச்ன ,, |
| பி.சூ-பிரம்ம சூத்ரம் | மு-முண்டக ,, |
| ம.பா-மகாபாரதம் | மா-மாண்டூக்ய |
| பாக-பாகவதம் | தை-தைத்திரீய |
| ரா.கி.—ஸ்ரீராம கிருஷ்ணர் | ஐ-ஐதரேய ,, |
| சங்-ஸ்ரீசங்கரர் | சா-சாந்தோக்ய |
| ராமானு-ஸ்ரீராமானுஜர் | ப்ரு-ப்ருஹதாரண்யக |

22-5

# முகவுரை

இப்புஸ்தகத்தில் 'ப்ரச்ன', 'முண்டக', 'மாண்டுக்கிய,' 'ஐதரேய' என்ற நான்கு உபநிஷதங்கள் அடங்கியிருக்கின்றன. மாண்டுக்கியோபநிஷதத்திற்கு கௌடபாத காரிகையும் சுருக்கமாக மூலத்துடன் தரப்பட்டுள்ளது.

முதல் இரண்டு பதிப்புக்களில் இவ்வுபநிஷதங்கள் முழுதும் தரப்படாமல் இடையில் சில மந்திரங்களை விட்டுச் சுருக்கி அச்சிடப்பட்டிருந்தன. இப்பதிப்பில் முழுதும் தரப்பட்டுள்ளன. உரையுடன் ஒப்பிட்டுப் படிப்பதற்கு உபயோகமாயிருக்கும் வகையில் கீதை மேற் கோள்களும், சங்கராசாரியரின் விரிவுரைக் குறிப்புக்களும், ஸ்ரீ ராமகிருஷ்ணனின் உபதேச மொழிகளும் ஆங்காங்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இந் நூலைப் பரிசோதனை செய்து அச்சிடும்போது திருத்திக்கொடுத்துதவிய பிரம்மஸ்ரீ வழுத்தூர் ராஜகோபால சர்மா அவர்களுக்கும், அழகாக அச்சிட்டுத் தந்த அம்ருதா அச்சுக் கூடத்தாருக்கும் இதைப் படிக்கப்போகும் அன்பர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

சென்னை,
குரோதி ஸு
தை 1௳
14—1—1965

உரையாசிரியர்

## உச்சரிப்பு

| | | | | |
|---|---|---|---|---|
| க क | ச च | ட ट | த त | ப प |
| க̣ ख | ச̣ छ | ட | த̣ थ | ப̣ फ |
| க ग | ஜ ज | ட ड | த द | ப ब |
| க̣ घ | ஜ झ | ட̣ ढ | த̣ ध | ப̣ भ |
| ங ङ | ஞ ञ | ண ण | ந न | ம म |

ய य ர र ல ल வ व ச श ஷ ष ஸ स ஹ ह க்ஷ क्ष

S அ தொக்கி நிற்கும்

ँ கும்

ओं

# ॥ आत्मसमर्पणम् ॥

॥ स्वरूपनिरूपण-हेतवे श्रीशिवानन्दगुरवे नमः ॥

धनुर्गृहीत्वौपनिषदं महास्त्रं
शरं ह्युपासा-निशितं संधयीत ।
आयम्य तद्भावगतेन चेतसा
लक्ष्यं तदेवाक्षरं सोम्य विद्धि ॥

ஓம்

ஆத்ம ஸமர்ப்பணம்

ஸ்வரூப-நிரூபண-ஹேதவே ஸ்ரீசிவாநந்த குரவே நம:

*தனுர்-க்ருஹீத்வௌபநிஷதம் மஹாஸ்த்ரம்*
*சரம் ஹ்யுபாஸா-நிசிதம் ஸந்தயீத ।*
*ஆயம்ய தத்பாவ-கதேன சேதஸா*
*லக்ஷ்யம் ததேவாக்ஷரம் ஸோம்ய வித்தி ॥*

ஓம்

ஸ்வரூப விளக்கத்திற்குக் காரணமாகிய ஸ்ரீசிவானந்த குருவிற்கு நமஸ்காரம்

*சித்தம் அழகியவனே! உபநிஷத்திலுள்ள மஹா அஸ்திரமாகிய (ஓங்கார) வில்லை எடுத்து, உபாசனையால் கூர்மை பெற்ற (ஜீவனாகிய) அம்பைத் தொடுத்து (தியானத்தால்) தன்மயமான சித்தத்தால் அதை இழுத்து அந்த அக்ஷரப் பிரம்மமாகிய லக்ஷியத்தில் லயமடையச் செலுத்துவாய்.*

— மு. உப. 2.2.3.

# ॥ प्रश्नोपनिषत् ॥

ॐ भद्रं कर्णेभिः शृणुयाम देवाः । भद्रं पश्येमाक्षभिर्यजत्राः स्थिरैरङ्गैस्तुष्टुवाँसस्तनूभिः । व्यशेम देवहितं यदायुः । स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः । स्वस्ति नः पूषा विश्ववेदाः । स्वस्ति नस्तार्क्ष्यो अरिष्टनेमिः । स्वस्ति नो बृहस्पतिर्दधातु ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

# பிரச்னோபநிஷத்

ஓம் பத்ரங் கர்ணேபி: ச்ருணுயாம தேவா: । பத்ரம் பச்யே–மாக்ஷபிர்யஜத்ரா: । ஸ்திரை-ரங்கைஸ் துஷ்டுவாம்ஸஸ் - தனூபி: । வ்யசேம தேவஹிதம் யதாயு: । ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்தச்ரவா: । ஸ்வஸ்தி ந: பூஷா விச்வவேதா: । ஸ்வஸ்தி நஸ்-தார்க்ஷ்யோ அரிஷ்டநேமி: । ஸ்வஸ்தி நோ ப்ருஹஸ் பதிர் ததாது ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ।

## பிரச்னோபநிஷத்து

ஓம். தேவர்களே! காதுகளால் நாங்கள் நல்லதைக் கேட்கவேண்டும்.—பூஜைக் குரியவர்களே! கண்களால் நாங்கள் நல்லதைக் காணவேண்டும் திடமான உறுப்புக்களுடனும் உடல்களுடனும் (தேவர்களைத்) துதித்துப் போற்றிக்கொண்டு தேவர்களுக்குவப்பான ஆயுள் எவ்வளவோ அதை அடைவோமாக. பெரும்

# प्रथमः प्रश्नः

ॐ सुकेशा च भारद्वाजः, शैव्यश्च सत्यकामः, सौर्यायणी च गार्ग्यः, कौसल्यश्चाश्वलायनो, भार्गवो वैदर्भिः, कबन्धी कात्यायनस्ते हैते ब्रह्मपरा ब्रह्मनिष्ठाः, परं ब्रह्मान्वेषमाणा, एष ह वै तत्सर्वं वक्ष्यतीति । तें ह समित्पाणयो भगवन्तं पिप्पलादमुपसन्नाः ॥ १.१ ॥

புகழ் வாய்ந்த இந்திரன் நமக்கு நன்மை (அளிக்கட்டும்). எல்லாவற்றையும் அறியும் சூரியன் நமக்கு நன்மை (அளிக்கட்டும்). தடைபடாத கதியுடைய கருடன் நமக்கு நன்மை (அளிக்கட்டும்). பிருஹஸ்பதி நமக்கு நன்மை (அளிக்கட்டும்).

ஓம் முவ்வகையிலும் சாந்தி நிலவுக !

## முதல் கேள்வி

1.1. ஓம் பாரத்வாஜருடைய புத்திரர் ஸுகேசர், சிபியின் புத்திரர் ஸத்யகாமர், சூரியனுடைய பௌத்ரர் கார்க்கியர், அசுவலரின் புத்திரர் கௌஸல்யர், விதர்ப்ப நாட்டினரான பார்க்கவர், கத்யரின் புத்திரர் கபந்தி—அவர்கள் அனைவரும் பிரம்ம நாட்ட முடையவர்களாகவும் பிரம்ம நிஷ்டையுடையவர்களாகவும் பிரம்மத்தைத் தேடுபவர்களாகவும் இருந்தனர். அதைப் பற்றிய அனைத்தையும் இவர் உபதேசிப்பார் என்று ஸமித்தைக் கையுறையாகக் கொண்டு அவர்கள் பெருமை மிக்க பிப்பலாதரை அணுகினர்.

---

**உபநிஷத்தின் பெயரும் தொடர்பும்** :—இவ்வுபநிஷத்தில் ஆறு 'ப்ரச்னங்கள்' அல்லது கேள்விகள் எழுவதால் இதற்குப் பிரச்னோப நிஷத்து என்று பெயர் அமைந்தது. இது அதர்வ வேதத்தைச் சேர்ந்தது.

**தேவர்கள்** :—நம்மைச் சூழ்ந்து நின்று நம்மைக் காப்பாற்றுவதற்குத் தேவர்களை ஆண்டவன் நியமித்திருக்கிறார்.

## ப்ரதம : ப்ரச்ன :

ஓம் ஸுகேசா ச பாரத்வாஜ :, சைப்யச்ய ஸத்ய காம:, ஸௌர்யாயணீ ச கார்க்ய:, கௌஸல்யஶ்- சாச்வலாயனோ, பார்கவோ வைதர்பி:, கபந்தீ காத் யாயனஸ்-தே ஹைதே ப்ரஹ்மபரா ப்ரஹ்மநிஷ்டா:, பரம் ப்ரஹ்மான்வேஷமாணா ஏஷ ஹ வை தத் ஸர்வம் வக்ஷ்யதீதி, தே ஹ ஸமித்பாணயோ, பக வந்தம் பிப்பலாத-முபஸன்னா : || 1.1. ||

அவர்கள் நம்முடைய பிரார்த்தனைகளை ஆண்டவனிடம் சேர்ப்பித்து, ஆண்டவன் நமக்களிப்பதை நம்மிடம் சேர்ப்- பிக்கின்றனர்.

1.1. (ஸமித்பாணய):— ஸமித்தைக் கையுறையாகக் கொண்டு—அரசன், குரு, தெய்வம், குழந்தைகள் இவர்களைக் காணச் செல்லுகையில் வெறுங்கையனைப் போகக்கூடாது. குருவினிடம் செல்லுகையில் அவருடைய அக்கினியை வளர்ப்பதற்கு நாள்தோறும் அவசியமான ஸமித்தைச் சிஷ்யர்கள் கொண்டு செல்வது வழக்கம். ஸமித்து ஈரமில் லாமல் உலர்ந்திருப்பது போல் சிஷ்யனுடைய மனம் வைராக்கியமடைந்திருக்கிறதென்பதற்கும், தீயிலிட்டதும் அது தீயைப் பற்றிக் கொள்வதுபோல் குருவின் உபதேசத் தைப் பற்றிக் கொள்ளும் என்பதற்கும், ஸமித்தை அக்னியி லிடுவதுபோல் சிஷ்யன் தன்னை குருவிடம் முழுவதும் அர்ப் பணம் செய்கிறான் என்பதற்கும் இது அறிகுறி.

ஒ.—பணிவாலும், பரிவுமிகுந்த கேள்வியாலும், சேவை யாலும், அதை அறிக. மெய்ப்பொருள் கண்ட ஞானிகள் உனக்கு ஞானத்தை உபதேசிப்பார்கள். (கீ. 4.34)

அதையே மேலாகக் கருத்திற் கொண்டவனும் இந்திரி யங்களை நன்கடக்கியவனும் ஆகிய சிரத்தை பொருந் தியவன் ஞானத்தை அடைகிறான். (கீ. 4.40)

தவஞ்செய்யாதவர்க்கும் பக்தியில்லாதவர்க்கும் பணி விடை செய்யாதவர்க்கும் இந்த ஞானத்தை உபதேசிக்கக் கூடாது. (கீ. 18, 67)

तान् ह स ऋषिरुवाच, भूय एव तपसा ब्रह्मचर्येण श्रद्धया संवत्सरं संवत्स्यथ, यथाकामं प्रश्नान् पृच्छत, यदि विज्ञास्यामः, सर्वं ह वो वक्ष्याम इति ॥ १.२ ॥

अथ कबन्धी कात्यायन उपेत्य पप्रच्छ। भगवन् कुतो ह वा इमाः प्रजाः प्रजायन्त इति ॥ १.३ ॥

तस्मै स होवाच प्रजाकामो वै प्रजापतिः, स तपोऽतप्यत, स तपस्तप्त्वा, स मिथुनमुत्पादयते, रयिं च प्राणं चेत्येतौ मे बहुधा प्रजाः करिष्यत इति ॥ १.४ ॥

1.2. "மீண்டும் தவத்தையும் பிரம்ம சரியத்தையும் சிரத்தையையும் மேற்கொண்டு ஒரு வருஷம் வசியுங்கள் ; பின் இஷ்டப்படி கேள்விகளைக் கேளுங்கள் ; எமக்குத் தெரிந்தால் நிச்சயமாக விடையளிப்போம்" என்று அவர்களிடம் அந்த ரிஷி கூறினார்.

1.3. அதன்மேல் கத்யரின் புத்திரரான (காத்யாயனர்) கபந்தீ என்பவர் (பிப்பலாதரை) அணுகிக் கேட்டதாவது :—"ஐயனே ! இந்தப் பிரஜைகள் எங்ஙனம் உற்பத்தியாயினர் ?"

---

**பிரம்மசரியம்**—பிரம்மசரியமில்லாதவன் மனம் ஓட்டைக் குடம் போன்றது. (ரா.கி.)

(ந தபஸ்-தப இத்யாஹுர் ப்ரஹ்மசர்யம் தபோத்தமம்| ஊர்த்வரேதா பவேத் யஸ்து ஸ தேவோ ந து மானுஷ :)

பிரம்மசரியந்தான் உத்தமமான தவம் ; அது இல்லாத தவம் தவமன்று. எவன் ஊர்த்துவ ரேதஸ் ஆகின்றானோ அவன் தெய்வம், மனிதனன்று (ஞானஸங்கிலினீ தந்த்ரம்).

1.4. ப்ரஜாபதி—ஹிரண்ய கர்ப்பன் (உலக ஸமஷ்டி வடிவினன்).

ஸமஷ்டியான ஒவ்வொன்றும் பிரஜாபதி என்றும். உயிரும், உடலும், வளர்ச்சியுந் தேய்வும், பகலும் இரவும், பிரஜாபதியின் இரு கூறுகளான பிராணனும் ரயியும்

தான் ஹ ஸ ருஷிருவாச, பூய ஏவ தபஸா ப்ரஹ்மசர்யேண ச்ரத்தயா, ஸம்வத்ஸரம் ஸம்வத்ஸ்யத, யதாகாமம் ப்ரச்னான் ப்ருச்சத, யதி விஜ்ஞாஸ்யாம:, ஸர்வம் ஹ வோ வக்ஷ்யாம இதி || 1.2 ||

அத கபந்தீ காத்யாயன உபேத்ய பப்ரச்ச பகவன், குதோ ஹ வா இமா : ப்ரஜா: ப்ரஜாயந்த இதி || 1.3 ||

தஸ்மை ஸ ஹோவாச, ப்ரஜாகாமோ வை ப்ரஜாபதி : ஸ தபோ ऽதப்யத, ஸ தபஸ்-தப்த்வா| ஸ மிதுன-முத்பாதயதே, ரயிஞ் ச ப்ராணஞ்சேத்-யேதௌ மே பஹுதா ப்ரஜா : கரிஷ்யத இதி || 1.4 ||

1.4. (இங்ஙனம் கேட்ட) இவருக்கு அவர் கூறியதாவது :—பிரஜாபதியானவர் பிரஜைகளை விரும்பியவராய்த் தவத்தைச் செய்தார். தவஞ் செய்து ரயி, பிராணன் என்ற இரட்டையைச் சிருஷ்டித்து 'இவை எனக்குப் பலவகையான பிரஜைகளை உண்டாக்கும்' என்று கருதினார்.

---

எனக் கூறப்படுகின்றன. பிராணனும் ரயியும், வெயிலும் நிழலும், வலமும் இடமும், சித்தும் ஜடமும் போல இணைக்கப்பெற்றவை. பிராணனுடைய இயக்கத்தாலேயே பிரஜைகள் உற்பத்தியாகின்றன, நிலைபெறுகின்றன, அழிகின்றன, (பிரச். 2.5-6 பார்க்க).

ஒ —(ம்ருத்யுர்-கந்தர்வஸ்-தஸ்ய ப்ரஜா அப்ஸரஸ :...) மரணம் ஒரு கந்தர்வன் ; அவனுக்கு மக்கள் அப்ஸரஸ்திரீகள் போன்றவர்கள் ; உலக மேடையில் அவர்களுடன் கூடி விளையாடுகிறான், (காமோ கந்தர்வ: தஸ்யாதயோऽப்ஸரஸ: காமம் ஒரு கந்தர்வன் ; மனக்கவலைகள் அவனுக்கு அப்ஸரஸ்திரீகள் போன்றவர்கள்... (ஜயாதி ஹோம மந்திரம்-தைத்திரீயம்).

आदित्यो ह वै प्राणो, रयिरेव चंद्रमा, रयिर्वा एतत् सर्वं यन्मूर्तं चामूर्तं च, तस्मान् मूर्तिरेव रयिः ॥ १.५ ॥

आदित्य उदयन् यत् प्राचीं दिशं प्रविशति तेन प्राच्यान् प्राणान् रश्मिषु सन्निधत्ते यद्दक्षिणां यत्प्रतीचीं हदुदीचीं यदधो यदूर्ध्वं यदन्तरा दिशो यत्सर्वं प्रकाशयति तेन सर्वान् प्राणान् रश्मिषु सन्निधत्ते ॥ १.६ ॥

स एष वैश्वानरो विश्वरूपः प्राणोऽग्निरुदयते । तदेतदृचाभ्युक्तम् ॥ १.७ ॥

विश्वरूपं हरिणं जातवेदसं परायणं ज्योतिरेकं तपन्तम् सहस्ररश्मिः शतधा वर्तमानः प्राणः प्रजानामुदयत्येष सूर्यः ॥ १.८ ॥

संवत्सरो वै प्रजापति-स्तस्यायने दक्षिणं चोत्तरं च । तद्ये ह वै तदिष्टापूर्ते कृत-मित्युपासते, ते चान्द्रमसमेव लोक-मभिजयन्ते । त एव पुनरावर्तन्ते तस्मादेते ऋषयः प्रजाकामा दक्षिणं प्रतिपद्यंते। । एष ह वै रयिर्यः पितृयाणः ॥ १.९ ॥

*1.5.* *'ப்ராண'னே சூரியன்' 'ரயி'யே சந்திரன் ஸ்தூல வடிவம் சூக்ஷ்ம வடிவமுள்ள இது எல்லாம் 'ரயி'யே. ஆகையால் உருவே 'ரயி' என்பாம்.*

*1.6.* *சூரியன் உதிக்கையில் கிழக்கு திக்கில் புகுகிறான். அதனால் கிழக்கிலுள்ள பிராணன்களையெல்லாம் தன்னுடைய ஒளிக்கிரணங்களால் வியாபித்து தன்னுடன் ஒன்றுக்கிக் கொள்ளுகிறான். அவ்வாறே தெற்கிலும், மேற்கிலும், வடக்கிலும், கீழும், மேலும், இடைத் திசைகளிலும் புகுந்து அனைத்தையும் பிரகாசிக்கச் செய்யும்போது, அதனால் எல்லாப் பிராணன்களையும் தன்னுடைய ஒளிக்கிரணங்களில் ஒன்றுக்கிக் கொள்ளுகிறான்*

ஆதித்யோ ஹ வை ப்ராணோ ரயிரேவ சந்த்ரமா ரயிர்வா ஏதத் ஸர்வம், யன்-மூர்த்தஞ்சாமூர்த்தஞ்ச, தஸ்மான் மூர்த்தி ரேவ ரயி: || 1.5 ||

ஆதித்ய உதயன் யத் ப்ராசீம் திசம் ப்ரவிசதி தேன ப்ராச்யான் ப்ராணான் ரச்மிஷு ஸந்நிதத்தே, யத்தக்ஷிணாம், யத்ப்ரதீசீம், யதுதீசீம், யதோ, யதூர்த்வம், யதந்தரா திசோ, யத்ஸர்வம் ப்ரகாசயதி தேன ஸர்வான் ப்ராணான் ரச்மிஷு ஸந்நிதத்தே || 1.6 ||

ஸ ஏஷ வைச்வாநரோ விச்வரூப: ப்ராணோ ऽக்னி-ருதயதே | ததேதத்-ருசாப்யுக்தம் || 1.7. ||

விச்வரூபம் ஹரிணம் ஜாதவேதஸம் பராயணம் ஜ்யோதிரேகம் தபந்தம் | ஸஹஸ்ரரச்மி: சததா வர்த்தமான: ப்ராண: ப்ரஜானா - முதயத்யேஷ ஸூர்ய : || 1.8 ||

ஸம்வத்ஸரோ வை ப்ரஜாபதிஸ்-தஸ்யாயனே, தக்ஷிணஞ் சோத்தரஞ் ச | தத்யேஹ வை ததிஷ்டா பூர்த்தே க்ருத - மித்யுபாஸதே, தே சாந்த்ரமஸ-மேவ லோக-மபிஜயந்தே, த ஏவ புனரா-வர்த்தந்தே, தஸ்மா-தேதே ருஷய:, ப்ரஜாகாமா தக்ஷிணம் ப்ரதிபத்யந்தே | ஏஷ ஹ வை ரயிர்-ய: பித்ருயாண : || 1.9 ||

---

1.7. அனைத்திற்கும் ஆத்மாவாகிய அவனே இவன். எல்லா வடிவமாகவும் பிராணனாகவும், அக்னியாகவும் உதிக்கிறான். அதுவே ருக்மந்திரத்திலும் சொல்லப்பட்டுளது.

अथोत्तरेण तपसा ब्रह्मचर्येण श्रद्धया विद्ययात्मान-मन्विष्यादित्य-मभिजयन्त एतद्वै प्राणाना-मायतन-मेत-दमृत-मभय-मेतत् परायण-मेतस्मान्न पुनरावर्तन्त इत्येष निरोधः ॥ १.१० ॥

पञ्चपादं पितरं द्वादशाकृतिं दिव आहुः परे अर्धे पुरीषिणम् ।
अथेमे अन्य उपरे विचक्षणं सप्त चक्रे षडर आहुरर्पितमिति ॥ १.११ ॥

1.8. விச்வரூபியாகவும், கிரணங்களுடன் கூடியவனாகவும், அனைத்தையும் அறிபவனாகவும், புகலிடமாகவும், இரண்டற்ற ஒளியாகவும் (கண்ணுக்குக் கண்ணாகவும்) எரிப்பவனாகவும், (உள்ள இவனைத் தங்கள் ஆத்மாவாக ஞானிகள் அறிகின்றார்கள்) ஆயிரங் கிரணங்களுடையவனாகவும், நூற்றுக் கணக்கான வடிவங்கொண்டு பிரஜைகளின் பிராணனாகவும் இந்த சூரியன் உதிக்கிறான்.

1.9. (கால வடிவான) வருஷமே பிரஜாபதி. தக்ஷிணாயனம் உத்தராயணம் என்று அதற்கு அயனங்கள் இரண்டு. எவர்கள் இங்கு இஷ்டாபூர்த்த வடிவான கருமவழியையே பின்பற்றுகிறார்களோ அவர்கள் சந்திரலோகத்தை யடைகின்றனர். அவர்கள் மீண்டும் திரும்புகின்றனர். (இவ்வுலகிற் பிறக்கின்றனர்) ஆகையால் எந்த ரிஷிகள் பிரஜைகளை விரும்பியவர்களோ அவர்கள் தக்ஷிண மார்க்கத்தை யடைகிறார்கள். பித்ருயானம் என்னும் இது 'ரயி'யே யாகும்.

---

1.9. இஷ்டா பூர்த்தம்—அக்னிஹோத்ரம், அதிதி பூஜை, பசு பக்ஷி ஸம்ரக்ஷணை, கிணறு வெட்டுதல். கோவில் கட்டுதல் முதலியன,

1.10. இது தேவயானம் எனப்படுவது. இது கிரம முக்தி மார்க்கம்.

அதோத்தரேண, தபஸா, ப்ரஹ்மசர்யேண ச்ரத்தயா, வித்ய-யாத்மான-மன்விஷ்-யாதித்ய-மபி ஜயந்த, ஏதத்-வை ப்ராணானா-மாயதன - மேத-தம்ருத-மபயம், ஏதத் பராயணம், ஏதஸ்மாந் ந புனராவர்த்தந்த இத்யேஷ நிரோத: || 1.10 ||

பஞ்சபாதம் பிதரம் த்வாதசாக்ருதிம் திவ ஆஹு: பரே அர்தே புரீஷிணம் | அதேமே அன்ய உபரே விசக்ஷணம் ஸப்தசக்ரே ஷடர ஆஹுரர்ப்பித-மிதி || 1.11. ||

---

**1.10.** ஆனால் தவத்தாலும் பிரம்மசரியத்தாலும் சிரத்தையாலும் வித்தையாலும் ஆன்மாவை நாடியவர்கள் உத்தர மார்க்கத்தால் சூரியலோகத்தை யடைகின்றனர். இதுவே எல்லாப் பிராணன்களுடைய உறைவிடமும், மரணமும் பயமும் நீங்கிய இடமும் ஆகும். இதுவே உன்னதமான நிலை. இதினின்று மீண்டுந் திரும்புவதில்லை. இது (மற்றவர்களுக்குத்) தடை.

**1.11.** ஐந்து பாதங்களுடையவனாகவும், (உலகின்) பிதாவாகவும் பன்னிரண்டு வடிவங்களுடையவனாகவும், தேவலோகத்திற்கும் மேலான ஸ்தானத்தில் உறைபவனாகவும், ஜலத்திற் கதிபதியாகவும் அவனை வர்ணிக்கின்றனர். இன்னும் சிலர் அனைத்தையும் கண்டறிபவனாகவும், ஆறு அரங்களும் ஏழு சக்கரங்களும் கொண்டு இயங்குவனாகவும், அவனிடத்திலேயே அனைத்தும் அர்ப்பணம் செய்யப்படுகிறதென்றும் கூறுகின்றனர்.

---

1.11. ஐந்து பாதங்கள்—ஐந்து ருதுக்கள். ஹேமந்த ருதுவும் சிசிர் ருதுவும் ஒன்றாகக் கொள்ளப்படுகிறது.

பன்னிரண்டு வடிவங்கள்-பன்னிரண்டு மாதங்கள். ஆறு அரங்கள்-ஆறு ருதுக்கள்.

मासो वै प्रजापतिस्तस्य कृष्णपक्ष एव रयिः शुक्लः प्राणस्तस्मादेते ऋषयः शुक्ल इष्टं कुर्वन्तीतर इतरस्मिन् ॥ १.१२ ॥

अहोरात्रो वै प्रजापतिस्तस्याहरेव प्राणो रात्रिरेव रयिः प्राणं वा एते प्रस्कन्दन्ति ये दिवा रत्या संयुज्यन्ते, ब्रह्मचर्यमेव तद्यद्रात्रौ रत्या संयुज्यन्ते ॥ १.१३ ॥

अन्नं वै प्रजापतिस्ततो ह वै तद्रेत-स्तस्मादिमाः प्रजाः प्रजायन्त इति ॥ १.१४ ॥

तेषामेवैष ब्रह्मलोको येषां तपो ब्रह्मचर्यं येषु सत्यं प्रतिष्ठितम् ॥ १.१५ ॥

तेषामसौ विरजो ब्रह्मलोको, न येषु जिह्मं अनृतं न माया चेति ॥ १.१६ ॥

1.12. மாதமே பிரஜாபதி (எனக் கொண்டால்), அதற்குக் கிருஷ்ணபக்ஷம் ரயி, சுக்லபக்ஷம் பிராணன். அதனால் (இதை அறிந்த) ரிஷிகள் (எச்சமயத்தில் யாகம் செய்தாலும் அனைத்தையும் ஒளியாகவும் பிராணனாகவும் பார்ப்பதால்) சுக்லபக்ஷத்தில் யாகம் செய்தவர்களாகவே ஆகிறார்கள். ஏனையோர் (அங்ஙனம் காணாமல் அறியாமையாகிற இருளில் இருப்பதால் அவர்கள் சுக்லபக்ஷத்தில் செய்தாலும்) கிருஷ்ண பக்ஷத்தில் (செய்தவர்கள் ஆகிறார்கள்)

1.13. இரவுபகல் (நாள்) பிரஜாபதி. அதற்குப் பகலே பிராணன், இரவே ரயி. எவர்கள் பகலில் ரதியுடன் (ஸ்திரீ ஸம்போகத்துடன்) கூடுகிறார்களோ அவர்கள் பிராணனைச் சிதறடிக்கிறார்கள். எவர்கள் இரவில் ரதியுடன் கூடுகிறார்களோ அது பிரம்மசரியமே.

*மாஸோ வை ப்ரஜாபதிஸ்-தஸ்ய க்ருஷ்ணபக்ஷ ஏவ ரயி: சுக்ல: ப்ராணஸ்-தஸ்மாதேதே ருஷய; சுக்ல இஷ்டம் குர்வந்தீதர இதரஸ்மின் || 1.12 ||*

*அஹோ ராத்ரோ வை ப்ரஜாபதிஸ் - தஸ்யா ரேஹவ ப்ராணோ ராத்ரிரேவ ரயி: ப்ராணம் வா ஏதே ப்ரஸ்கந்தந்தி யே திவா ரத்யா ஸம்யுஜ்யந்தே, ப்ரஹ்மசர்ய - மேவ தத்–யத்ராத்ரௌ ரத்யா ஸம்யுஜ்யந்தே || 1.13 ||*

*அன்னம் வை ப்ரஜாபதிஸ்-ததோ ஹவை தத் ரேதஸ்-தஸ்மாதிமா: ப்ரஜா: ப்ரஜாயந்த இதி || 1.14 ||*

*தேஷா-மேவைஷ ப்ரஹ்மலோகோ, யேஷாம் தபோ ப்ரஹ்மசர்யம், யேஷு ஸத்யம் ப்ரதிஷ்டிதம் || 1.15 ||*

*தேஷா–மஸௌ விரஜோ ப்ரஹ்மலோகோ, ந யேஷு ஜிஹ்மம், அந்ருதம், ந மாயா-சேதி || 1.16 ||*

---

1.14. அன்னமே ப்ரஜாபதி. அதிலிருந்தே ரேதஸ் (உண்டாகிறது). அந்த ரேதஸ்ஸிலிருந்து இப் பிரஜைகள் உற்பத்தியாகின்றன.

1.15. தவமும் பிரம்மசரியமும் எவர்களிடமோ, உண்மை எவர்களிடம் நிலைபெற்றுள்ளதோ, அவர்களுக்கே இந்தப் பிரம்ம லோகம்.

1.16 எவர்களிடம் சூதும் பொய்யும் வஞ்சனையும் இல்லையோ, அவர்களுக்கேயாம் இந்தக் குற்றமற்றப் பிரம்ம லோகம்.

## द्वितीयः प्रश्नः

अथ हैनं भार्गवो वैदर्भिः पप्रच्छ। भगवन् कत्येव देवाः प्रजां विधारयन्ते, कतर एतत् प्रकाशयन्ते, कः पुनरेषां वरिष्ठ इति ॥ २.१ ॥

तस्मै स होवाचाकाशो ह वा एष देवो वायु-रग्नि-रापः पृथिवी वाङ्मनश्चक्षुः श्रोत्रं च। ते प्रकाश्याभिवदन्ति वयमेतद्बाण-मवष्टभ्य विधारयामः ॥ २.२ ॥

तान्वरिष्ठः प्राण उवाच, मा मोह-मापद्यथाहमेवैतत् पंचधात्मानं प्रविभज्य एत-द्बाण-मवष्टभ्य विधारयामीति ॥ २.३ ॥

सोऽभिमाना-दूर्ध्व-मुत्क्रमत इव तस्मिन्नुत्क्रामत्यथेतरे सर्वे एवोत्क्रामन्ते तस्मिंश्च प्रतिष्ठमाने सर्व एव प्रातिष्ठन्ते। तद्यथा मक्षिका मधुकरराजान-मुत्क्रामन्तं सर्वा एवोत्क्रामन्ते तस्मिंश्च प्रतिष्ठमाने सर्वा एव प्रातिष्ठन्त एवं वाङ्मनश्चक्षुः श्रोत्रं च ते प्रीताः प्राणं स्तुन्वन्ति ॥ २.४ ॥

## இரண்டாவது கேள்வி

2.1. அதன்மேல் விதர்ப்ப நாட்டினரான (பிருகு வம்சத்தவர்) பார்க்கவர் அவரைக் கேட்டதாவது — ஐயனே! எத்தனை தேவதைகள் (உடல் படைத்த பிரஜைகளை ஆதரிக்கிறார்கள்? எத்தனை (தேவதை கள்) உடலை உயிர்ப்பிக்கின்றனர்? இவர்களுள் சிறந்த தேவதை எது?

2.2. இவருக்கு அவர் கூறியதாவது:— இது ஆகாசம் என்ற தேவதையும், வாயுவும், அக்கினியும், அப்புவும், பிருதிவியும், வாக்கு, மனம், கண் காது முதலியவைகளுமேயாம். அவை தம் சக்திகளை வெளிப்

## த்விதீய : ப்ரச்ன :

அத ஹைனம் பார்கவோ வைதர்பி: பப்ரச்ச | பகவன், கத்யேவ தேவா: ப்ரஜாம் விதாரயந்தே கதர ஏதத் ப்ரகாசயந்தே, க: புனரேஷாம் வரிஷ்ட இதி || 2.1 ||

தஸ்மை ஸ ஹோவாச, ஆகாசோ ஹ வா ஏஷ தேவோ வாயு-ரக்னி-ராப: ப்ருத்வீ வாங்-மனச்-சக்ஷு: ச்ரோத்ரஞ் ச | தே ப்ரகாச்யாபிவதந்தி, வய-மேதத்-பாண-மவஷ்டப்ய விதாரயாம: || 2.2 ||

தான் வரிஷ்ட: ப்ராண உவாச | மா மோஹ-மாபத்யத, அஹமேவைதத் பஞ்சதாத்மானம் ப்ரவிபஜ்ய, ஏதத் பாண-மவஷ்டப்ய, விதாரயாமீதி || 2.3 ||

---

படுத்திக்கொண்டு 'நாங்கள் தான் இவ்வுடலை ஆதரித்துத் தாங்குகிறோம்' என்று கூறின.

2.3. முக்கியப் பிராணன் அவைகளை நோக்கி "மயக்கத்தை யடையாதீர்கள். நானே என்னை ஐந்து பாகமாகப் பிரித்துக்கொண்டு இந்த உடலை ஆதரித்துத் தாங்குகின்றேன்" என்றது.

2.4. அம்முக்கியப் பிராணன் தன் பெருமையை விளக்குவதற்காக (உடலை விட்டு) கிளம்புவதுபோல்

---

2.1. ஒவ்வொரு சக்தியும் ஒரு தேவதை எனப்படுகிறது.

2.3. ஐந்து பாகமாகப் பிரித்துக்கொண்டு—பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என ஐந்து.

ஒ. (பஞ்சவ்ருத்திர்-மனோவத் வ்யபதிச்யதே)—
பி. சூ. 2.4.12

एषोऽग्नि-स्तपत्येष सूर्य एष पर्जन्यो मघवानेष वायु-रेष पृथिवी रयि-र्देवः सदसच्चामृतं च यत् ॥ २.५ ॥

अरा इव रथनाभौ प्राणे सर्वं प्रतिष्ठितम् ॥ २.६ ॥

प्रजापतिश्चरसि गर्भे त्वमेव प्रतिजायसे । तुभ्यं प्राण प्रजास्त्विमा बलिं हरन्ति यः प्राणैः प्रतितिष्ठसि ॥ २.७ ॥

देवानामसि वह्नितमः पितॄणां प्रथमा स्वधा । ऋषीणां चरितं सत्य-मथर्वाङ्गिरसामसि ॥ २.८ ॥

செய்தது. அது கிளம்பவே மற்ற (கண் காது முதலியவற்றிலுள்ள சக்திகள்) எல்லாம் கிளம்பலாயின. அது (மீண்டும்) நிலைபெற்றதும் எல்லாம் நிலைபெற்றன. எங்ஙனம் தேனீக்களின் அரசன் கிளம்பினுல் தேனீக்கள் எல்லாம் கிளம்புகின்றனவோ, அரசன் நிலைபெற்ருல் எல்லாம் நிலைபெறுகின்றனவோ, அங்ஙனமே இது. ஆகவே வாக்கும் மனதும் கண்ணும் காதும் (முக்கியப் பிராணனின் பெருமையை உணர்ந்து) பிரீதியுடன் பிராணனைத் துதிக்கலாயின.

2 5 இதுவே (முக்கியப் பிராணனே) அக்கினியாக எரிகிறது. இதுவே சூரியன். இதுவே மேகம். இதுவே இந்திரன். இதுவே காற்று. இந்த தேவதையே பிருதிவி, ரயி; உளதென்பதுவும், இலதென்பதும், அழிவற்ற பரம்பொருளும் (இதுவே.)

2 6. சக்கரத்தின் குடத்தில் ஆரங்களைப் போல் பிராணனிடத்தில் எல்லாம் பொருத்தப்பட்டுள்ளன.

2.7. பிரஜாபதியாக நீயே கர்ப்பத்தில் சலிக்கிருய்; (நீயே தாய்தந்தை வடிவில்) பிறகு பிறக்கிருய். பிராணனே! (கண்காது முதலிய) பிராணன்களுடன்கூட (எல்லா உடல்களிலும்) வீற்றிருக்கும் உனக்கு இப் பிரஜைகள் காணிக்கையைக் கொண்டு வருகிருர்கள்.

ஸோऽபிமானு-தூர்த்வ - முத்க்ரமத இவ தஸ்மின்னுத் க்ராமத்யதேதரே ஸர்வ ஏவோத்க்ராமந்தே தஸ்மிꣳச்ச ப்ரதிஷ்டமானே ஸர்வ ஏவ ப்ராதிஷ்டந்தே | தத்யதா மக்ஷிகா மதுகர - ராஜான-முத்க்ராமந்தம் ஸர்வா ஏவோத்க்ராமந்தே, தஸ்மிꣳச்ச ப்ரதிஷ்டமானே ஸர்வா ஏவ ப்ராதிஷ்டந்த ஏவம் வாங்-மனச்-சக்ஷு : ச்ரோத்ரஞ்ச தே ப்ரீதா: ப்ராணம் ஸ்துன்வந்தி || 2.4 ||

ஏஷோऽக்னிஸ்-தபத்-யேஷ ஸூர்ய ஏஷ பர்ஜன்யோ, மகவா-னேஷ வாயு-ரேஷ ப்ருதிவீ ரயிர்-தேவ:, ஸதஸச்சாம்ருதஞ் ச யத் || 2.5 ||

அரா இவ ரதநாபௌ, ப்ராணே ஸர்வம் ப்ரதிஷ்டிதம் || 2.6 ||

ப்ரஜாபதிச் சரதி கர்பே த்வமேவ ப்ரதிஜாயஸே | துப்யம் ப்ராண. ப்ரஜாஸ்த்விமா பலிம் ஹரந்தி ய : ப்ராணை : ப்ரதிதிஷ்டஸி || 2.7 ||

தேவானமஸி வஹ்னிதம: பித்ரூணாம் ப்ரதமா ஸ்வதா | ருஷீணாம் சரிதம் ஸத்ய-மதர்வாங்கிரஸா-மஸி || 2.8 ||

---

2.8. தேவர்களுக்கு (யாகங்களில் ஹவிர்ப்பாகத்தை) எடுத்துச் செல்பவர்களுள் சிறந்தவனுகிருய். பிதிருக்களுக்கு (நாந்தீமுக சிராத்தத்தில் ஸ்வதா என்று அளிக்கப்படும்) முதன்மையான அன்னமாகிருய்). அதைக் கொண்டுசேர்ப்பவனுமாகிருய். அங்கங்களின் ஸாரமான (கண் முதலிய) இந்திரியங்களின் இயக்கத்திற்கு அடிப்படையாயுள்ள உண்மைப் பிராண சக்தி நீயே

इन्द्रस्त्वं प्राण तेजसा, रुद्रोऽसि परिरक्षिता । त्वमन्तरिक्षे चरसि सूर्यस्त्वं ज्योतिषां पतिः ॥ २.९ ॥

यदा त्वमभिवर्षस्यथेमाः प्राण ते प्रजाः । आनन्दरूपास्तिष्ठन्ति कामायान्नं भविष्यतीति ॥ २.१० ॥

व्रात्यस्त्वं प्राणैकऋषिरत्ता विश्वस्य सत्पतिः । वयमाद्यस्य दातारः पिता त्वं मातरिश्वनः ॥ २.११ ॥

या ते तनूर्वाचि प्रतिष्ठिता या श्रोत्रे या च चक्षुषि । या च मनसि सन्तता शिवां तां कुरु मोत्क्रमीः ॥ २.१२ ॥

2.9. பிராணனே! நீயே இந்திரன். வீரியத்தால் ருத்திரனுகவும் இருக்கிருய். பரிபாலிப்பவனும் நீயே. நீயே சூரியனுக வானத்தில் சஞ்சரிக்கிருய். நீயே ஒளிகளின் அரசு.

2.10. பிராணனே! எப்போது நீ மழை பெய்கிருயோ அப்போதுதான் உன்னுடைய இப்பிரஜைகள் விருப்பப்படி அன்னம் உண்டாகப் போகிறதென்று ஆனந்த வடிவினராய் நிற்கின்றனர்.

2.11. பிராணனே! நீ (எல்லோருக்கும் முன் பிறந்ததால் உனக்கு ஸம்ஸ்காரங்களைச் செய்விப்பாரில்லாமையின்) நீ விராத்தியன்; (அதர்வ வேதத்தில் பிரசித்தமான) ஏகரிஷி எனும் அக்னி (நீயே); (எல்லா ஹவிஸ்ஸையும்) உண்பவன்; ஸத்தாயுள்ள உலகின் தலைவன்; உண்ணும் உனக்கு நாங்கள் (ஹவிஸ்ஸை) அளிப்பவர்கள்; வாயுவுக்கும் நீ பிதா (ஆகையால் உலகுக்கெல்லாம் பிதா).

இந்த்ரஸ்-த்வம் ப்ராண தேஜஸா, ருத்ரோஸி பரிரக்ஷிதா | த்வ-மந்தரிக்ஷே சரஸி, ஸூர்யஸ்-த்வஞ் ஜ்யோதிஷாம் பதி : || 2.9 ||

யதா த்வமபிவர்ஷஸ்யதேமா : ப்ராண தே ப்ரஜா : | ஆனந்த ரூபாஸ்-திஷ்டந்தி காமாயான்னம் பவிஷ்யதீதி || 2.10 ||

வ்ராத்யஸ்த்வம் ப்ராணைகருஷி - ரத்தா விச்வஸ்ய ஸத்பதி : | வய-மாத்யஸ்ய தாதார : பிதா த்வம் மாதரிச்வன: || 2.11 ||

யா தே தனூர்-வாசி ப்ரதிஷ்டிதா யா ச்ரோத்ரே யா ச சக்ஷுஷி | யா ச மனஸி ஸந்ததா சிவாம் தாம் குரு மோத்க்ரமீ : || 2.12 ||

---

2.12. உன்னுடைய எந்த வடிவம் வாக்கில் நிலை பெற்றுள்ளதோ, எது காதில், எது கண்ணில், எது மனதில் (ஸங்கல்ப வடிவில்) தொடர்ந்துறைகிறதோ அதை மங்களமாகச் செய். (அமங்களமாக்கி) கிளம்பி விடாதே.

---

2.8. காணும் சக்தி உடைமையால் இந்திரியங்கள் ரிஷிகள் எனப்பட்டன. அதர்வா—பிராணன்.

2.9 இந்திரன்–இங்கே, சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மா; பரிபாலிப்பவன்-விஷ்ணு; அழிப்பவன்—ருத்ரன்.

2.10. 'ப்ராண தே! ப்ரஜா:' அல்லது 'ப்ராணதே ப்ரஜா :' உயிர் வாழ்கின்றார்கள்.

2.11. வ்ராத்ய :—ஸம்ஸ்காரமில்லாதவன் ; கர்மங்களை விட்டவன். இது நிந்தாஸ்துதி. 'மாதரிச்வ ! ந :' அல்லது மாதரிச்சவன :' | மாதரிச்வா என்றால் வாயு.

प्राणस्येदं वशे सर्वं त्रिदिवे यत्प्रतिष्ठितम् । मातेव पुत्रान् रक्षस्व, श्रीश्च प्रज्ञां च विधेहि न इति ॥ २.१३ ॥

## तृतीयः प्रश्नः

अथ हैनं कौसल्यश्चाश्वलायनः पप्रच्छ । भगवन् कुत एष प्राणो जायते. कथमाया-त्यस्मिन शरीर आत्मानं वा प्रविभज्य, कथं प्रातिष्ठते, केनोत्क्रमते; कथं बाह्य-मभिधत्ते, कथ-मध्यात्ममिति ॥ ३.१ ॥

तस्मै सहोवाचातिप्रश्नान् पृच्छसि ब्रह्मिष्ठोऽसीति तस्मात्तेऽहं ब्रवीमि ॥ ३.२ ॥

आत्मन एष प्राणो जायते । यथैषा पुरुषे छायैतस्मि-न्नेत-दाततं मनो-कृतेनाया-त्यस्मिञ्छरीरे ॥ ३.३ ॥

**2.13.** இதுவும், தேவலோகத்தில் இருக்கிறது எதுவோ அதுவும், எல்லாம் பிராணனுகிய உன்னுடைய வசமே. தன் மக்களைக் காக்குந் தாயைப்போல் எங்களைக் காத்தருள்வாய்; எங்களுக்கு நற்செல்வத்தையும் நல்லுறவையும் தந்தருள்வாய்!

## மூன்றுவது கேள்வி

**3.1.** அதன்பின் அச்வல புத்திரரான கௌஸல்யர் அவரைக் கேட்டதாவது:—ஐயனே! இந்தப் பிராணன் எங்ஙனம் உண்டாகிறது? இவ்வுடலினுள் எங்ஙனம் வருகிறது? தன்னை விபாகம் செய்துகொண்டு எங்ஙனம் நிலை பெறுகிறது? எதனுல் வெளிக் கிளம்புகிறது? வெளி (அதிபூத அதிதைவ) உலகை எங்ஙனம் தாங்குகிறது? அத்யாத்ம (உள் உலக)த்தை எங்ஙனம் (தாங்குகிறது)?

ப்ராணஸ்யேதம் வசே ஸர்வம், த்ரிதிவே யத் பிரதிஷ்டிதம் | மாதேவ புத்ரான் ரக்ஷஸ்வ, ஸ்ரீச்ச ப்ரஜ்ஞாஞ்ச விதேஹி ந இதி || 2.13 ||

## த்ருதீய : ப்ரச்ன :

அத ஹைனம் கௌஸல்யச்சாச்வலாயன : பப் ரச்ச | பகவன், குத ஏஷ ப்ராணோ ஜாயதே, கத மாயாத்-யஸ்மின் சரீர ஆத்மானம் வா ப்ரவிபஜ்ய, கதம் ப்ராதிஷ்டதே, கேனோத்க்ரமதே, கதம் பாஹ்ய-மபிதத்தே, கத-மத்யாத்ம-மிதி || 3.1 ||

தஸ்மை ஸஹோவா - சாதிப்ரச்னான் ப்ருச்சஸி ப்ரஹ்மிஷ்டோஸீதி தஸ்மாத் தே ஽ஹம் ப்ர வீமி || 3.2 ||

ஆத்மன ஏஷ ப்ராணோ ஜாயதே | யதைஷா புருஷே சாயை தஸ்மிந்-நேத-தாததம், மனோ—க்ருதே னயாத்-யஸ்மின் சரீரே || 3.3 ||

---

3.2. அவருக்கு இவர் கூறியதாவது :—சிக்கலான கேள்விகளைக் கேட்கிறீர் ; நீர் பிரம்ம நாட்டமுடையவர் களிற் சிறந்தவராயிருப்பதால் நான் (விடை) கூறு கிறேன்.

3.3. இந்தப் பிராணன் ஆத்மாவினிடத்திலி ருந்தே உண்டாகிறது. எங்ஙனம் இப்புருஷனிடம் நிழலோ (அங்ஙனம்) இந்த ஆத்மாவினிடம் இது (பிராணன்) பரவி நிற்கின்றது. மனத்தின் செய்கை யால் இவ்வுடலினுள் வருகிறது.

यथा संराडेवाधिकृतान् विनियुङ्क्ते । एतान् ग्रामा-नेतान् ग्रामा-नधितिष्ठस्वे-त्येवमेवैष प्राण इतरान् प्राणान् पृथक् पृथगेव सन्निधत्ते ॥ ३.४ ॥

पायूपस्थे ऽपानं, चक्षुः श्रोत्रे मुख-नासिकाभ्यां प्राणः स्वयं प्रातिष्ठते, मध्ये तु समानः । एष ह्येत-द्धुतमन्नं समं नयति, तस्मा-देताः सप्तार्चिषो भवन्ति ॥ ३.५ ॥

हृदि ह्येष आत्मा । अत्रैत-देकशतं नाडीनां तासां शतं शत-मेकैकस्यां द्वासप्तति-र्द्वासप्ततिः प्रतिशाखा नाडी-सहस्राणि भवन्त्यासु व्यान-श्चरति ॥ ३.६ ॥

3.4. ஒரு அரசன் அதிகாரிகளை இந்த இந்த கிராமங்களில இன்னார் இருங்கள் என்று நியமிப்பதுபோல, இந்த (முக்கியப்) பிராணன் மற்றப் பிராணன்களை தனித்தனியே ஏவுகின்றது.

3.5. பாயுவிலும் உபஸ்தத்திலும் அபானனை (பிராணன் நிறுத்துகிறது); கண்ணிலுங் காதிலும் வாயிலும் மூக்கிலும் பிராணன் தானே நிலைபெறுகிறது; இடையில் நாபிப் பிரதேசத்தில் உள்ளது ஸமானன்; (ஜாடராக்னியில்) ஹோமம் செய்யப்பட்ட உணவை (அங்கங்களில்) சமமாகக் கொண்டு செல்லுவது. அதினின்றே இவ்வேழு தீக்கொழுந்துகளும் எழுகின்றன.

3.6. இந்த ஜீவாத்மா இருதயத்தில் (உறைகிறான்). இங்கு நூற்றொரு நாடிகள் உள்ளன. அவற்றுள் ஒவ்வொன்றும் நூறு நூறாகப் பிரிந்து, ஒவ்வொரு கிளை நாடியும் மீண்டும் 72000 வேறு கண்ணி நாடிகளாகவும் பிரிகின்றன. இவைகளில் வியானன் செல்லுகிறது.

யதா ஸம்ராடேவாதிக்ருதான் விநியுங்க்தே |
ஏதான் க்ராமான், ஏதான் க்ராமான், அதிதிஷ்டஸ்வேதி, ஏவமேவைஷ ப்ராண இதரான் ப்ராணான் ப்ருதக் ப்ருதகேவ ஸந்நிதத்தே || 3.4 ||

பாயூபஸ்தேऽபானஞ், சக்ஷு : ச்ரோத்ரே முக-நாஸிகாப்யாம் ப்ராண : ஸ்வயம் ப்ராதிஷ்டதே, மத்யே து ஸமான : | ஏஷ-ஹ்யேதத்-துத மன்னம் ஸமம் நயதி, தஸ்மாதேதா: ஸப்தார்ச்சிஷோ பவந்தி || 3.5 ||

ஹ்ருதிஹ்-யேஷ ஆத்மா | அத்ரைத-தேகசதம் நாடீனாம் தாஸாம் சதம் சத-மேகைகஸ்யாம், த்வா ஸப்ததிர் த்வாஸப்ததி: ப்ரதிசாகா நாடீஸஹஸ்ராணி பவந்த்யாஸு வ்யானச்-சரதி || 3.6 ||

அதைகயோர்த்வ உதான : புண்யேன புண்யம் லோகம் நயதி, பாபேன பாபம், உபாப்யாமேவ மனுஷ்யலோகம் || 3.7 ||

---

3.3. ஆத்மாவின் நிழல் போன்றது பிராணன். பிராணனின் இயக்கத்தால் தோன்றும் வடிவங்களெல்லாம் திரையில் ஆடும் நிழற் படங்களுக் கொப்பானவைகளே.

பாயு—மலத்துவாரம்; உபஸ்தம்—கருத் துவாரம். ஏழுதீக் கொழுந்துகள்—கண்கள் இரண்டு, காதுகள் இரண்டு, நாசித் துவாரம் இரண்டு, வாய் ஒன்று.

3.7. இவற்றுள் ஒன்றின் வழியாக—ஒன்று என்றது 'ஸுஷும்ன' நாடி.

புண்ணியம் மிகுந்த உலகம்—சுவர்க்கம்

பாவ உலகம்—நரகமும், புழு, பூச்சி, மிருகம் முதலிய பிறவிகளும்,. புண்ணியமும் பாவமும் சமமாய்க் கலந்தது மனித உலகம்.

अथैकयोर्ध्व उदानः पुण्येन पुण्यं लोकं नयति, पापेन पापं, उभाभ्यामेव मनुष्यलोकम् ॥ ३.७ ॥

आदित्यो ह वै बाह्यः प्राण उदयत्येष ह्येनं चाक्षुषं प्राणमनुगृह्णानः। पृथिव्यां या देवता सैषा पुरुषस्यापान-मवष्टभ्यान्तरा यदाकाशः स समानो वायु-र्व्यानः ॥ ३.८ ॥

तेजो ह वाव उदान-स्तस्मा-दुपशान्ततेजाः। पुनर्भवमिन्द्रियै-र्मनसि संपद्यमानैः ॥ ३.९ ॥

यच्चित्तस्तेनैषप्राणमायाति, प्राणस्तेजसा युक्तः। सहात्मना यथा संकल्पितं लोकं नयति ॥ ३.१० ॥

3.7. இவற்றுள் ஒன்றின் வழியாக மேல் நோக்கிச் செல்லும் உதானன் புண்ணியத்தால் புண்ணிய உலகத்திற்கு அழைத்துச் செல்கிறது; பாவத்தால் பாவ உலகத்திற்கும், இரண்டாலும் மனித உலகத்திற்கும் (அழைத்துச் செல்கிறது).

3.8. சூரியனே வெயிலிலுள்ள பிராணன்; இது கண்ணிலுள்ள பிராணனை இயக்குவித்துக் கொண்டு உதிக்கிறது. பிருதிவியில் உள்ள தேவதை எதுவோ அதுவே சரீரத்தில் உறைபவனின் அபானனைப்பற்றி இயக்குவிப்பது. (சூரியனுக்கும் பூமிக்கும்) இடையிலுள்ள வெளியே ஸமானன் (சரீரத்தில் ஸமானனை இயக்குவிப்பது). (வெளியிலுள்ள) காற்றே வியானன் (சரீரத்தில் வியானனை இயக்குவிப்பது)

3.9. (வெளியிலுள்ள) ஒளியே உதானன் (சரீரத்தில் உதானனை இயக்குவிப்பது) ஆகையால் (உதான வடிவான) ஒளிமங்கியவர்கள் (இறந்தவர்கள்) மனதில் ஒடுங்கிய இந்திரிய சக்திகளைக் கொண்டு மறுபிறப்பை (அடைகிறார்கள்)

ஆதித்யோ ஹ வை பாஹ்ய: ப்ராண உதயத் யேஷ-ஹ்யேனஞ் சாக்ஷுஷம் ப்ராண - மனுக்ருஹ்ணந: | ப்ருதிவ்யாம் யா தேவதா, ஸைஷா புருஷஸ் யாபான-மவஷ்டப்ய, அந்தரா யதாகாச: ஸ ஸமானோ வாயுர் வ்யான: || 3.8 ||

தேஜோ ஹ வாவ உதானஸ்-தஸ்மா-துபசாந்த தேஜா: | புனர்பவ-மிந்த்ரியைர் - மனஸி ஸம்பத்யமானை: || 3.9 ||

யச்சித்தஸ் - தேனைஷ ப்ராண - மாயாதி, ப்ராணஸ்-தேஜஸா யுக்த: | ஸஹாத்மனா யதா ஸங்கல்பிதம் லோகம் நயதி || 3.10 ||

---

3.10. (மரண காலத்தில்) இவன் என்ன எண்ணம் உடையவனோ அத்துடன் முக்கியப் பிராணனிடம் லயமடைகிறான். உதானனுடன் கூடிய பிராணன ஜீவனுடன் (கிளம்பி) ஸங்கல்பிக்கப்பட்ட உலகுக்கு (ஜீவனை) அழைத்துச் செல்கிறது.

---

3.8. ஸமஷ்டி வடிவமான உலகத்திலுள்ள பிராணனுக்கும் வியஷ்டி வடிவான உடலிலுள்ள பிராணனுக்கும் உறவு காணப்படுகின்றது.

3.9. ஒ. (அத ஏவ ஸர்வாண்யனு) பி.சூ 4.2.2.

மனதில் ஒடுங்கிய இந்திரிய சக்திகளைக் கொண்டு—ஒ. எப்போது இச்சரீரத்தையாளும் ஜீவன் சரீரத்தை யடைகிறானோ, மேலும் எப்போது விட்டுக் கிளம்புகிறானோ அப்போது காற்றானது உறைவிடத்தினின்று வாசனைகளைப் போல இவற்றை (மனதுடன் கூடிய ஆறு இந்திரியங்களையும்) கவர்ந்துகொண்டு செல்லுகிறான். கீ. 15.8. ஜீவனுக்கு ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம் காரண சரீரம் என உடல் மூன்று. மரணத்தில் ஸ்தூல சரீரத்தை மட்டும் விட்டுச் செல்கிறான்).

य एवं विद्वान् प्राणं वेद। न हास्य प्रजा हीयतेऽमृतो भवति तदेष श्लोकः ॥ ३.११ ॥

उत्पत्ति-मायतिं स्थानं, विभुत्वं चैव पञ्चधा। अध्यात्मं चैव प्राणस्य, विज्ञायामृतमश्नुते, विज्ञायामृतमश्नुत इति ॥ ३.१२ ॥

## चतुर्थः प्रश्नः

अथ हैनं सौर्यायणी गार्ग्यः पप्रच्छ। भगव-न्नेतस्मिन् पुरुषे कानि स्वपन्ति, कान्यस्मिन् जाग्रति, कतर एष देवः स्वप्नान् पश्यति, कस्यैतत्सुखं भवति, कस्मिन्नु सर्वे संप्रतिष्ठिता भवन्तीति ॥ ४.१ ॥

तस्मै स होवाच। यथा गार्ग्य मरीचयोऽर्कस्यास्तं गच्छतः, सर्वा एतस्मिंस्तेजोमण्डल एकीभवन्ति। ताः पुनः पुन-रुदयतः प्रचरन्त्येवं ह वै तत्सर्वं परे देवे मनस्येकी-भवति तेन तर्ह्येष पुरुषो न शृणोति न पश्यति न जिघ्रति न रसयते न स्पृशते नाभिवदते नादत्ते नानन्दयते न विसृजते नेयायते स्वपिती-त्याचक्षते ॥ ४.२ ॥

*3.11.* எந்த அறிவாளி இங்ஙனம் பிராணனை அறிகிருனே அவனுடைய பிரஜைகள் அழிவுறமாட்டா (ஸந்ததி அறுபடாது); அவன் சாகாத்தன்மையடைவான். அதைப்பற்றிப் பின்வரும் சுலோகம் உளது.

*3.12.* பிராணனுடைய உத்பத்தியையும், வரவையும், இருப்பிடத்தையும், ஆட்சியையும் ஐந்து பிரிவையும் அத்தியாத்ம நிலையையும் அறிந்து (ஒருவன்) சாகா நிலை யெய்துவான், அறிந்து சாகாநிலை யெய்துவான் என்றவாறு.

---

3.10. ஓ் கடைசியில் எந்தெந்த நினைவை நினைத்துக் கொண்டு உடலை விட்டாலும் எப்போதும் அந்நினைவையே ...த்ததால் அததையே அடைகிறான்.' கீ. 8.6. பி. கு. 4.2.5.






ய ஏவம் வித்வான் ப்ராணம் வேத | ந ஹாஸ்ய ப்ரஜா ஹீயதே ऽம்ருதோ பவதி ததேஷ ச்லோக : || 3.11 ||

உத்பத்தி-மாயதிம் ஸ்தானம் விபுத்வஞ்சைவ பஞ்சதா | அத்யாத்மஞ் சைவ ப்ராணஸ்ய விஜ்ஞா யாம்ருத – மச்னுதே, விஜ்ஞாயாம்ருத - மச்னுத இதி || 3-12 ||

## சதுர்த்த: ப்ரச்ன :

அத ஹைநம் ஸௌர்யாயணீ கார்க்ய : பப்ரச்ச | பகவந் நேதஸ்மின் புருஷே கானி ஸ்வபந்தி, கான்யஸ்மின் ஜாக்ரதி, கதர ஏஷ தேவ: ஸ்வப்னான் பச்யதி, கஸ்யைதத் ஸுகம் பவதி, கஸ்மின்னு ஸர்வே ஸம்ப்ரதிஷ்டிதா பவந்தீதி || 4.1 ||

தஸ்மை ஸஹோவாச | யதா கார்க்ய மரீசயோ ऽர்க்கஸ்யாஸ்தங் கச்சத:, ஸர்வா ஏதஸ்மின் ஸ்-தேஜோமண்டல ஏகீபவந்தி | தா:புன:புன-ருதயத: ப்ரசரந்த்-யேவம் ஹை வை தத் ஸர்வம் பரே தேவே மனஸ்யேகீ-பவதி தேன தர்ஹ்யேஷ

---

## நான்காவது கேள்வி

4.1. பின் அவரை கர்க்கவம்சத்தவரான ஸௌர்யாயணி கேட்டதாவது:—ஐயனே ! இந்தப் புருஷனிடத்தில் எவை தூங்குகின்றன ? எவை இவனிடம் விழித்திருக்கின்றன ? இவற்றுள் எந்த தெய்வம் ஸ்வப்னங்களைக் காண்பது ? இன்பம் எவருடையது ? எதனிடம் எல்லாம் நிலைபெற்று நிற்கின்றன ?

प्राणाग्नय एवैतस्मिन् पुरे जाग्रति । गार्हपत्यो ह वा एषो ऽपानो व्यानो ऽन्वाहार्यपचनो, यद्गार्हपत्यात् प्रणीयते, प्रणयनाद्आहवनीयः प्राणः ॥ ४.३ ॥

यदुच्छ्वास-निःश्वासावेतावाहुती समं नयतीति स समानः । मनो ह वाव यजमानः, इष्टफलमेवोदानः, स एनं यजमान-महरह-र्ब्रह्म गमयति ॥ ४.४ ॥

4.2. அவர் இவருக்குக் கூறியதாவது :—கார்க்கியரே ! அஸ்தமிக்கும் சூரியனுடைய கிரணங்கள் எங்ஙனம் ஒன்று சேர்ந்து சூரியமண்டத்தில் ஒடுங்குகின்றனவோ, மறுபடி உதிக்கும் சூரியனுடைய கிரணங்கள் எங்ஙனம் வெளிப்பரவுகின்றனவோ அங்ஙனம் (ஸ்வப்னத்தில் இந்திரியங்கள்) எல்லாம் மனதாகிற பரதேவதையினிடம் ஒடுங்குகின்றன. அதனால் அப்போது இந்தப் புருஷன் கேட்பதில்லை, பார்ப்பதில்லை, முகர்வதில்லை, ருசிப்பதில்லை, பரிசிப்பதில்லை. பேசுவதில்லை, ஏற்பதில்லை, மகிழ்வதில்லை, விடுவதில்லை, நடப்பதில்லை ; அவன் தூங்குகிறான் என்பர்,

4.3. இந்த (சரீரமாகிற) புரத்தில் பிராணாக்கினிகளே விழித்திருக்கின்றன ; அபானனே கார்ஹபத்யாக்கினி ; வியானனே அன்வாஹார்யபசனம் எனும் தக்ஷிணாக்கினி ; ப்ராணனே ஆஹவனீயாக்கினி,—கார்ஹபத்ய (அபான) அக்கினியிலிருந்து எடுக்கப்படுவதால்.

---

3.2. பிராணனுடைய உற்பத்தியும் வரவும் 3.3ல் கூறப்பட்டது ; இருப்பிடம் 3.8 ; ஆட்சி 2.5—13; ஐந்து பிரிவு 2.3; அத்தியாத்மநிலை (ஒவ்வொரு உடலிலும் உள்ளநிலை) 3.4—6.

புருஷோ ந ச்ருணோதி ந பச்யதி ந ஜிக்ரதி ந ரஸயதே நஸ்ப்ருசதே நாபிவததே நாதத்தே நானந்தயதே நவிஸ்ருஜதே நேயாயதே ஸ்வபிதீத்யாசக்ஷதே || 4.2 ||

ப்ராணாக்னய ஏவைதஸ்மின் புரே ஜாக்ரதி । கார்ஹபத்யோ ஹ வா ஏஷோऽபானோ, வ்யானோऽன்வாஹார்யபசனோ, யத்கார்ஹபத்யாத் ப்ரணீயதே ப்ரணயனா—தாஹவநீய: ப்ராண: || 4.3 ||

யதுச்ச்வாஸ - நி:ச்வாஸா - வேதா – வாஹுதீ ஸமம் நயதீதி ஸ ஸமான: | மனோ ஹ வாவ யஜமான: இஷ்டபல-மேவோதான:, ஸ ஏநம் யஜமானம் அஹரஹர்—ப்ரஹ்ம கமயதி || 4.4 ||

4.4. (பிராணனை அபானனில் ஹோமம் செய்யும்) உள்ளே செல்லும் மூச்சு (அபானனைப் பிராணனில் ஹோமம் செய்யும்) வெளிச் செல்லும் மூச்சு இவ்விரு ஆஹுதிகளையும் ஸமமாய் நடத்துவிப்பதால் (அதைச் செய்யும் வாயு) ஸமானன் எனப்படும். மனமே இந்த (ஹோமம் செய்யும்) யஜமானன். இஷ்டமான பலனை யிருப்பது உதானன்; (ஏனெனில்) உதானனே இந்த (மனதாகிற) யஜமானனை நாள்தோறும் (ஸ்வர்க்க ப்ராப்தி போன்ற ஸுஷுப்தி நிலையில்) பிரம்மத்தினிடம் சேர்ப்பிக்கிறான்.

4.3. அக்னிஹோத்திர சாலையில் மூன்று அக்கினிகள் வளர்க்கப்படும்.

(i) கார்ஹபத்யம் என்பது யஜமானனுக்குப்பின் வட்ட வடிவமான குண்டலத்தில் அமைவது; இதிலிருந்தே மற்ற அக்கினிகள் எடுக்கப்படும். (ii) அன்வாஹார்யபசனம் எனும் தக்ஷிணாக்னி யஜமானனுக்குத் தென்புறம் (வலது பக்கத்தில்) அரைவட்ட வடிவமான குண்டத்தில் உள்ளது.

अत्रैष देवः स्वप्ने महिमान-मनुभवति । यद्दृष्टं दृष्ट-मनु-पश्यति, श्रुतं श्रुत-मेवार्थ-मनुशृणोति, देश-दिगन्तरैश्च प्रत्यनुभूतं पुनः पुनः प्रत्यनुभवति, दृष्टं चादृष्टं च, श्रुतं चाश्रुतं च, अनुभूतं चाननुभूतं च, सच्चासच्च, सर्वं पश्यति, सर्वः पश्यति ॥ ४.५ ॥

स यदा तेजसाभिभूतो भवत्यत्रैष देवः स्वाप्नान्न पश्यति । अथ तदैतस्मिञ्छरीरे एतत् सुखं भवति ॥ ४.६ ॥

स यथा सोम्य वयांसि वासो वृक्षं संप्रतिष्ठन्ते, एवं ह वै तत्सर्वं पर आत्मनि संप्रतिष्ठते ॥ ४.७ ॥

पृथिवी च पृथिवीमात्रा चापश्चापोमात्रा च तेजश्च तेजोमात्रा च वायुश्च वायुमात्रा चाकाशश्चाकाशमात्रा च चक्षुश्च द्रष्टव्यं च श्रोत्रं च श्रोतव्यं च घ्राणं च घ्रातव्यं च रसश्च रसयितव्यं च त्वक्च स्पर्शयितव्यं

4.5. இந்த (மனதாகிற) தேவன் ஸ்வப்னத்தில் தன் பெருமையை அனுபவிக்கிறான். எது எது (ஏற்கெனவே ஜாக்கிரத்தில்) பார்க்கப்பட்டதோ அதையெல்லாம் (மீண்டும்) பார்க்கிறான்; எது எது கேட்கப்பட்டதோ அதையெல்லாம் கேட்கிறான்; பல இடங்களிலும் பல திக்குகளிலும் எது எது அனுபவிக்கப்பட்டதோ அதையெல்லாம் மீண்டும் மீண்டும் அனுப

இதில் பித்ருக்களும் க்ஷுத்ர தேவதைகளும் ஆராதிக்கப்படுவர். (iii) ஆஹவனீயாக்கினி என்பது யஜமானனுக்குமுன் சதுரவடிவமான குண்டத்தில் உள்ளது; இதில் தேவர்கள் ஆராதிக்கப்படுவர்.

அபானன் பின் பாகத்தில் எப்பொழுதுமிருப்பதால் கார்ஹபத்யம் எனப்பட்டது. அதிலிருந்து பிராணன் பிரிந்தெழுதலால் பிராணன் ஆஹவனீயம் எனப்பட்டது. வியானன் இருதயத்துக்கு வலது பக்க நாடியில் சஞ்சரிப்பதால் தக்ஷிணாக்னி எனப்பட்டது.

அத்ரைஷ தேவ : ஸ்வப்னே மஹிமான-மனுபவதி | யத் த்ருஷ்டந் த்ருஷ்ட-மனுபச்யதி, ச்ருதம் ச்ருத - மேவார்த - மனு ச்ருணோதி, தேச - திகந்தரைச்ச ப்ரத்யனுபூதம் புன : புன : ப்ரத்யனுபவதி, த்ருஷ்டஞ்சாத்ருஷ்டஞ்ச, ச்ருதஞ்சாச்ருதஞ்ச, அனுபூதஞ்சானனுபூதஞ்ச, ஸச்சாஸச்ச, ஸர்வம் பச்யதி, ஸர்வ : பச்யதி || 4.5 ||

ஸ யதா தேஜஸாபிபூதோ பவத் - யத்ரைஷ தேவ : ஸ்வப்னாந் ந பச்யதி | அத ததைதஸ்மின் ச்ரீரே ஏதத் ஸுகம் பவதி || 4.6 ||

ஸ யதா ஸோம்ய வயாம்ஸி வாஸோ வ்ருக்ஷம் ஸம்ப்ரதிஷ்டந்தே, ஏவம் ஹ வை தத் ஸர்வம் பர ஆத்மனி ஸம்ப்ரதிஷ்டதே || 4.7 ||

ப்ருதிவீ ச ப்ருதிவீ மாத்ராசாபச்சாபோ-மாத்ராச, தேஜச்ச தேஜோமாத்ரா ச, வாயுச்ச வாயு

---

விக்கிறான். கண்டதும் காணாததும், கேட்டதும் கேளாததும், அனுபவித்ததும் அனுபவியாததும், உள்ளதும் இல்லதும் ஆன அனைத்தும் (தானே) ஆகி, அனைத்தையும் காண்கிறான்.

4.6. அவன் (மனதாகிற தேவன்) எப்போது (சித்தத்தின்) ஒளியால் ஆக்கிரமிக்கப்படுகின்றானோ அப்போது இந்த தேவன் ஸ்வப்னங்களைக் காண்பதில்லை. அப்போது சரீரத்தில் இதுவே (இச்சுஷுப்தி நிலையே) சுகமாகிறது.

4.7. சித்தம் அழகியவனே ! பறவைகள் எவ்வாறு தாம் வசிக்கும் மரத்தைச் சாருகின்றனவோ, அவ்வாறே (சக்திகள்) எல்லாம் கூடஸ்தனான ஆத்மாவினிடம் அடங்குகின்றன.

च वाक्च वक्तव्यं च हस्तौ चादातव्यं चोपस्थश्चानन्दयितव्यं च पायुश्च विसर्जयितव्यं च पादौ च गन्तव्यं च मनश्च मन्तव्यं च बुद्धिश्च बोद्धव्यं चाहंकारश्चाहंकर्तव्यं च चित्तं च चेतयितव्यं च तेजश्च विद्योतयितव्यं च प्राणश्च विधारयितव्यं च ॥ ४.८ ॥

एष हि द्रष्टा स्प्रष्टा श्रोता घ्राता रसयिता मन्ता बोद्धा कर्ता विज्ञानात्मा पुरुषः, स परेऽक्षरे आत्मनि संप्रतिष्ठते ॥ ४.९ ॥

परमेवाक्षरं प्रतिपद्यते स यो ह वै तदच्छाय-मशरीर-मलोहितं शुभ्रमक्षरं वेदयते यस्तु सोम्य। स सर्वज्ञः सर्वो भवति तदेष: श्लोक: ॥ ४.१० ॥

4.8. பிருதிவியும் பிருதிவி தன்மாத்திரையும் அப்புவும் அபபு தன்மாத்திரையும், தேயுவும் தேயு தன்மாத்திரையும், வாயுவும் வாயு தன்மாத்திரையும், ஆகாசமும் ஆகாச தன்மாத்திரயையும், கண்ணும் காணப்படுவதும், காதும் கேட்கப்படுவதும், மூக்கும் முகரப்படுவதும், ருசியும் ருசிக்கப்படுவதும், தோலும் பரிசிக்கப்படுவதும், வாக்கும் பேசப்படுவதும், கைகளும் எடுக்கப்படுவதும், உபஸ்தமும் ஆனந்தப்படுவதும், பாயுவும் விடப்படுவதும், கால்களும் நடக்கப்படுவதும், மனதும் நினைக்கப்படுவதும் புத்தியும்அறியப்படுவதும், அஹங்காரமும் அஹங்காரப் படுவதும், சித்தமும் சிந்திக்கப்படுவதும் தேஜகம் அதனுல் விளக்கப்படுவதும் (எல்லாம் வேருகவுள்ள ஆத்மாவிற்காகவே).

4.9. இவனே உண்மையில் பார்ப்பவனும், தொடுபவனும், கேட்பவனும், முகர்பவனும், ருசிப்பவனும், நினைப்பவனும், அறிபவனும், செய்பவனும் ஆகிய விக்

மாத்ரா சாகாசச் - சாகாச - மாத்ரா ச, சக்ஷுச்ச
தரஷ்டவ்யஞ்ச ச்ரோத்ரஞ்ச ச்ரோதவ்யஞ்ச க்ரா
ணஞ்ச க்ராதவ்யஞ்ச ரஸச்ச ரஸயிதவ்யஞ்ச த்வக்
ச ஸ்பர்சயிதவ்யஞ்ச வாக்ச வக்தவ்யஞ்ச ஹஸ்தௌ
சாதாதவ்யஞ் சோபஸ்தச்-சானந்தயிதவ்யஞ்ச,
பாயுச்ச விஸர்ஜயிதவ்யஞ்ச பாதௌ ச கந்தவ்யஞ்ச
மனச்ச மந்தவ்யஞ்ச புத்திச்ச போத்தவ்யஞ் சாஹங்
காரச் - சாஹங்கர்த்தவ்யஞ்ச சித்தஞ்ச சேதயி
தவ்யஞ்ச தேஜச்ச வித்யோதயிதவ்யஞ்ச ப்ரா
ணச்ச விதாரயிதவ்யஞ்ச || 4.8 ||

ஏஷ ஹி த்ரஷ்டா, ஸ்ப்ரஷ்டா, ச்ரோதா, க்ராதா, ரஸயிதா, மந்தா, போத்தா, கர்த்தா விஜ்ஞாத்மா புருஷ:, ஸ பரே ऽக்ஷரே ஆத்மனி ஸம்ப்ரதிஷ்டதே || 4.9 ||

பரமேவாக்ஷரம் ப்ரதிபத்யதே ஸ யோ ஹ வை ததச்சாய-மசரீர-மலோஹிதம் சுப்ர - மக்ஷரம் வேதயதே யஸ்து ஸோம்ய ! ஸ ஸர்வஜ்ஞ: ஸர்வோ பவதி தத்தேஷ: ச்லோக : || 4.10 |

---

ஞானத்மாவும் (சரீரமாகிய புரத்தில் உறையும்) புருஷனும். இவன் அழிவில்லாத பரமாத்மாவிடம் நிலைபெறுகிறான்.

---

4.9. ஒ. (கல்பயத்-யாத்மனாத்மானம் ஆத்மா தேவ: ஸ்வமாயயா | ஸ ஏவ புத்த்யதே பேதா-னிதி வேதாந்த-நிச்சய: ||) ஸ்வயம்பிரகாசமான ஆத்மா தன்னுடைய மாயையால் தன்னைத் தானே கற்பிக்கிறான், அவனே சிருஷ்டி வேற்றுமைகளை அறிகிறான் என்பதுதான் வேதாந்த நிச்சயம். —மா.கா. 2.12

विज्ञानात्मा सह देवैश्च सर्वैः प्राणा भूतानि संप्रतिष्ठन्ति यत्र । तदक्षरं वेदयते यस्तु सोम्य स सर्वज्ञः सर्वमेवाविवेशेति ॥ ४.११ ॥

## पञ्चमः प्रश्नः

अथ हैनं शैब्यः सत्यकामः पप्रच्छ । स यो ह वै तद्भगवन् मनुष्येषु प्रायणान्त-मोंकार-मभिध्यायीत । कतमं वाव स तेन लोकं जयतीति ॥ ५.१ ॥

तस्मै स होवाच । एतद्वै सत्यकाम, परं चापरं च ब्रह्म यदोंकार-स्तस्माद्विद्वा-नेतेनैवायतने-नैकतर-मन्वेति ॥ ५.२ ॥

*4.10.* சித்தம் அழகியோனே! (அறியாமையின்) நிழலற்றதும், உடலற்றதும் (ரஜஸ் முதலிய) குணங்களற்றதும், பரிசுத்தமானதும், அழிவற்றதுமான அப்பொருளை எவன் அறிகிருனோ அவன் அந்த அழியாப் பொருளையே அடைந்து விடுகிருன். அவன் எல்லாம் அறிந்தவனுகவும் எல்லாமாகவுமே ஆய்விடுகிருன். அதைப்பற்றிப் பின்வரும் சுலோகம் உளது.

*4.11.* சித்தம் அழகியவனே! (புத்தி குகையில் உறையும்) விஜ்ஞாத்மா பிரகாசமான சக்திகளுடனும் புலன்களுடனும் எதனிடம் நிலைபெறுகின்றதோ அந்த அழியாப் பொருளை எவன் அறிகின்ருனோ அவன் எல்லாம் அறிந்தவனும், எங்கும் நிறைபவனும் ஆகின்ருன்.

விஜ்ஞானத்மா ஸஹ தேவைச்ச ஸர்வை:, ப்ராணா பூதானி ஸம்ப்ரதிஷ்டந்தி யத்ர । ததக்ஷரம் வேதயதே யஸ்து ஸோம்ய, ஸ ஸர்வஜ்ஞ: ஸர்வ மேவாவிவேசேதி || 4.11 ||

## பஞ்சம: ப்ரச்ன:

அத ஹைனம் சைப்ய: ஸத்யகாம: பப்ரச்ச । ஸ யோ ஹ வை தத்பகவன் மனுஷ்யேஷு ப்ராய ணாந்த-மோங்கார-மபித்யாயீத । கதமம் வாவ ஸ தேன லோகஞ் ஜயதீதி || 5.1 ||

தஸ்மை ஸ ஹோவாச । ஏதத் வை ஸத்யகாம பரஞ்சாபரஞ்ச ப்ரஹ்ம யதோங்காரஸ்-தஸ்மாத் வித்வா - நேதேனை - வாயதநே - நைகதர - மன் வேதி || 5.2 ||

---

## ஐந்தாவது கேள்வி

5.1. பின் அவரைச் சிபிபுத்திரரான ஸத்திய காமர் கேட்டதாவது: "ஐயனே! மனிதர்களுள் எவனொரு வன் ஆயுள்முடிய ஓங்காரத்தை உபாசிக்கிறானோ அவன் அதனால் எந்த உலகத்தை (நிலையை) எய்து கிறான்?"

5.2. இவருக்கு அவர் கூறியதாவது:—ஸத்திய காமா! எது ஓங்காரம் எனப்படுவதோ அதுவே பரப் பிரம்மமும், அபரப் பிரம்மமும். அதனால் அதையுணர்ந்த வன் அவ்வாற்றால் இரண்டில் ஒன்றை அடைகிறான்.

---

5.2. ஒ. உருப்புடைத்த அனைத்தும் க்ஷரம் (அபரம்); கூடஸ்தன் அக்ஷரம் (பரம்).—கீ. 15.16.

स यद्येकमात्र-मभिध्यायीत स तेनैव संवेदित-स्तूर्णमेव जगत्या-मभिसंपद्यते । तमृचा मनुष्यलोक-मुपनयन्ते स तत्र तपसा ब्रह्मचर्येण श्रद्धया संपन्नो महिमान-मनुभवति ॥ ५.३ ॥

अथ यदि द्विमात्रेण मनसि संपद्यते सोऽन्तरिक्षं यजुर्भिरुन्नीयते सोमलोकम् । स सोमलोके विभूतिमनुभूय पुनरावर्तते ॥ ५.४ ॥

यः पुनरेतं त्रिमात्रेणैवोमित्येतेनैवाक्षरेण परं पुरुष-मभिध्यायीत स तेजसि सूर्ये संपन्नः । यथा पादोदरस्त्वचा विनिर्मुच्यत एवं ह वै स पाप्मना विनिर्मुक्तः, स सामभि-रुन्नीयते ब्रह्मलोकं स एतस्मा-ज्जीव-घनात् परात्परं पुरिशयं पुरुष-मीक्षते तदेतौ श्लोकौ भवतः ॥ ५.५ ॥

5.3. அவன் ஒரு மாத்திரையை தியானித்தாலும் அதனால், அறிவு விளக்கம் பெற்று (மறு பிறவியில் விரைவில் பூவுலகையடைகிறான். ருக்வேத மந்திர தேவதைகள் அவனை (அங்கு) மனிதவுலகிற்கு அழைத்துச் செல்லுகின்றன. அவன் அங்கு தவத்துடனும் பிரம்ம சரியத்துடனும் சிரத்தையுடனும் கூடியவனாய் உயர் நிலை எய்துகிறான்.

5.4. மேலும் இரண்டு மாத்திரையால் (தியானித்தால் யஜுர்வேத வடிவான ஸோம தேவதையுடன்) மனதில் ஒன்றுபடுகிறான். அவன் (இறந்தபின்) அந்தரிக்ஷ வுலகையடைகிறான்; யஜுர்வேத மந்திர தேவதைகளால் ஸோம லோகத்திற்கு அழைத்துச் செல்லப்படுகிறான். அவன் ஸோம லோகத்தில் பெருமையையனுபவித்து மீண்டும் (மனிதவுலகிற்கு) திரும்பி வருகிறான்.

ஸ யத்யேக-மாத்ர—மபித்யாயீத ஸ தேனைவ ஸம் வேதிதஸ்—தூர்ணமேவ ஜகத்யா—மபிஸம்பத்யதே தம்ருசோ மனுஷ்யலோக-முபநயந்தே ஸ தத்ர தபஸா ப்ரஹ்மசர்யேண ச்ரத்தயா ஸம்பன்னோ மஹிமான—மனுபவதி || 5.3 ||

அத யதி த்விமாத்ரேண மனஸி ஸம்பத்யதே ஸோ ऽந்தரிக்ஷம் யஜுர்பிருன்னீயதே ஸோம-லோகம் | ஸ ஸோமலோகே விபூதிமனுபூய புனராவர்த்ததே || 5 4. ||

ய: புனரேதம் த்ரிமாத்ரேண — வோமித்யேதேனைவாக்ஷரேண பரம் புருஷ - மபித்யாயீத ஸ தேஜஸி ஸூர்யே ஸம்பன்ன: | யதா பாதோதரஸ்-த்வசா விநிர்முச்யத, ஏவம் ஹ வை ஸ பாப்மனா விநிர்முக்த:, ஸ் ஸாமபி-ருன்னீயதே ப்ரஹ்ம லோகம், ஸ ஏதஸ்மாஜ்-ஜீவகனாத்-பராத்பரம் புரிசயம் புருஷ-மீக்ஷதே ததேதௌ ச்லோகௌ பவத: || 5.5. ||

---

5.5. மேலும் எவன் பரம புருஷனை மூன்று மாத்திரைகளுடன் கூடிய 'ஓம்' என்ற அக்ஷரத்தால் தியானிக்கிறானோ அவன் சூரிய ஒளியில் ஒன்றுபடுகிறான். (இறந்தபின் இவ்வுலகிற்குத் திரும்பி வருவதில்லை; கிரம முக்தி எய்துகிறான்). எங்ஙனம் பாம்பு தன் சட்டையினின்று விடுபடுகிறதோ அங்ஙனம் அவன் பாவத்தினின்று விடுபட்டவனாகிறான். ஸாமங்களால் அவன் பிரம்ம லோகத்துக்கு அழைத்துச் செல்லப்படு

तिस्रो मात्रा मृत्युमत्य: प्रयुक्ता अन्योन्यसक्ता अनविप्रयुक्ता: । क्रियासु बाह्याभ्यन्तर-मध्यमासु सम्यक् प्रयुक्तासु न कंपते ज्ञः ॥ ५.६ ॥

ऋग्भिरेतं, यजुर्भि-रन्तरिक्षं, स सामभि-र्यत्तत्कवयो वेदयन्ते । तमोंकारेणैवायतनेनान्वेति विद्वान् यत्तच्छान्त-मजर-ममृत-मभयं परं चेति ॥ ५.७ ॥

கிறான். ஸமஷ்டி ஜீவவடிவினனான இந்த இரணிய கர்ப்பனுக்கும் அப்பாலுள்ள பரமபுருஷனை உடல்களனைத்திலும் உறைபவனைக் காண்கிறான்.

5.6. (ஓங்காரத்தின்) மூன்று மாத்திரைகளும் (தனித்தனியே) உபாசிக்கப்பட்டால் அவை அழியும் பலனைத் தருவன. மூன்றும் சேர்த்து உபாசிக்கப்பட்டால் அவை அங்ஙனமாகா. வெளி வியாபாரங்களிலும் உள் வியாபாரங்களிலும் இடை வியாபாரங்களிலும் அவை முறைப்படி பொருத்தப்பட்டால், ஞானியானவன் அசைவுறான்.

5.7. ருக்வேதத்தால் இவ்வுலகும், யஜுர்வேதத்தால் அந்தரிக்ஷமும், ஸாமவேதத்தால் மஹான்களே உணரும் பிரம்மலோகமும் (எய்தப்படும்). அதை (எல்லாவற்றையும்) ஓங்கார உபாஸனையாலேயே ஞானி அடையக்கூடும். (அதனாலேயே) மூப்பு, மரணம், பயம் அற்றதும் சாந்தம் நிறைந்ததுமான பரமபதம் எதுவோ அதையும் அடையக்கூடும்.

5.5. ஒ. பி. சூ. 1.3.13.

அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்
செற்றது மன்னுறில் அற்றிறை பற்றே—நம்மாழ்வார்.

*திஸ்ரோ மாத்ரா ம்ருத்யுமத்ய : ப்ரயுக்தா அன்யோன்ய - ஸக்தா அநவிப்ரயுக்தா: | க்ரியாஸு பாஹ்யாப்யந்தர-மத்யமாஸு ஸம்யக்-ப்ரயுக்தாஸு ந கம்பதே ஜ்ஞ : || 5.6. ||*

*ருக்பி-ரேதம், யஜுர்பி-ரந்தரிக்ஷம், ஸ ஸாமபிர் யத்-தத்-கவயோ வேதயந்தே | த-மோங்காரேணை-வாயதனேனான்வேதி வித்வான், யத்தச் - சாந்த-மஜரம் அம்ருத-மபயம் பரஞ்சேதி || 5.7. ||*

---

5.6. **வெளி வியாபாரங்களிலும், உள் வியாபாரங்களிலும், இடை வியாபாரங்களிலும்** — *ஜாக்கிரத்திலும், ஸ்வப்னத்திலும், ஸுஷுப்தியிலும்.*

*அ, உ, ம என்பன மூன்று மாத்திரைகள். 'அ' ஜாக்கிர (விழிப்பு) நிலையையும் ஸ்தூலதேகத்தையும், 'உ' ஸ்வப்ன நிலையையும் ஸூக்ஷ்ம தேகத்தையும், 'ம' ஸுஷுப்தி நிலையையும் காரண தேகத்தையும் குறிப்பன. இந்நிலைகள் தனித்தனியாகக் காணப்பெறினும், கடலில் நதிகள் கலப்பதுபோல் ஆன்மாவிடம் ஒன்றுபடுகின்றன என்று காண்பதே அறிவு. அப்படியறிந்த ஞானியை எதுவும் அசைக்க முடியாது.*

**மூன்றும் சேர்த்து உபாசிக்கப்பட்டால்**— *பிரணவத்தின் மூன்று மாத்திரைகளையும் சேர்த்து உபாசித்தால் முப்புரங்களையும் எரித்து முக்தி எய்தலாம். திரிபுரத்தைப்பற்றிப் புராணக் கதையிலுள்ள உட்கருத்தைச் சிந்தித்து உணர வேண்டும். மூன்று அசுரர்கள், இரும்பு, வெள்ளி, பொன்னாலான மூன்று பட்டணங்களில் வாழ்ந்தனர். அப்பட்டணங்கள் அவர்களிச்சைப்படி ஆகாயத்தில் பறந்து செல்லும். மூன்றும் ஆயிரம் வருஷத்துக்கொரு முறை ஒன்று சேரும். அப்போது ஒரே பாணத்தால் அடித்தால்தான் முப்புரங்களை ஜயிக்கலாம். பட்டணங்களில் அசுரர்கள் தனித் தனியாய்ப் பரந்து பல ஊர்களின்மேல் அப்படியே இறங்கி அவற்றைப் பாழாக்கி வந்தனர். முப்புரங்களும் ஒன்றாய்ச் சேர்ந்தபோது பரமசிவன் ஒரு பாணத்தால் எரித்தார்.*

**வளைந்தது வில்லு விளைந்தது பூசல்,**
**உளைந்தன முப்புரமுந்தீபற ஒருங்குடன் வெந்தவாறுந் தீபற**—*மாணிக்கவாசகர்.*

## षष्ठः प्रश्नः

अथ हैनं सुकेशा भारद्वाजः पप्रच्छ । भगवन् हिरण्यनाभः कौसल्यो राजपुत्रो, मामुपेत्यैतं प्रश्न-मपृच्छत । षोडशकलं भरद्वाज पुरुषं वेत्थ । तमहं कुमार-मब्रुवन्नाहमिमं वेद यद्यहमिम-मवेदिषं कथं ते नावक्ष्यमिति । समूलो वा एष परिशुष्यति योऽनृत-मभिवदति तस्मान्नार्हाम्यनृतं वक्तुं । स तूष्णीं रथमारुह्य प्रवव्राज । तं त्वा पृच्छामि क्वासौ पुरुष इति ॥ ६.१ ॥

### ஆருவது கேள்வி

6.1. பின் அவரை பாரத்வாஜவம்சத்தவரான ஸுகேசர் கேட்டதாவது:- "ஐயனே ! கோசலதேசத்து அரசகுமாரன் ஹிரண்யநாபன் என்பவன் என்னை யணுகி 'பாரத்வாஜரே ! பதினாறு கலைகளுள்ள புருஷனை நீர் அறிவீரா?' என்று கேட்டான். 'நான் அறியேன்' என்று அக்குமாரனிடங் கூறினேன். நான் அவனை அறிந்திருந்தால் அதை உனக்கு எப்படிச் சொல்லாமலிருப்பேன்? எவன் பொய் சொல்லுகிருனே அவன் வேருடன் உலர்ந்துபோவான். ஆகையால் நான் பொய்சொல்லத் துணியேன்? அவன் பேசாமல் தேரில் ஏறிக்கொண்டு போய்விட்டான். அதைப்பற்றி உம்மைக் கேட்கிறேன், அப்புருஷன் யார் என்று."

---

அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரமெரித்தனனென்பர் மூடர்கள்
முப்புரமாவது மும்மல காரியம்
அப்புரமெரித்தமை யாரறிவாரே.—திருமந்திரம்.

5.7. ருக்வேதத்தால் — ருக்வேத ரூபமான அகார உபாஸனையால். ஒன்ருகிய ஓங்காரத்தினின்று மூன்று மாத்திரைகள் தோன்றின. இவைகளே மூன்று நிலைகளும, முக்காலங்களும், மூவுலகங்களும் மற்றெல்லாமும். முதல் மாத்திரையாகிய 'அ' விலிருந்து பூ:' எனும் வியாஹ்ருதி

## ஷஷ்ட: ப்ரச்ன:

அத ஹைனம் ஸுகேசா பாரத்வாஜ: பப்ரச்ச | பகவன், ஹிரண்யநாப: கௌஸல்யோ, ராஜபுத்ரோ மாமுபேத்-யைதம் ப்ரச்ன – மப்ருச்சத | ஷோடச கலம், பாரத்வாஜ, புருஷம் வேத்த | தமஹங் குமார-மப்ருவந்-நாஹ-மிமம் வேத யத்யஹ-மிம-மவேதிஷம் கதம் தே நாவக்ஷ்யமிதி ஸ-மூலோ வா ஏஷ பரிசுஷ்யதி யோ ऽன்ருத-மபிவததி தஸ்மாந் நார்ஹாம்-யன்ருதம் வக்தும் | ஸ தூஷ்ணீம் ரத மாருஹ்ய ப்ரவவ்ராஜ | தம் த்வா ப்ருச்சாமி க்வாஸௌ புருஷ இதி | 6.1. ||

யும், 'தத் ஸவிதுர்-வரேண்யம்' எனும் காயத்ரியின் முதல் பாதமும், ருக்வேதமும் உண்டாயின. இரண்டாவது மாத்திரையாகிய 'உ' விலிருந்து 'புவ:' எனும் வியாஹ்ருதியும், பர்கோ தேவஸ்ய தீமஹி' எனும் காயத்ரியின் இரண்டாவது பாதமும் யஜுர்வேதமும் உண்டாயின. மூன்றாவது மாத்திரையாகிய 'ம' விலிருந்து, 'ஸுவ:' எனும் வியாஹ்ருதியும் 'தியோ யோ ந: ப்ரசோதயாத்' எனும் காயத்ரியின் மூன்றாவது பாதமும் ஸாமவேதமும் உண்டாயின.

ருக்வேதம் (ஸ்துதிபரா) பரம் பொருளின் புகழைப் பாடுவது. யஜுர்வேதம் (க்ரியாபரா) பரம் பொருளின் ஆராதனைக்குரிய கிரியைகளை விளக்குவது. ஸாமவேதம் (ஞான பரா) ஞானத்தைப்புகட்டுவது.

இங்ஙனம் ஓங்காரத்தின் மூன்று மாத்திரைகளையும் மூன்று வேதத்திலும், மூன்று காலத்திலும், உரையிலும் செயலிலும் உள்ளத்திலும் வைத்து வைத்துப் பார்த்து உபாசித்து வந்தால் அது தானகவே உபாஸகனைப் பரிபூர்ண நிலையாகிய நாலாவது (துரீய) நிலைக்கு அழைத்துச் செல்லும். அந்நிலை சொல்லுக்கடங்காத சுகந்தருவது. இந்நான்கு நிலைகளையும் அரும்பு, மலர், காய், கனிக்கு ஒப்பிடலாம்.

ஒ. மா. 1. 12; தை 5. 1.

तस्मै स होवाच । इहैवान्तःशरीरे सोम्य स पुरुषो यस्मिन्नेताः षोडश-कलाः प्रभवन्तीति ॥ ६.२ ॥

स ईक्षांचक्रे । कस्मिन्नहमुत्क्रान्त उत्क्रान्तो भविष्यामि कस्मिन् वा प्रतिष्ठिते प्रतिष्ठास्यामीति ॥ ६.३ ॥

स प्राणमसृजत प्राणाच्छ्रद्धां खं वायुर्ज्योतिरापः पृथिवीन्द्रियं मनः अन्नमन्नाद्वीर्यं तपो मन्त्राः कर्मलोका लोकेषु च नाम च ॥ ६.४ ॥

स यथेमा नद्यः स्यन्दमानाः समुद्रायणाः समुद्रं प्राप्यास्तं गच्छन्ति, भिद्येते तासां नामरूपे, समुद्र इत्येवं प्रोच्यते । एवमेवास्य परिद्रष्टुरिमाः षोडशकलाः पुरुषायणाः पुरुषं प्राप्यास्तं गच्छन्ति, भिद्येते तासां नामरूपे, पुरुष इत्येवं प्रोच्यते, स एषोऽकलोऽमृतो भवति । तदेष श्लोकः ॥ ६.५ ॥

*6.2.* இவருக்கு அவர் சொன்னதாவது: சித்தம் அழகியவனே! எந்தப் புருஷனிடம் பதினாறு கலைகள் உளவோ அந்தப் புருஷன் இங்கே இச்சரீரத்தினுள்ளேயே உள்ளவன்.

*6.3.* (பதினாறு கலைகளுள்ள) அந்தப் புருஷன் (இங்ஙனம்) சிந்திக்கலானார்: 'எது வெளிச் சென்றுவிட்டால் நான் வெளிச்சென்றவனாவேன்? எது நிலை பெற்றால் நான் நிலைபெற்றவனாவேன்?'

*6.4.* (இங்ஙனம் எண்ணி) அப்புருஷன் (ஈசுவரன்) பிராணனை (ஸர்வ ஜீவாதாரமான ஹிரண்யகர்ப்பனை) சிருஷ்டித்தார்; பிராணனிலிருந்து சிரத்தையையும், ஆகாசம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி, இந்திரியம்,

தஸ்மை ஸ ஹோவாச । இஹைவாந்த: சரீரே, ஸோம்ய, ஸ புருஷோ, யஸ்மிந்நேதா: ஷோடசகலா: ப்ரபவந்தீதி || 6.2. ||

ஸ ஈக்ஷாஞ்சக்ரே । கஸ்மின்னஹ- முத்க்ராந்த உத்க்ராந்தோ பவிஷ்யாமி கஸ்மின்வா ப்ரதிஷ்டிதே ப்ரதிஷ்டா ஸ்யாமீதி || 6.3. ||

ஸ ப்ராண - மஸ்ருஜத ப்ராணாச்ச்ரத்தாம் கம் வாயுர் - ஜ்யோதி - ராப: ப்ருதிவீந்த்ரியம் மன: அன்ன-மன்னாத்வீர்யம் தபோ மந்த்ரா: கர்மலோகா லோகேஷு ச நாம ச || 6.4. ||

ஸ யதேமா நத்ய:, ஸ்யந்தமானா:, ஸமுத்ராயணா:, ஸமுத்ரம் ப்ராப்யாஸ்தங் கச்சந்தி, பித்யேதே தாஸாம் நாமரூபே, ஸமுத்ர இத்யேவம் ப்ரோச்யதே । ஏவ-மேவாஸ்ய பரித்ரஷ்டு-ரிமா:, ஷோடச கலா: புருஷாயணா:, புருஷம் ப்ராப்யாஸ்தங் கச்சந்தி பித்யேதே தாஸாம் நாமரூபே புருஷ இத்யேவம் ப்ரோச்யதே, ஸ ஏஷோ ऽகலோ ऽம்ருதோ பவதி | ததேஷ : ச்லோக : || 6.5. ||

---

மனது அன்னம் முதலியவற்றையும், அன்னத்திலிருந்து வீரியத்தையும், தவத்தையும், மந்திரங்களையும், கருமத்தையும், உலகங்களையும், உலகங்களில் நாமத்தையும் (சிருஷ்டித்தார்)

6.5. இந்நதிகள் எங்ஙனம் ஸமுத்திரத்தையே நோக்கிச் சென்று ஸமுத்திரத்தையடைந்து அதனுள் மறைந்து, நாமரூபங்களை இழந்து பின் ஸமுத்திரமென்றே சொல்லப்படுகின்றனவோ, அங்ஙனமே

अरा इव रथनाभौ कला यस्मिन् प्रतिष्ठिताः। तं वेद्यं
पुरुषं वेद यथा मा वो मृत्युः परिव्यथा इति ॥ ६.६ ॥

तान्होवाचैतावदेवाह-मेतत्परं ब्रह्म वेद नातः पर-मस्तीति
॥ ६.७ ॥

तमर्चयन्त-स्त्वं हि नः पिता, योऽस्माक-मविद्यायाः परं पारं
तारयसीति। नमः परमऋषिभ्यो नमः मरमऋषिभ्यः ॥ ६.८ ॥

ॐ भद्रं कर्णेभिः शृणुयाम देवाः।....

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

॥ इति अथर्ववेदीया प्रश्नोपनिषत्समाप्ता ॥

இங்கு பார்ப்பவனுடைய பதினாறு கலைகளும் புருஷனை நோக்கிச் சென்று புருஷனையடைந்து நாம ரூபங்களை இழந்து பின் புருஷன் என்றே சொல்லப்படுகின்றன. அப்போதே இவன் கலைகள் அற்றவனாகவும் மரணம் அற்றவனாகவும் ஆகிறான்.

6.6. (சீடர்களே!) தேர்ச்சக்கரத்தின் குடத்தில் ஆரங்கள் (பொருந்துவது) போல் கலைகள் எவனிடம் நிலைபெறுகின்றனவோ அந்த அறியவேண்டிய புருஷனை அறிவீர்களாக. அதனால் உங்களைச் சாவு துன்புறுத்தாமலிருக்கும். (அல்லாவிடின் நீங்கள் மரணத்திற்கும் துன்பத்திற்கும் ஆளாவீர்கள்).

6.7. இவர்களிடம் மேலும் அவர் சொன்னதாவது: ''இப் பரம்பிரமத்தை நான் இவ்வாறே உணர்ந்தேன். இதற்குமேல் அறியவேண்டியது ஒன்றுமில்லை.''

---

6:5. ஒ. 'கதா: கலா : பஞ்சதச ப்ரதிஷ்ட்டா—மு3.2.7-9.
பி. கு. 'தானி பரே தத்ராஹ்யாஹ'—4.2.15

*அரா இவ ரதநாபௌ கலா யஸ்மின் ப்ரதிஷ்டிதா: | தம் வேத்யம் புருஷம் வேத யதா மா வோ ம்ருத்யு: பரிவ்யதா இதி* || 6.6. ||

*தான் ஹோவாசைதாவ-தேவாஹ-மேதத் பரம் ப்ரஹ்ம வேத, நாத : பரமஸ்தீதி* || 6.7 ||

*தே த-மர்ச்சயந்தஸ்-த்வம் ஹி ந: பிதா, யோ ஽ஸ்மாக-மவித்யாயா : பரம் பாரம் தாரயஸீதி | நம : பரமருஷிப்யோ, நம : பரமருஷிப்ய:* || 6.8. ||

ஓம் பத்ரங்கர்ணேபி: ச்ருணுயாம தேவா: | ...

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

| இதி அதர்வவேதீயா ப்ரச்னோபநிஷத் ஸமாப்தா ||

---

6.8. இவர்கள் அவரைப் பூஜித்துக் கூறுவர் : எங்களை அவித்தைக்கு அப்பாலுள்ள கரையில் ஏற்றி விட்டமையால் நீங்களே எங்கள் பிதா. பரம ரிஷிகளுக்கு நமஸ்காரம், பரம ரிஷிகளுக்கு நமஸ்காரம்''

ஓம். தேவர்களே ! காதுகளால் நாங்கள் நல்லதைக் கேட்க வேண்டும்...

ஓம். முவ்வகையிலும் சாந்தி நிலவுக !

இங்ஙனம் அதர்வவேதத்தைச் சார்ந்த பிரச்னோபநிஷத்து முற்றும்.

உபநிஷத்தின் விஷயச் சுருக்கம்.

முதல் கேள்வி :— பிரஜைகள் எங்ஙனம் உற்பத்தியாயின ?

விடை :— சக்தியும் ஜடப்பொருளுமாகிய பிராணன் – ரயி எனும் இரட்டையைப் பிரஜாபதி சிருஷ்டித்தார். அவ்விரட்டையின் கூட்டுறவால் பிரஜைகள் அனைத்தும் உற்பத்தியாயின.

இரண்டாங் கேள்வி:— பிரஜைகளை ஆதரிக்கும் தேவதைகள் எத்தனை பேர்? அவர்களுள் முக்கியமான தேவதை எது ?

விடை :— பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் (அதிபூதத்தில்); வாக்கு, மனம், கண், காது முதலியவை (அத்தியாத்மத்தில்); முக்கியப் பிராணன் (இரண்டுக்கும் பொதுவாக;)முக்கியப் பிராணனே முக்கியமான தேவதை. அதுவே தன்னை ஐந்து பாகமாகப் பிரித்துக் கொண்டு அனைத்தையும் இயக்குவிக்கிறது. முக்கியப் பிராணனே அக்கினியாகவும், சூரியனாகவும், மேகமாகவும், காற்றாகவும் பிராணனாகவும் ரயியாகவும் விளங்குவது. சக்கரத்தின் குடத்தில் ஆரங்களைப்போல் அனைத்துலகும் முக்கியப் பிராணனிடத்தில் பொருத்தப்பட்டுள்ளது.

மூன்றாவது கேள்வி :— முக்கியப் பிராணன் எங்ஙனம் உண்டாகிறது ? உடலுள் அது புகுவதும், நிலைப்பதும், உடலினின்று பிரிவதும் எங்ஙனம் ? அத்தியாத்மத்திலும் அதிபூதத்திலும் அதன் இயக்கம் எங்ஙனம் ?

விடை :— முக்கியப் பிராணன் ஆத்மாவினிடத்திலிருந்தே உண்டாகிறது. அது ஆத்மாவின் நிழல் போன்றது. மனதின் செய்கையால் அது உடலுள் புகுகின்றது. ஐந்தாகப் பிரிந்து, அபானனைப் பாயுவிலும் உபஸ்தத்திலும் நிலைபெறுகிறது; இடையில் ஸமானனாக இருக்கிறது; இருதயத்தினின்று கிளம்பும் நூற்றுக்கணக்கான நாடிகளிலும் 72000 கிளை நாடிகளிலும் வியானனாக வியாபிக்கிறது; தனியாக மேல் நோக்கிச் செல்லும் ஒரு நாடியில் உதானனாக இருக்கிறது. உடலினின்று பிரிவு உதானனால் ஏற்படுகிறது. இது அத்தியாத்மம். அதிபூதத்தில் சூரியனே வெளியிலுள்ள பிராணன்; பிருதிவியை இயக்குவிப்பதே அபானன்; அந்தரிக்ஷத்திலுள்ளது ஸமானன்; காற்றே வியானன்; ஒளியே உதானன்.

நான்காவது கேள்வி :— இந்தப் புருஷனிடத்தில் எந்த தேவதைகள் தூங்குகின்றன ? எவை விழித்திருக்கின்றன? கனவுகளைக் காணும் தேவதைகள் எவை ? சுகத்தை அனுபவிப்பது எது ? எவனிடம் எல்லாம் நிலைபெறுகின்றன ?

விடை :— இந்தப் புருஷன் தூங்கும்போது இந்திரியங்களாகிற தேவதைகள் மனதாகிற பரதேவதையிடம் ஒடுங்கித் தூங்குகின்றன. ஐந்து பிராண தேவதைகளும் விழித்திருக்கின்றன. மனதாகிற தேவதை ஸ்வப்னத்தில் அனைத்துந் தானேயாகி அனைத்தையுங் காண்கிறது. எப்போது மனது ஒரு கனவையுங் காணவில்லையோ அப்போது ஏற்படுவதே சுகம். கூடஸ்தனை ஆத்மாவிடம் எல்லாம் நிலைபெறுகின்றன.

ஐந்தாவது கேள்வி :— ஓங்கார உபாஸனையின் பயன் என்ன ?

விடை :— ஓங்காரத்தின் மூன்று மாத்திரைகளையும் தனித் தனிப் பிரதீகங்களாக உபாசித்தால் அடையப் பெறுவது பிரம்மலோகம் (கிரமமுக்தி). ஒன்று சேர்ந்து உபாசித்தால் அடைவது பிரம்ம நிர்வாணம் (ஸத்யோ முக்தி).

ஆறுவது கேள்வி :— பதினாறு கலைகளுள்ள புருஷன் யார் ?

விடை :— பதினாறு கலைகளுள்ள புருஷன் இங்கே இச்சரீரத்தினுள்ளே உறைபவன் தான். நதிகள் கடலில் எங்ஙனம் புகுந்து மறைகின்றனவோ அங்ஙனம் பதினாறு கலைகளும் பரமாத்மாவிடம் ஒடுங்குகின்றன. இதற்குமேல் அறியவேண்டியது ஒன்றுமில்லை.

இங்ஙனம் பிரச்னோபநிஷத்திற்கு ஸ்ரீ ராமகிருஷ்ண தீபம் எனும் உரை முற்றும்.

# ॥ मुण्डकोपनिषत् ॥

ॐ भद्रं कर्णेभिः शृणुयाम देवाः । भद्रं पश्येमाक्षभिर्यजत्राः । स्थिरैरङ्गैस्तुष्टुवाꣳसस्तनूभिः । व्यशेम देवहितं यदायुः । स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः । स्वस्ति नः पूषा विश्ववेदाः । स्वस्ति नस्तार्क्ष्यो अरिष्टनेमिः । स्वस्ति नो बृहस्पतिर्दधातु ।

॥ ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## प्रथममुण्डके प्रथमः खण्डः

ॐ ब्रह्मा देवानां प्रथमः संबभूव विश्वस्य कर्ता भुवनस्य गोप्ता । स ब्रह्मविद्यां सर्वविद्या-प्रतिष्ठां अथर्वाय ज्येष्ठपुत्राय प्राह

॥ १.१ ॥

# முண்டகோபநிஷத்து

ஓம் தேவர்களே !. காதுகளால் நாங்கள் நல்லதைக் கேட்க வேண்டும்...

ஓம். முவ்வகையிலும் நிலவுக !

## முதல் முண்டகத்தில் முதல் கண்டம்

**1.1.** ஓம். உலகைப் படைத்தவரும் புவனத்தை இரக்ஷிப்பவரும் ஆகிய பிரம்மா தேவர்களனைவருக்கும் முன் தோன்றியவர். தன் முதல் (மானஸ) புத்திரனாகிய அதர்வருக்கு அவர் எல்லா வித்தைக்கும் ஆதாரமாகிய பிரம்மவித்தையை உபதேசித்தார்.

# முண்டகோபநிஷத்

ஓம் பத்ரங்கர்ணேபி: ச்ருணுயாம தேவா: | பத்ரம் பச்யேமாக்ஷபிர்யஜத்ரா: | ஸ்திரைரங்கைஸ்-துஷ்டுவாஂஸஸ்-தனூபி: | வ்யசேம தேவஹிதம் யதாயு: | ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்த-ச்ரவா: | ஸ்வஸ்தி ந:பூஷா விச்வவேதா: | ஸ்வஸ்தி நஸ்தார்க்ஷ்யோ அரிஷ்டநேமி: | ஸ்வஸ்தி நோ ப்ருஹஸ் பதிர்-ததாது | .

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

## ப்ரதம முண்டகே ப்ரதம: கண்ட:

ஓம் ப்ரஹ்மா தேவானாம் ப்ரதம: ஸம்பபூவ விச்வஸ்ய கர்த்தா புவனஸ்ய கோப்தா | ஸ ப்ரஹ்ம-வித்யாம், ஸர்வவித்யா-ப்ரதிஷ்டாம், அதர்வாய, ஜ்யேஷ்டபுத்ராய ப்ராஹ || 1.1 ||

---

உபநிஷத்தின் பெயரும் தொடர்பும் — 'முண்டகம்' என்றால் மொட்டைத் தலை. இது வைராக்கியத்துக்கு அடையாளம். ஞான வாழ்க்கைக்குத் தலையை ஈடுவைத்தவர்களுக்கே இவ்வுபநிஷத்தில் அதிகாரம். அதனால் இவ்வுபநிஷத்துக்கு முண்டகோபநிஷத்து எனப் பெயர் வாய்ந்தது போலும். இது அதர்வவேதத்தைச் சேர்ந்தது. இதில் மூன்று முண்டகங்களும், ஒவ்வொன்றில் இரண்டு கண்டங்களும் ஆக ஆறு பாகங்கள் இருக்கின்றன.

முதல் முண்டகத்தில் வித்தை பரா, அபரா என்று இரண்டு என்றும், நான்கு வேதங்களும் அபர வித்தையில் அடக்கம் என்றும், பரவித்தை என்பது பிரம்மஞானம் என்றும் கூறப்படுகிறது. இரண்டாவது முண்டகத்தில் பிரம்மத்துக்கும் பிரபஞ்சத்துக்குமுள்ள சம்பந்தமும், பிரம்மத்தை நாடும் உபாயமும் கூறப்படுகிறது. மூன்றாவது முண்டகத்

अथर्वणे यां प्रवदेत ब्रह्मा ऽथर्वा तां पुरोवाचाङ्गिरे ब्रह्मविद्याम् । स भारद्वाजाय सत्यवाहाय प्राह भारद्वाजो ऽङ्गिरसे परावराम् ॥ १.२ ॥

शौनको ह वै महाशालो ऽङ्गिरसं विधिव-दुपसन्न पप्रच्छ । कस्मिन्नु भगवो विज्ञाते सर्वमिदं विज्ञातं भवतीति ॥ १.३ ॥

तस्मै स होवाच ॥ द्वे विद्ये वेदितव्य इति ह स्म यद्ब्रह्मविदो वदन्ति, परा चैवापरा च ॥ १.४ ॥

तत्रापरा ऋग्वेदो यजुर्वेदः सामवेदो ऽथर्ववेदः शिक्षा कल्पो व्याकरणं निरुक्तं छन्दो ज्योतिषमिति । अथ परा यया तदक्षरमधिगम्यते ॥ १.५ ॥

*1.2.* பிரம்மா அதர்வருக்கு எதை உபதேசித்தாரோ அந்த பிரம்ம வித்தையை அதர்வர் முதலில் அங்கிரருக்கு உபதேசித்தார். அவர் பரத்வாஜ வம்சத்தவரான ஸத்தியவாஹருக்கு உபதேசித்தார். பரத்வாஜ ஸத்தியவாஹர் பரம்பரையாய் வந்ததும் பராவித்தை அபராவித்தை எல்லாம் அடங்கியதும் ஆன இந்த வித்தையை அங்கிரஸருக்கு உபதேசித்தார்.

*1.3.* இல்லறத்திற் சிறந்த சௌனகர் அங்கிரஸரை முறைப்படி யணுகிக் கேட்டதாவது: "ஐயனே! எதை உணர்ந்தால் இது எல்லாம் உணர்ந்ததாகும்?"

---

தில் பிரம்மஞானியின் லக்ஷணமும் ஞானத்தின் பலனுங் கூறப் படுகிறது.

1.1. ஸர்வவித்யா ப்ரதிஷ்ட்டாம்— எதை அறிந்தால் எல்லாம் அறிந்ததாகிறதோ, அல்லது எல்லா வித்தை

அதர்வணே யாம் ப்ரவதேத ப்ரஹ்மா, அதர்வா தாம் புரோவா-சாங்கிரே ப்ரஹ்மவித்யாம் | ஸ பாரத்வாஜாய ஸத்யவாஹாய ப்ராஹ, பாரத்வாஜோ Sங்கிரஸே, பராவராம் || 1·2 ||

சௌநகோ ஹ வை மஹாசா[illegible] Sங்கிரஸம் விதிவ-துபஸந்ந : பப்ரச்ச | க[illegible]னு பகவோ விஜ்ஞாதே, ஸர்வமிதம் [illegible] [illegible]தீதி || 1·3 ||

தஸ்மை [illegible] த்[illegible] வேதி தவ்ய இதி ஹ ஸ்ம[illegible] தோ வதந்தி, பரா சைவாபரா ச || 1·4 ||

தத்ரா(அ)பரா, ருக்வேதோ, யஜுர்வேத:, ஸாமவேதோ Sதர்வவேத:, சிக்ஷா, கல்போ, வ்யாகரணம், நிருக்தஞ், சந்தோ, ஜ்யோதிஷமிதி | அத பரா, யயா ததக்ஷர-மதிகம்யதே || 1 5 ||

---

1.4. இவருக்கு அவர் (அங்கிரஸர்) சொன்னதாவது—'பரா' என்றும் 'அபரா' என்றும் உணர வேண்டிய வித்தைகள் இரண்டு உண்டு என்று வேதத்தையுணர்ந்தவர் (அல்லது பிரம்ம ஞானிகள்) கூறுவரன்றோ ?

---

களாலும் எது ஒன்றே அறியத்தகுந்ததோ அது பிரம்ம வித்தை ; அது எல்லா வித்தைகளுக்கும் ஆதாரம்.

ஒ—(யேனச்ருதம் ச்ருதம் பவதி, அமதம் மதம், அவிஜ்ஞாதம் விஜ்ஞாதமிதி) எதனல் கேட்கப்படாதது கேட்கப்பட்டதாயும், உணரப்படாதது உணரப்பட்டதாயும் அறியப்படாதது அறியப்பட்டதாயும் ஆகிறதோ. (சா 6.1.3.)

4

यत्तदद्रेश्य-मग्राह्य-मगोत्र-मवर्ण-मचक्षु:-श्रोत्रं तदपाणिपादं नित्य विभुं सर्वगतं सुसूक्ष्मं । तदव्ययं यद्भूतयोनिं परिपश्यन्ति धीरा: ॥ १.६ ॥

यथोर्णनाभि: सृजते गृह्णते च, यथा पृथिव्या-मोषधय: संभवन्ति । यथा सत: पुरुषात् केशलोमानि, तथाक्षरात संभवतीह विश्वम् ॥ १.७ ॥

1.5. அவற்றுள் 'அபரா' (கீழ்) என்பது ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வ்வேதம், சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தம், ஜோதிஷம். ஆனால் 'பரா' (மேல்) என்பது எதனால் மேலே சொல்லப் போகிற 'அக்ஷரய்' என்னும் (ஆன்ம) பொருள் அடையப்படுமோ அது.

1 6. அக்ஷரப் பொருள் எதுவோ அது காண முடியாதது, பிடிக்க முடியாதது, பிறப்பிடமற்றது, வர்ணமில்லாதது, கண்ணும் காதுமில்லாதது, கையும் காலுமில்லாதது, என்றுமுள்ளது, எங்குமுள்ளது,

---

1.3. முதல் புத்திரனாகிய அதர்வருக்கு — ஸ்வாயம்புவ மன்வந்திரத்தில் ஸநகாதிகள் பிரம்மாவிடம் முதலில் உண்டானார்கள். வைவஸ்வத மன்வந்திரத்தில் அதர்வர் முதலில் உண்டானார். இவர் மூலமாய்ப் பிரவிருத்தித்தது அதர்வண வேதம்.

மஹாசால :— ஒவ்வொரு வருஷமும் சிறப்பாக யஜ்ஞம் செய்கிறவர் (பிரத்யப்தம் யஜ்ஞக்ருத் ஸம்யக் மஹாசால : ப்ரகீர்த்தித :)

1.5. 'கேவலம் உபநிஷத் வாக்கியங்களை அத்தியயனம் செய்து உண்டாகும் அர்த்த ஞானம் எல்லோருக்கும் கிடைக்கக் கூடும். அவர்கள் எல்லோரும் பரவித்தையை அறிந்தவர்களாகமாட்டார்கள். வேதத்தினாலும், குரு உபாஸனையாலும் வைராக்கியத்தாலும் உண்டாகிற பிரம்ம ஸாக்ஷாத்காரமே பரவித்தையாம்' (சங்).

யத்த-தத்ரேச்ய-மக்ராஹ்ய-மகோத்ர-மவர்ண-மசக்ஷு: ச்ரோத்ரம் ததபாணி-பாதம் நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம் | ததவ்யயம் யத் பூத-யோனிம் பரிபச்யந்தி தீரா : || 1·6 ||

யதோர்ணநாபி : ஸ்ருஜதே, க்ருஹ்ணதே ச யதா ப்ருதிவ்யா-மோஷதய : ஸம்பவந்தி | யதா ஸத: புருஷாத்-கேசலோமானி, ததாக்ஷராத் ஸம்பவ தீஹ விச்வம் || 1·7 ||

அனைத்தையும் வியாபித்திருப்பது. வெகு நுட்பமானது, குறைவுபடாதது. எல்லாப் பொருட்களுக்கும் பிறப்பிடமாகிய அதை புத்திமான்கள் ஆராய்ந்தறிகிறார்கள்

17. எங்ஙனம் சிலந்திப்பூச்சி (தன்னி—மிருந்தே நூலை) உண்டாக்கி (தனக்குள்ளேயே) இழுத்துக் கொள்ளுகிறதோ எங்ஙனம் பூமியில் செடி கொடிகள் உண்டாகின்றனவோ, எங்ஙனம் ஜீவபுருஷனிடம் உரோமம் உண்டாகிறதோ அங்ஙனம் அக்ஷரப் பிரம்மத்தினிடமிருந்து இந்த உலகம் உண்டாகிறது.

1.7. எங்ஙனம் சிலந்திப்பூச்சி :— சிலந்திப்பூச்சி கூடு கட்ட வேறொரு உபாதான காரணத்தையும் அபேக்ஷிக்காதவாறு.

எங்ஙனம் பூமியில் செடி கொடிகள் :—பூமியானது அந்தந்த விதைகளுக்குத் தக்கபடி செடிகளை உண்டாக்குவது போல் ஈசுவரன் கர்மத்துக்குத் தக்கபடி ஜன்மத்தைக் கொடுக்கிறான். இதில் பக்ஷபாத தோஷம் இல்லை.

ஒ. வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்— பி. சூ. 2. 1.34.

எங்ஙனம் ரோமம் உண்டாகிறதோ — உயிருள்ள உடலில் மயிர் எப்படிப் பிரயத்தினமின்றி வளர்கிறதோ அப்படி விசுவரூபியான ஈசுவரனிடம் அசேதன உலகம் தோன்றுகிறது.

तपसा चीयते ब्रह्म ततोऽन्नमभिजायते । अन्नात्प्राणो मनः सत्यं लोकाः कर्मसु चामृतम् ॥ १.८ ॥

यः सर्वज्ञः सर्वविद्यस्य ज्ञानमयं तपः । तस्मादेतद्ब्रह्म नाम रूप-मन्नं च जायते ॥ १.९ ॥

## प्रथममुण्डके द्वितीयः खण्डः

तदेतत् सत्यं मन्त्रेषु कर्माणि, कवयो यान्यपश्यंस्तानि त्रेतायां बहुधा संततानि । तान्याचरथ नियतं सत्यकामा एष वः पन्थाः सुकृतस्य लोके ॥ २.१ ॥

यदा लेलायते ह्यर्चिः समिद्धे हव्यवाहने । तदाज्य-भागावन्तरेणाहुतीः प्रतिपादयेत् ॥ २.२ ॥

1.8. (ஞானமாகிற) தவத்தால் பிரம்மம் (சிருஷ்டியில் நோக்கமுடையதாகி) வளர்கிறது. அதினின்று அன்னமெனும் அவ்யாக்ருதம் தோன்றிற்று. அவ்யாக்ருதத்தினின்று பிராணரூபியான ஹிரண்யகர்ப்பனும். மனதும், சத்தியமாய்த் தோற்றமளிக்கும் பஞ்ச பூதங்களும், உலகங்களும் (கர்மங்களும்) கர்மங்களினின்று அமிருதம் போல் விரும்பப்படும் பயனும் உண்டாயின.

1.9. (அனைத்துக்குங் காரணமாதலால்) எல்லாவற்றையும் அறிந்தவரும் (எங்கும் நிறைந்திருப்பதால்) எல்லாவற்றையும் அறிபவரும் எவரோ, ஞான பூர்த்தியே எவருடைய தவச் சக்தியோ, அவரிடமிருந்தே (ஹிரண்யகர்ப்பன் எனப்படும்) காரியப் பிரம்மமும் நாமரூபங்களும் ஜடப்பொருள்களும் உண்டாகின்றன

இரண்டாவது கண்டத்தில் அபரவித்தையின் ஸ்வரூபத்தை ஆராய்ந்து அதனால் அடையப்பெறும் பயன் நிலையற்றதென்பதை உணர்ந்து பரவித்தையை நாடுதல் வேண்டும் என்பது உபதேசிக்கப் பெறுகிறது.

தபஸா சீயதே ப்ரஹ்ம ததோऽன்ன-மபிஜாயதே|
அன்னாத் ப்ராணோ மன : ஸத்யம் லோகா : கர்மஸு சாம்ருதம் || 1.8 ||

ய : ஸர்வஜ்ஞ : ஸர்வவித் யஸ்ய ஜ்ஞானமயம் தப : | தஸ்மா-தேதத்-ப்ரஹ்ம நாம-ரூப-மன்னஞ்ச ஜாயதே || 1.9 ||

ப்ரதம முண்டகே த்விதீய : கண்ட :

ததேதத் ஸத்யம் மந்த்ரேஷு கர்மாணி, கவயோ யான்-யபச்யன்-ஸ்தானி த்ரேதாயாம் பஹுதா ஸந்ததானி | தான்-யாசரத நியதம் ஸத்யகாமா ஏஷ வ: பந்தா : ஸுக்ருதஸ்ய லோகே || 2·1 ||

யதா லேலாயதே ஹ்யர்ச்சி : ஸமித்தே ஹவ்ய வாஹனே | ததாஜ்ய- பாகாவந்தரேணாஹுதீ : ப்ரதி பாதயேத் || 2·2 ||

## முதல் முண்டகத்தில் இரண்டாம் கண்டம்

2·1. அந்த ஸத்தியமே (பின்வரும்) இதுவும். (வேத) மந்த்ரங்களின் மூலமாக ஞானிகள் எந்தக் கர்மங்களைக் கண்டறிந்தனரோ அவை மூன்று வேதங்களிலும் பலவாருக விவரிக்கப் பட்டுள்ளன. ஸத்தியத்தை நாடும் நீங்கள் அவைகளை எப்போதும் அனுஷ்டியுங்கள். புண்ணிய உலகுக்கு இதுவே உங்களுக்கு வழி.

2.2. எப்போது நன்ருக வளர்க்கப்பட்ட அக்கினியில் ஜ்வாலை வீசுகிறதோ அப்போது ஆஜ்யபாக ஸ்தானங்களின் மத்தியில் ஆஹுதிகளை அர்ப்பிக்க வேண்டும்.

यस्याग्निहोत्र - मदर्श-मपौर्णमास - मचातुर्मास्य-मनाग्रयण-मतिथि-
वर्जितं च। अहुत-मवैश्वदेव-मविधिना हुत-मासप्तमांस्तस्य लोकान्
हिनस्ति ॥ २.३ ॥

काली कराली च मनोजवा च सुलोहिता या च सुधूम्रवर्णा।
स्फुलिङ्गिनी विश्वरुची च देवी लेलायमाना इति सप्त जिह्वाः ॥ २.४ ॥

एतेषु यश्चरते भ्राजमानेषु यथाकालं चाहुतयो ह्याददायन्।
तन्नयन्त्येताः सूर्यस्य रश्मयो यत्र देवानां पति-रेकोऽधिवासः ॥ २.५ ॥

एह्येहीति तमाहुतयः सुवर्चसः सूर्यस्य रश्मिभि-र्यजमानं वहन्ति।
प्रियां वाचमभिवदन्त्योऽर्चयन्त्य एष वः पुण्यः सुकृतो ब्रह्मलोकः
॥ २.६ ॥

2.3. எவனுடைய அக்னிஹோத்ரம், (அமாவாசைக்கு மறுநாள் செய்யவேண்டிய) தர்சம் எனும் யாகம் இல்லாமலும் (பௌர்ணமிக்கு மறுநாள் செய்யவேண்டிய) பௌர்ணமாஸ யாகமில்லாமலும் (அறுவடையானதும் செய்யப்படும்) ஆக்ரயணம் எனும் யாகமில்லாமலும் (தினந்தோறும் செயயவேண்டிய) அதிதி பூஜை இல்லாமலும், ஔபாஸனமில்லாமலும், வைச்வதேவ பூஜை இல்லாமலும், சாஸ்திர விதியையனுசரிக்காமலும் செய்யப்படுகின்றதோ அது ஏழுபிறவி வரை புண்ணிய லோகங்களை அடைய முடியாமல் செய்து விடுகிறது.

2.4. காளீ, கராளீ, மனோஜவா, ஸுலோஹிதா ஸுதூம்ரவர்ணா, ஸ்புலிங்கினீ, விசுவருசீதேவி என்று ஏழு நாக்குகள் (அக்கினியில்) அசைவதுபோல் இருக்கின்றன.

யஸ்யாக்னிஹோத்ர-மதர்ச-மபௌர்ணமாஸ-
மசாதுர்மாஸ்ய - மநாக்ரயண - மதிதி வர்ஜிதஞ்ச |
அஹுத - மவைச்வதேவ-மவிதிநா ஹுத-மாஸப்த
மான்-ஸ்தஸ்ய லோகான் ஹினஸ்தி || 2.3 ||

காளீ கராளீ ச மநோஜவா ச ஸுலோஹிதா யா
ச ஸுதூம்ரவர்ணா | ஸ்புலிங்கினீ விச்வருசீ ச தேவீ
லேலாயமானா இதி ஸப்த ஜிஹ்வா : || 2.4 ||

ஏதேஷு யச்சரதே ப்ராஜமானேஷு யதா
காலஞ் சாஹுதயோ ஹ்யாததாயன் | தந்நயந்த்
யேதா : ஸூர்யஸ்ய ரச்மயோ யத்ர தேவானாம் பதி-
ரேகோ ऽதிவாஸ : || 2.5 ||

ஏஹ்யேஹீதி தமாஹுதய : ஸுவர்ச்சஸ :
ஸூர்யஸ்ய ரச்மிபிர் - யஜமானம் வஹந்தி | ப்ரியாம்
வாச-மபிவதந்த்யோऽர்ச்சயந்த்ய ஏஷ வ : புண்ய :
ஸுக்ருதோ ப்ரஹ்மலோக : || 2.6 ||

---

2.5. பிரகாசிக்கும் இவ்வக்கினிஜ்வாலைகளில் எவன் ஆஹுதிகளை உரிய காலத்தில் அர்ப்பணம் செய்துகொண்டு கர்மத்தைச் செய்கிறானோ. அவனை இவ்வாஹுதிகள் சூரிய கிரணங்களின் வடிவாகி தேவர்களின் புகலிடமாயும் ஏகநாயகனுயும் உள்ள பரமபுருஷன் எங்கு உள்ளானோ அங்கு அழைத்துச் செல்லுகின்றன.

2.6. "வாருங்கள், வாருங்கள்" என்று அந்த யஜமானனைச் சிறந்த ஒளி பொருந்திய அந்த ஆஹுதிகள் சூரியனுடைய கிரணங்களுடன் கூடி பிரியமான

प्लवा ह्येते अदृढा यज्ञरूपा अष्टादशोक्त-मवरं येषु कर्म ।
एतच्छ्रेयो येऽभिनन्दन्ति मूढा जरा मृत्युं ते पुनरेवापियन्ति ॥ २.७ ॥
अविद्याया-मन्तरे वर्तमानाः स्वयं धीराः पण्डितं-मन्यमानाः ।
जङ्घन्यमानाः परियन्ति मूढा अन्धेनैव नीयमाना यथान्धाः ॥ २.८ ॥
अविद्यायां बहुधा वर्तमाना वयं कृतार्था इत्यभिमन्यन्ति बालाः । यत्कर्मिणो न प्रवेदयन्ति रागात्तेनातुराः क्षीणलोका-श्च्यवन्ते ॥ २.९ ॥

வார்த்தைகளைக் கூறிப் போற்றுகின்றவைகளாய் "இந்த ஸ்வர்க்கலோகம் உங்களுடைய நற்செயலின் புண்ணியம்" என்று அழைத்துச் செல்லுகின்றன.

2.7. ஆனால் (பதினாறு ருத்விக்குகளைக் கொண்டு யஜமானனும் யஜமானியுமாகச் செய்யும்) பதினெட்டு வகைப்பட்ட கர்மம் விரிவு பட்டதெனினும் தாழ்ந்தது (அபராவித்தை); யஜ்ஞரூபமான இப்படகுகள் திட மற்றவை. எவர்கள் இதையே பெரும் பேருகக் கொண்டு களிக்கிறார்களோ அந்த மூடர்கள் பிறப் பிறப்பை மீண்டும் அடை யவே அடைகிறார்கள்.

2.8. அவித்தையினுள் ஆழ்ந்து கிடக்கும் மூடர்கள் தாமே தீரர்கள் என்றும், பண்டிதர்கள் என்றும் தங் களை நினைத்துக் கொண்டு துன்பங்களால் பீடிக்கப்பட் டுத் தடுமாறுபவர்களாய்க் குருடர்களால் வழி காட்டப் பட்ட குருடர்களைப்போல் சுற்றிச் சுற்றி வருகின்றனர்.

2.9. அவித்தையில் வெகுவாக ஆழ்ந்தவர்களும் (அறிவிற்) சிறியோருமாகிய இவர்கள் தம்மைக் கிரு தார்த்தர்களாக மதித்துக் கொள்ளுகின்றனர். ஆசை வாய்ப்பட்டமையால் காமிய கருமத்தில் பற்றுள்ளவர்

ப்லவா-ஹ்யேதே அத்ருடா யஜ்ஞரூபா, அஷ்டாதசோக்த - மவரம் யேஷு கர்ம | ஏதச்-ச்ரேயோ யேபிநந்தந்தி மூடா ஜரா ம்ருத்யும் தே புனரேவாபியந்தி || 2.7 ||

அவித்யாயா - மந்தரே வர்த்தமானு: ஸ்வயந் தீரா: பண்டிதம் மன்யமானு: | ஜங்குன்யமானு: பரியந்தி மூடா அந்தேனைவ நீயமானு யதாந்தா: || 2.8 ||

அவித்யாயாம் பஹுதா வர்த்தமானு, வயம் க்ருதார்தா இத்-யபிமன்யந்தி பாலா: | யத் கர்மிணோ ந ப்ரவேதயந்தி ராகாத், தேநாதுரா: க்ஷீணலோகாச்-ச்யவந்தே || 2.9 ||

---

கள் (உண்மையை) உணர்வதில்லை; அக்காரணத்தால் துன்பத்தால் பீடிக்கப்பட்டவர்களாய், அழியும் (ஸ்வர்க்காதி) உலகங்களை யடைந்து மீண்டும் (அவ்வுலகங்களினின்று) நழுவுகின்றனர்.

---

2.9. ஒ. 'அவித்யாயா-மந்தரே'—கட. 2.5.

இன்பநுகர்ச்சியிலும் உயர் பதவியிலும் ஆழ்ந்த பற்றுடையவர்களும் அதனுல் விவேகத்தை இழந்தவருமாகிய இவர்கட்கு நிச்சயமான புத்தி உள்ளத்தில் உதியாது. (கீ. 2.44)

ஒ. கழுகு ஆகாயத்தில் வெகு உயரத்தில் பறக்கின்றது. ஆயினும் அது எந்தக்குழியில் எந்தப் பிணங் கிடக்கிறதென்று கீழ்நோக்கிய வண்ணமாகவே இருக்கும். அதுபோலச் சாஸ்திரங்களைக் கற்றவராயிருப்பினும் பலர் கீழ்நோக்குடையவராய்ப் பெண்ணைசை பொன்னைசைகளாகிய உலகப் பற்றுகளால் பந்தப்பட்ட மனமுடையவராக இருக்கின்றனர். ஆதலால் அவர்கள் உண்மை ஞானத்தைப் பெறுவதில்லை. (ரா. கி.)

प्लवा ह्येते अदृढा यज्ञरूपा अष्टादशोक्त-मवरं येषु कर्म ।
एतच्छ्रेयो येऽभिनन्दन्ति मूढा जरा मृत्युं ते पुनरेवापियन्ति ॥ २.७ ॥

अविद्याया-मन्तरे वर्तमानाः स्वयं धीराः पण्डितं-मन्यमानाः ।
जङ्घन्यमानाः परियन्ति मूढा अन्धेनैव नीयमाना यथान्धाः ॥ २.८ ॥

अविद्यायां बहुधा वर्तमाना वयं कृतार्था इत्यभिमन्यन्ति बालाः । यत्कर्मिणो न प्रवेदयन्ति रागा-त्तेनातुराः क्षीणलोका-श्च्यवन्ते ॥ २.९ ॥

வார்த்தைகளைக் கூறிப் போற்றுகின்றவைகளாய் "இந்த ஸ்வர்க்கலோகம் உங்களுடைய நற்செயலின் புண்ணியம்" என்று அழைத்துச் செல்லுகின்றன.

2.7. ஆனால் (பதினாறு ருத்விக்குகளைக் கொண்டு யஜமானனும் யஜமானியுமாகச் செய்யும்) பதினெட்டு வகைப்பட்ட கர்மம் விரிவு பட்டதெனினும் தாழ்ந்தது (அபராவித்தை); யஜ்ஞரூபமான இப்படகுகள் திடமற்றவை. எவர்கள் இதையே பெரும் பேறாகக் கொண்டு களிக்கிறார்களோ அந்த மூடர்கள் பிறப் பிறப்பை மீண்டும் அடையவே அடைகிறார்கள்.

2.8. அவித்தையினுள் ஆழ்ந்து கிடக்கும் மூடர்கள் தாமே தீரர்கள் என்றும், பண்டிதர்கள் என்றும் தங்களை நினைத்துக் கொண்டு துன்பங்களால் பீடிக்கப்பட்டுத் தடுமாறுபவர்களாய்க் குருடர்களால் வழி காட்டப் பட்ட குருடர்களைப்போல் சுற்றிச் சுற்றி வருகின்றனர்.

2.9. அவித்தையில் வெகுவாக ஆழ்ந்தவர்களும் (அறிவிற்) சிறியோருமாகிய இவர்கள் தம்மைக் கிருதார்த்தர்களாக மதித்துக் கொள்ளுகின்றனர். ஆசை வாயப்பட்டமையால் காமிய கருமத்தில் பற்றுள்ளவர்

ப்லவா-ஹ்யேதே அத்ருடா யஜ்ஞரூபா, அஷ்டாதசோக்த - மவரம் யேஷு கர்ம | ஏதச்-ச்ரேயோ யேபிநந்தந்தி மூடா ஜரா ம்ருத்யும் தே புனரேவாபியந்தி || 2.7 ||

அவித்யாயா - மந்தரே வர்த்தமானு: ஸ்வயந் தீரா: பண்டிதம் மன்யமானு: | ஜங்கன்யமானு: பரியந்தி மூடா அந்தேனைவ நீயமானு யதாந்தா: || 2.8 ||

அவித்யாயாம் பஹுதா வர்த்தமானு, வயம் க்ருதார்தா இத்-யபிமன்யந்தி பாலா: | யத் கர்மிணோ ந ப்ரவேதயந்தி ராகாத், தேநாதுரா: க்ஷீண லோகாச்-ச்யவந்தே || 2.9 ||

---

கள் (உண்மையை) உணர்வதில்லை; அக்காரணத்தால் துன்பத்தால் பீடிக்கப்பட்டவர்களாய், அழியும் (ஸ்வர்க்காதி) உலகங்களை யடைந்து மீண்டும் (அவ்வுலகங்களினின்று) நழுவுகின்றனர்.

---

2.9. ஒ. 'அவித்யாயா-மந்தரே'—கட. 2.5.
இன்பநுகர்ச்சியிலும் உயர் பதவியிலும் ஆழ்ந்த பற்றுடையவர்களும் அதனல் விவேகத்தை இழந்தவருமாகிய இவர்கட்கு நிச்சயமான புத்தி உள்ளத்தில் உதியாது. (கீ. 2.44)

ஒ. கழுகு ஆகாயத்தில் வெகு உயரத்தில் பறக்கின்றது. ஆயினும் அது எந்தக்குழியில் எந்தப் பிணங் கிடக்கிறதென்று கீழ்நோக்கிய வண்ணமாகவே இருக்கும். அதுபோலச் சாஸ்திரங்களைக் கற்றவராயிருப்பினும் பலர் கீழ்நோக்குடையவராய்ப் பெண்ணுசை பொன்னுசைகளாகிய உலகப் பற்றுகளால் பந்தப்பட்ட மனமுடையவராக இருக்கின்றனர். ஆதலால் அவர்கள் உண்மை ஞானத்தைப் பெறுவதில்லை. (ரா. கி.)

इष्टापूर्तं मन्यमाना वरिष्ठं नान्यच्छ्रेयो वेदयन्ते प्रमूढाः ।
नाकस्य पृष्ठे ते सुकृतेऽनुभूत्वेमं लोकं हीनतरं वा विशन्ति
॥ २.१० ॥

तपःश्रद्धे ये ह्युपवसन्त्यरण्ये शान्ता विद्वांसो भैक्षचर्यां
चरन्तः । सूर्यद्वारेण ते विरजाः प्रयान्ति यत्रामृतः स पुरुषो
ह्यव्ययात्मा ॥ २.११ ॥

परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणो निर्वेद-मायान्नास्त्यकृतः
कृतेन । तद्विज्ञानार्थं स गुरु-मेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं
ब्रह्मनिष्ठम् ॥ २.१२ ॥

2.10. (சுருதிகளில் கூறின) இஷ்டம் (ஸ்மிருதிகளில் கூறின) பூர்த்தம் எனும் கருமங்களே சிறந்தவை எனக் கருதும் முழு மூடர்கள் உயர்நலம் தருவது வேறொன்று உண்டு என்றும் உணர்வதில்லை. அவர்கள் ஸ்வர்க்கத்தின் உயர்ந்த ஸ்தானத்திலுள்ள (இன்பங்களை) அனுபவித்தாலும், பின்னர் இந்த (மனித) உலகிலோ இன்னுந் தாழ்ந்த பிறவியிலோ புகுகின்றனர்.

2.11. ஆனால் எவர்கள் இந்திரியங்கள் அடங்கிச் சாந்தி யெய்தியவர்களாய் அறிவு நிறைந்தவர்களாய்ப் பிச்சையாய்க் கிடைத்ததைக் கொண்டு அரணியத்தில் தவத்திலும் சிரத்தையிலும் வாழ்கின்றார்களோ அவர்கள் அழுக்கு நீங்கிய மனத்தினராய்ச் சூரியமார்க்கத்திற் சென்று மரணமும் மாறுதலுமற்ற (ஸமஷ்டி) ஆத்ம புருஷனிருக்கும் பிரம்மலோகத்தை அடைகின்றனர்.

2–10. ஒ. பிரச். 1.9; கட. 5.7 'க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விசந்தி' (கீ. 9.21.)

இஷ்டா-பூர்த்தம் மன்யமாநா வரிஷ்டம் நான்யச் - ச்ரேயோ வேதயந்தே ப்ரமூடா: | நாகஸ்ய ப்ருஷ்டே தே ஸுக்ருதேऽநுபூத்வேமம் லோகம் ஹீநதரம் வா விசந்தி || 2.10 ||

தப: ச்ரத்தே யே - ஹ்யுபவஸந்த் - யரண்யே சாந்தா வித்வாம்ஸோ பைக்ஷசர்யாஞ் சரந்த: | ஸுர்யத்வாரேண தே விரஜா: ப்ரயாந்தி யத்ராம்ருத: ஸ புருஷோ-ஹ்யவ்யயாத்மா || 2.11 ||

பரீக்ஷ்ய லோகான் கர்மசிதான் ப்ராஹ்மணோ நிர்வேத - மாயாந்-நாஸ்த் - யக்ருத: க்ருதேன | தத் விஜ்ஞானார்தம் ஸ குருமேவாபிகச்சேத் ஸமித்பாணி: ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம் || 2.12 ||

---

2.12. கருமத்தாலடையகூடிய உலகங்களைப் பரீக்ஷித்துப் பிராம்மணனானவன், செயலற்ற . பரம் பொருள் ஒரு செயலாலும் அடைதற்குரியதன்றெனக் கண்டு வைராக்கியத்தை அடைய வேண்டும்.(அங்ஙனமறிந்த) அவன் 'தத்' எனும் அப் பரம்பொருளை உணர்ந்துய்யும் பொருட்டு ஸமித்தைக் கையுறையாய்க் கொண்டு வேதக் கேள்வியிற் சிறந்தவரும் பிரம்ம – நிஷ்டருமான குருவையே தேடியடைய வேண்டும்.

---

2.11. இதில் கூறிய லோகாந்தரப்ராப்தி மோக்ஷமன்று, ஏனெனில் 'இவ்விடத்திலேயே எல்லா இச்சைகளும் அற்றுப் போகின்றன ; தீரர்கள் எங்கும் நிறைந்த பொருளை எல்லாவிடத்திலும் கண்டு அமைதியில் நிலைபெற்றவர்களாய் அனைத்துள்ளும் புகுந்து நிற்கின்றனர்' என்று சுருதி கூறுவதால் பிரம்மஞானி லோகாந்தரம் போக வேண்டியதில்லை.(இஹைவ ஸர்வே ப்ரவிலீயந்தி காமா: | தே ஸர்வகம் ஸர்வத : ப்ராப்ய தீரா யுக்தாத்மான : ஸர்வமேவாவிசந்தி). (சங்).

ஒ. (ஊர்த்வரேத : ஸு ச, சப்தே ஹி) பி. சூ. 3.4.17.

तस्मै स विद्वा-नुपसन्नाय सम्यक् प्रशान्त-चित्ताय शमान्विताय ।
येनाक्षरं पुरुषं वेद सत्यं प्रोवाच तां तत्त्वतो ब्रह्मविद्याम् ॥ २.१३ ॥

## द्वितीयमुण्डके प्रथमः खण्डः

तदेतत् सत्यं यथा सुदीप्तात् पावकाद्विस्फुलिङ्गाः सहस्रशः प्रभवन्ते सरूपाः । तथाक्षराद्विविधाः सोम्य भावाः प्रजायन्ते तत्र चैवापियन्ति ॥ १.१ ॥

**2.13.** தன்னைத் தக்க முறையில் அணுகியவனும் சாந்தியெய்திய மனமுடையவனும், கருவிகரணங்களடங்கியவனும் ஆகிய அவனுக்கு, அந்த ஞானகுரு எதனால் ஸத்தியமும் அக்ஷரமும் ஆன பரம புருஷனை அவன் அறிவானோ அந்தப் பிரம்ம ஞானத்தை உள்ளபடி உணர்த்துவார்.

## இரண்டாவது முண்டகத்தில் முதற் கண்டம்;

**1.1.** (பின்வரும்) இதுவும் அந்த ஸத்தியமே. எங்ஙனம் கொழுந்துவிட்டெரியும் தீயிலிருந்து தீமயமான பொறிகள் ஆயிரக்கணக்காக உண்டாகின்றனவோ, அங்ஙனமே, சித்தமழகியவரே! பலவகைப்பட்ட உயிர்கள் அக்ஷரப் பிரம்மத்திடமிருந்து பிறந்து அதனிடமே லயிக்கின்றன.

---

2.12. ஓ. சா. உப. 8.1.6 (தத்யதேஹ கர்மசிதோ லோக: க்ஷீயதே).

குருமேவாபிகச்சேத்—பிரம்ம நிஷ்டனாகிய குருவில்லாமல் பிரம்ம ஞானத்தை அடையமுடியாதாகையால் அப்படிப்பட்ட குருவையே அடையவேண்டும் என்று கூறப்பட்டது.

தஸ்மை ஸ வித்வா-னுபஸந்நாய ஸம்யக் ப்ரசாந்த-சித்தாய சமான்விதாய | யேநாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம் ப்ரோவாச தாம் தத்வதோ ப்ரஹ்மவித்யாம் || 2.13 ||

## த்விதீய முண்டகே ப்ரதம : கண்ட :

ததேதத் ஸத்யம், யதா ஸுதீப்தாத் பாவகாத் விஸ்புலிங்கா : ஸஹஸ்ரச : ப்ரபவந்தே ஸரூபா : | ததாக்ஷராத் விவிதா : ஸோம்ய பாவா : ப்ரஜா யந்தே தத்ர சைவாபியந்தி || 1.1 ||

---

தபஸ்—ஒ. கீ. 17.14—16.
உற்றநோய் நோன்றலுயிர்க் குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்குரு. —குறள்

2.13. (புஸ்தகப்ரத்யயாதீத-யநதீதம் குருஸந்நிதெள | ப்ராஜதே ந ஸபாமத்யே ஜார-கர்ப இவ ஸ்த்ரிய: ) குருவை யண்டிக் கற்காமல் புஸ்தகத்திலிருந்து கற்ற கல்வி, ஜார புருஷனிடம் கருத்தரித்த ஸ்திரீயின் கர்ப்பத்தைப் போல் ஸபையில் பிரகாசிக்காது.

ஒ—(சாந்தா மஹாந்தோ நிவஸந்தி ஸந்தோ வஸந்த வல்லோக-ஹிதஞ் சரந்த: | தீர்ண: ஸ்வயம் பீம-பவார்ணவம் ஜநான் அஹேதுநா அன்யானபி தாரயந்த:||) வஸந்த ருதுவைப் போல் உலகுக்கு நன்மையே நாடும் சாந்தர்களான மஹா ஸாதுக்கள் உளர். பயங்கரமான பவஸாகரத்தைத் தாங்கள் தாண்டியவர்களாய் மற்ற ஜனங்களையும் பயனை நாடாமல் தாண்டுவிக்கின்றனர். (விவேக சூடாமணி: சங்.)

'ஸ்மாரக, வாரக, தாரக' என்ற மூன்று லக்ஷணங்கள் ஞான குருவிடம் காணப்படும். அவர் ஸத்தியத்தையே இடைவிடாது ஸ்மரிப்பவர்; அதற்கு விரோதமானதை விலக்குபவர்; அதில் தானும் நிலைபெற்றுப் பிறரையும் நிலை பெறும்படி செய்பவர். (மஹாவீரர்).

ஒ. (தத் வித்தி ப்ரணிபாதேன) கீ. 4.34.

दिव्यो ह्यमूर्तः पुरुषः स बाह्याभ्यन्तरो ह्यजः । अप्राणो ह्यमना: शुभ्रो ह्यक्षरात्परतः परः ॥ १.२ ॥

एतस्माज्जायते प्राणो मनः सर्वेन्द्रियाणि च । खं वायुर्ज्योतिरापः पृथिवी विश्वस्य धारिणी ॥ १.३ ॥

अग्निर्मूर्धा चक्षुषी चन्द्रसूर्यौ, दिशः श्रोत्रे, वाग्विवृताश्च वेदाः । वायुः प्राणो हृदयं विश्वं अस्य पद्भ्यां पृथिवी ह्येष सर्वभूतान्तरात्मा ॥ १.४ ॥

*1.2.* அப்பரமபுருஷன் ஒளிநிறைந்தவன், உருவில்லாதவன், உள்ளும் புறம்பும் ஒருங்கே உள்ளவன், பிறவாதவன், பிராணனில்லாதவன், மனதில்லாதவன் பரிசுத்தன், மலான அக்ஷரப் பிரம்மத்துக்கும் மேலானவன்.

1 3 இவனிடமிருந்தே பிராணன் உண்டாகிறது. மனமும் எல்லா இந்திரியங்களும், ஆகாசமும், வாயுவும், அககினியும், ஜலமும், அனைத்தையும் தாங்கும் பிருதிவியும் (இவனிடமிருந்தே) உண்டாகின்றன

*1 4.* எவனுக்கு அக்கினி தலையோ, சந்திர சூரியர்கள் கண்களோ, திக்குகள் காதுகளோ, பிரசித்தமான வேதங்கள் வாக்கோ, வாயு பிராணனோ, உலகனைத்தும் உள்ளமோ, எவனுடைய பாதங்களிடம் பூமி தோன்றிற்றோ அவனே உலகில் உண்டாய அனைத்துக்கும் அந்தராத்மா.

---

1 1. **அக்ஷராத்** — *அபரவித்தையின் காரியமான ஸம்ஸாரம் எதின் ஸாரத்தையுடையதோ, எந்த அக்ஷரமாகிய மூல காரணத்தினின்றும் உண்டாகியதோ எதில் லயமாகிறதோ அந்த அக்ஷரபுருஷன் தான் ஸத்தியம்.* **ததேதத்ஸத்யம்**—*அபரவித்தையின் விஷயமான கர்மபலம் ஆபேக்ஷிக ஸத்யம்; பரவித்தையின் விஷயமான பரமாத்ம தத்துவம் நிரபேக்ஷிக ஸத்யம்—('ஸத்யஸ்ய ஸத்யம்')*

திவ்யோ-ஹ்யமூர்த்த: புருஷ: ஸ பாஹ்யாப்யந்தரோ - ஹ்யஜ : | அப்ராணோ - ஹ்யமனா : சுப்ரோ-ஹ்யக்ஷராத்-பரத : பர : || 1.2 ||

ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மன: ஸர்வேந்த்ரியாணி ச । கம் வாயுர்-ஜ்யோதி-ராப : ப்ருதிவீ விச்வஸ்ய தாரிணீ || 1 3 ||

அக்னிர் மூர்தா சக்ஷுஷீ சந்த்ரஸூர்யௌ, திச: ச்ரோத்ரே வாக்-விவ்ருதாச்ச வேதா: | வாயு : ப்ராணோ, ஹ்ருதயம் விச்வம், அஸ்ய பத்ப்யாம் ப்ருதிவீ ஹ்யேஷ ஸர்வ-பூதாந்தராத்மா || 1.4 ||

---

1.2. சுப்ர :—பரிசுத்தன்—'த்யாயதீவ லேலாயதீவ' சிந்திக்கிறது போலிருக்கிறது, காரியம் செய்கிறது போலிருக்கிறது என்று ப்ரு. உபநிஷத்தில் சொல்லியிருப்பதை ஒப்பிடவும். இப்படி இரண்டு உபாதிகளில்லாததால் ஸகல உபாதிகளுமற்றது என்று அறியத்தக்கது. அதனால் சுத்தமாயிருக்கிறது.

ஒ. விசேஷண-பேத-வ்யபதேசாப்யாம் நேதரௌ.—பி. சூ. 12 22.

அக்ஷராத்பரத: பர :— ஒ. கூடஸ்தன் அக்ஷரபுருஷன். எவன் மூவுலகிலும் புகுந்து நின்று தாங்குகின்றவனோ மாறுதலில்லாதவனோ, இறைவனோ, பரமாத்மா என்று கூறப்பட்ட உத்தமபுருஷனோ அவன் வேறானவன். கீ. 15.17-18)

1.4. ஸகல பூதங்களிலும் பார்க்கிறவன், கேட்கிறவன், நினைக்கிறவன், அறிகிறவன் எல்லாம் விராட் ரூபியாகிய இவனே.

ஒ. (ரூபோபன்யாஸாச்ச) பி. சூ. 1.2.23.

ஒ. பூ : பாதௌ யஸ்ய நாபி : வியத் (விஷ்ணு ஸஹஸ்ர நாம தியான சுலோகம்).

तस्मादग्निः समिधो यस्य सूर्यः सोमात्पर्जन्य ओषधयः पृथिव्याम् । पुमान् रेतः सिञ्चति योषितायां बह्वीः प्रजाः पुरुषात्संप्रसूताः ॥ १.५ ॥

तस्मादृचः साम यजूꣳषि दीक्षा यज्ञाश्च सर्वे क्रतवो दक्षिणाश्च । संवत्सरश्च यजमानश्च लोकाः सोमो यत्र पवते यत्र सूर्यः ॥ १.६ ॥

तस्माच्च देवा बहुधा संप्रसूताः साध्या मनुष्याः पशवो वयाꣳसि । प्राणापानौ व्रीहियवौ तपश्च श्रद्धा सत्यं ब्रह्मचर्यं विधिश्च ॥ १.७ ॥

सप्त प्राणाः प्रभवन्ति तस्मात् सप्तार्चिषः समिधः सप्त होमाः । सप्त इमे लोका येषु चरन्ति प्राणा गुहाशया निहिताः सप्त सप्त ॥ १.८ ॥

*1.5.* இவனிடமிருந்தே சூரியனை ஸமித்தாகக் கொண்ட (ஸ்வர்க்கம் எனும்) அக்னி (உண்டாயிற்று). அந்த (அக்கினியின் அம்சமான சந்திரனிடமிருந்து மழை (உண்டாகிறது). அதிலிருந்து பூமியில் (அன்ன வடிவான) செடிகொடிகள். (அன்னத்திலிருந்து புருஷனிடம் ரேதஸ் உண்டாகிறது) புருஷன் ஸ்திரீயிடம் ரேதஸ்ஸைப் பொழிகிருன். பல பிரஜைகள் தோன்றுகின்றன. எல்லாம் (பரம) புருஷனிடமிருந்தே.

*1.6.* அவனிடமிருந்தே ருக் ஸாம யஜுர் வேத மந்திரங்களும் (யாக) தீக்ஷையும், யாகங்களும், எல்லாக் கிரதுக்களும், தக்ஷிணைகளும், வருஷம் (முதலிய காலமும்), யஜமானனும், எங்கு சந்திரன் புனிதமளிக்கிருனோ எங்கு சூரியன் புனிதமளிக்கிருனோ அந்த உலகங்களும் (உண்டாகின்றன)

தஸ்மாதக்னி : ஸமிதோ யஸ்ய ஸூர்ய : ஸோமாத் பர்ஜன்ய ஓஷதய : ப்ருதிவ்யாம் | புமான் ரேத : ஸிஞ்சதி யோஷிதாயாம் பஹ்வீ : ப்ரஜா : புருஷாத் ஸம்ப்ரஸூதா : || 1·5 ||

தஸ்மாத் - ருச : ஸாம யஜூம்ஷி தீக்ஷா யஜ்ஞாச்ச ஸர்வே க்ரதவோ தக்ஷிணாச்ச | ஸம்வத்ஸரச்ச யஜமானச்ச லோகா : ஸோமோ யத்ர பவதே யத்ர ஸூர்ய : || 1.6 ||

தஸ்மாச்ச தேவா ப்ஹுதா ஸம் - ப்ரஸூதா : ஸாத்யா மனுஷ்யா : பசவோ வயாம்ஸி | ப்ராணா பானௌ வ்ரீஹியவௌ தபச்ச ச்ரத்தா ஸத்யம் ப்ரஹ்மசர்யம் விதிச்ச || 17

ஸப்த ப்ராணா : ப்ரபவந்தி தஸ்மாத் ஸப்தார்ச்சிஷ : ஸமித : ஸப்த ஹோமா : | ஸப்த இமே லோகா, யேஷு சரந்தி ப்ராணா குஹாசயா நிஹிதா: ஸப்த ஸப்த || 1.8 ||

---

1.7. அவனிடமிருந்தே பலவகைப்பட்ட தேவர்களும் ஸாத்தியர்களும், மனிதர்களும் உண்டானார்கள். மிருகங்களும், பறவைகளும், பிராணனும் அபானனும், நெல்லும், யவையும், தவமும், சிரத்தையும், ஸத்தியமும் பிரம்ம சரியமும், சாஸ்திர விதியும் (உண்டாயின).

1 8. அவனிடமிருந்தே உண்டாயின ஏழு பிராணன்களும்; அவனிடமிருந்து ஏழு ஜ்வாலைகளும், ஏழு ஸமித்துக்களும், ஏழு ஹோமங்களும்; எவ்வேழாய் இருதயத்தின் குகையில் ஒடுங்கி நின்று (இங்ஙனம்) எவ்வேழாய் விரிந்த பிராணன்கள் சஞ்சரிக்கும் ஏழு லோகங்களும் (அவனிடமிருந்தேயாம்).

अतः समुद्रा गिरयश्च सर्वे ऽस्मात् स्यन्दन्ते सिन्धवः सर्वरूपाः । अतश्च सर्वा औषधयो रसश्च येनैष भूतैस्तिष्ठते ह्यंतरात्मा ॥ १.९ ॥

पुरुष एवेदं विश्वं, कर्म तपो, ब्रह्म परामृतम् । एतद्यो वेद निहितं गुहायां सोऽविद्याग्रन्थिं विकिरतीह सोम्य ॥ १.१० ॥

## द्वितीयमुंडके द्वितीयः खण्डः

आविः संनिहितं गुहाचरं नाम महत्पद-मत्रैतत् समर्पितम् एजत् प्राणन्निमिषच्च यदेतज्जानथ सदसद्वरेण्यं परं विज्ञानाद्यद्वरिष्ठं प्रजानाम् ॥ २.१ ॥

---

**1.9.** அவனிடமிருந்தே எல்லா சமுத்திரங்களும மலைகளும்; அவனிடமிருந்தே பலவாருய்ப் பெருகும் நதிகளும்; அவனிடமிருந்தே எல்லாச் செடிகொடி களும்; எந்த ரஸத்தால் (பஞ்ச) பூதங்களுடன் கூடி அந்தராத்மா (ஸூக்ஷ்ம சரீரம்) நிற்கிறதோ அந்த ரஸமும் (அவனிடமிருந்தேயாம்).

**1.10.** பரம புருஷனே இவ்வுலகனைத்தும்; தவமே கருமம்; பிரம்மமே சிறந்த அமிருதம். இதை (பிரம்மத்தை) இருதய குகையில் உள்ளதாக எவன் காண்கிருனே அவன், சித்தம் அழகியவனே, அவித்தையாகிற சிக்கலை அவிழ்த்தவனுகிருன்.

---

**1.8.** ஸப்தஹோமா:—ஏழு ஹோமங்களும் —

ஒ. 'யதஸ்ய விஜ்ஞானம் தஜ்ஜுஹோதி' எது விஷயங்களின் விஜ்ஞானமோ அதை (ஞானி) ஹோமஞ்செய்கிருன். இரண்டு கண்கள், இரண்டு காதுகள், இரண்டு நாசித் துவாரம், ஒருவாய் ஆக ஏழு அக்கினி).

ஒ. ஒரு சாரார் அடக்கமெனும் அக்கினியில் செவி முதலிய பொறிகளை ஹோமம் செய்கின்றனர். மற்றவர்கள் சப்தம் முதலிய விஷயங்களைப் பொறிகளாகிற அக்கினியில் ஹோமம் செய்கின்றனர். (கீ. 4,26.)

அத : ஸமுத்ரா கிரயச்ச ஸர்வே Sஸ்மாத் ஸ்யந் தந்தே ஸிந்தவ : ஸர்வரூபா : || அதச்ச ஸர்வா ஓஷதயோ ரஸச்ச யேநைஷ பூதைஸ் – திஷடதே ஹ்யந்தராத்மா || 1.9 ||

புருஷ ஏவேதம் விச்வம், கர்ம தபோ, ப்ரஹ்ம பராம்ருதம் | ஏதத் யோ வேத நிஹிதங் குஹாயாம் ஸோSவித்யாக்ரந்திம் விகிரதீஹ ஸோம்ய || 1.10 ||

## த்விதீயமுண்டகே த்விதீய: கண்ட:

ஆவி: ஸந்நிஹிதம் குஹாசரந் நாம மஹத்-பத மத்ரைதத் ஸமர்ப்பிதம் | ஏஜத்- ப்ராணந் - நிமிஷச்ச, யதேதஜ்ஜாநத, ஸதஸத் வரேண்யம், பரம் விஜ்ஞா னாத் யத்வரிஷ்டம் ப்ரஜாநாம் || 2.1 ||

---

## இரண்டாவது முண்டகத்தில் இரண்டாவது கண்டம்

2.1. (இருதய குகையில்) நிலைபெற்றுள்ளதாய்ப் பிரசித்தி பெற்று (ஆங்கிருந்தே ஐம்புலன்களின் வழி பிரகாசிக்கும்) பரஞ்சோதியே பரமபதம். அதனிடமே —சலனமும், பிராணனுடைய இயக்கமும், இமைத்த லும்—இது எல்லாம் ஸமர்ப்பிக்கப்பட்டுள்ளன. ஸத் தாகவும் அஸத்தாகவும் எல்லாப் பிரஜைகளுக்கும் போற்றி விரும்பத் தக்கதாகவும் அனுபவ அறிவுக்கும் அப்பாற்பட்டதாகவும் ஒப்புயர்வற்றதாகவும் உள்ளது எதுவோ அதை அறிவீர்களாக!

---

1. 9. ஒ. கரந்தசில் இடங்தொறும்
இடந்திகழ் பொருள் தொறும்
கரந் தெங்கும் பரந்துளன். —நம்மாழ்வார்.

ஒ. (விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்ன-மேகாம்சேன ஸ்திதோ ஜகத் ||) இந்த உலகனைத்தையும் என் யோக சக்தியின் ஒருபகுதியால் தாங்கி நான் நிற்கின்றேன் என்று உணர்.—கீ. 10. 42.

यदर्चिमद्यदणुभ्योऽणु च यस्मिंल्लोका निहिता लोकिनश्च ।
तदेत-दक्षरं ब्रह्म स प्राणस्तदु वाङ्मनः । तदेतत् सत्यं तदमृतं
तद्वेद्धव्यं सोम्य विद्धि ॥ २.२ ॥

धनुर्गृहीत्वौपनिषदं महास्त्रं शरं ह्युपासानिशितं संधयीत ।
आयम्य तद्भावगतेन चेतसा लक्ष्यं तदेवाक्षरं सोम्य विद्धि ॥ २.३ ॥

2.2. எது ஸ்வயம்பிரகாசமானதோ அணுவினும் சூக்ஷ்மமானதோ, எதனிடம் உலகங்கள் நிலைபெறுகின்றனவோ, உலகத்தினர் இருக்கிறார்களோ, அதுவே அழிவிலாத பிரம்மம், அதுவே பிராணன், அதுவே வாக்கும் மனதும், அதுவே ஸத்தியம், அதுவே அமிருதம். சித்தம் அழகியோனே! அதையே குறி பார்த்து எய்ய வேண்டும்.

2.3. சித்தம் அழகியோனே! உபநிஷத்திலுள்ள மஹா அஸ்திரமாகிய (ஓங்கார) வில்லை எடுத்து உபாசனையால் கூர்மை பெற்ற (உன் ஜீவனாகிய) அம்பைத் தொடுத்து பிரம்ம பாவனை நிறைந்த சித்தத்தால் அதை இழுத்து அந்த அக்ஷரப் பிரம்மமாகிய லக்ஷியத்தில் லயமடையச் செலுத்துவாய்.

---

1.10. 'எதை அறிந்தால் எல்லாம் அறியப்பட்டதாகும்?' என்ற கேள்விக்கு, எல்லாவற்றிற்குங் காரணமான பரமாத்மாவை அறிந்தால் எல்லாம் அறியப் பட்டதாகும் என்று இங்கு பதில் கூறப்படுகிறது. எல்லாப்பிராணிகளின் இருதய குகையில் இருக்கும் அமிருதமாகிய பரம் பொருளை 'நானே இது' என்று எவன் அறிகிறானோ அவன் அந்த அறிவால் இங்கு ஜீவித்துக் கொண்டிருக்கையிலேயே அறியாமையின் சிக்கலினின்று விடுபட்டு அவித்தையின் வாசனையை நாசம் செய்கிறான்.

யதர்ச்சிமத்-யதணுப்யோऽணு ச யஸ்மில்லோகா நிஹிதா லோகினச்ச | ததேத-தக்ஷரம் ப்ரஹ்ம ஸ ப்ராண்ஸ்-தது வாங்மன: | ததேதத் ஸத்யம் தத் அம்ருதம் தத் வேத்தவ்யம் ஸோம்ய வித்தி || 2.2 ||

தனுர்—க்ருஹீத்-வௌபநிஷதம் மஹாஸ்த்ரம் சரம்-ஹ்யுபாஸா-நிசிதம் ஸந்தயீத | ஆயம்ய தத்பாவ -கதேன சேதஸா லக்ஷ்யம் ததேவாக்ஷரம் ஸோம்ய வித்தி || 2.3 ||

---

2.1. உலகினில் உறையும் பொருள்கள் தோறும் பிரம்மம் பிரகாசிக்கிறதென்று முமுக்ஷு நினைக்க வேண்டியது. எது இருக்கிறதோ எது விளங்குகிறதோ 'அஸ்தி-பாதி' அது ஆத்மரூபம்; அல்லாததற்கு இருப்புமில்லை, விளக்கமும் இல்லை. ஆத்மசைதன்யம் தான் விளங்குகிறது.

அக்ஷர வஸ்துவானது தீபத்தைப்போல் எல்லாவற்றையும் பரோக்ஷமாய்த் தோற்றுவித்துக்கொண்டு, தானும் தோன்றுகிறது, ஜீவபாவத்தையடைந்து அபரோக்ஷமாகவும் இருக்கிறது. இந்த பாவனை ஆத்ம ஸாக்ஷாத்காரத்துக்குச் சாதனமாகும்.

ஆவி :—பிரம்மம் பிரகாச ரூபமாயிருக்கிறது.

2.3. அப்ரமத்தேன—கவனக் குறைவில்லாததும் விஷய நுகர்ச்சிகளால் கவரப்படாததுமான சித்தத்தின் உதவியால்.

ஒ. யதா ராகவநிர்முக்த: சர: ச்வஸநவிக்ரம: || ராமாயணம் 5.1.43.

ஒ. ஈசுவரன், குரு அடியார் இவர்கள் எல்லோருடைய அருளும் இருந்தாலும்கூட இன்னொரு அருள் இல்லையாகில் ஜீவன் நாசமடைவான். அந்த முக்கியமான அருள் தன் நெஞ்சினது; அதாவது தான் முக்தி அடைய வேண்டும் என்ற ஆர்வம் நெஞ்சில் உதிக்க வேண்டும். (ரா.கி)

प्रणवो धनुः शरो ह्यात्मा ब्रह्म तल्लक्ष्यमुच्यते । अप्रमत्तेन वेद्धव्यं शरव-त्तन्मयो भवेत् ॥ २.४ ॥

यस्मिन् द्यौः पृथिवी चान्तरिक्ष-मोतं मनः सह प्राणैश्च सर्वैः । तमेवैकं जानथ आत्मान-मन्या वाचो विमुञ्चथामृतस्यैष सेतुः ॥ २.५ ॥

अरा इव रथनाभौ संहता यत्र नाड्यः । स एषोऽन्तश्चरते बहुधा जायमानः । ओमित्येवं ध्यायत आत्मानं स्वस्ति वः पाराय तमसः परस्तात् ॥ २.६ ॥

2.4. பிரணவமே வில்; ஆத்மாவே அம்பு; பிரம்மமே அதன் குறி; கவனக் குறைவின்றி (குறி) எய்யப்பட வேண்டும். அம்பைப்போல் (அதன்பின் லக்ஷியத்துடன்) ஒன்றுபட்ட நிலை ஏற்படும்

2.5. பூவுலகும் (இடையிலுள்ள) அந்தரிக்ஷமும், ஸர்வப்பிராணன்களுடன் கூடிய மனமும் எவனிடம் (வஸ்திரத்தில் நூல் போலக்) கோக்கப்பட்டுள்ளதோ அந்த ஒருவனாகிய பரமாத்மாவையே அறிவீர்களாக. மற்ற வார்த்தைகளை விட்டொழிக! இதுவே மோக்ஷத்திற்குப் பாலம் (கரை).

2.4. ப்ரணவ :—ஒ. (ப்ரணவேன விஹீனம் யத் தன்-மந்த்ரம் ப்ராண-ஹீனகம்) பிரணவத்துடன் கூடாத மந்திரம் எதுவோ அது பிராணன் இல்லாததாம்.

(ப்ராணான் ஸர்வான் பரமாத்மனி ப்ரணமயதி இதி பரணவ:) எல்லாப் பிராணன்களையும் பரமாத்மாவிடம் வணங்கச் செய்வது பிரணவம்.

2.5. ஒ. (தமேவம் வித்வா-னம்ருத இஹ பவதி | நான்ய: பந்தா வித்யதே ऽயனாய) இங்ஙனம் பரமாத்மாவை அறிகிறவன் இங்கே சாகாதவனாகிறான். (சாவைக் கடந்து) செல்லுவதற்கு வேறு வழியில்லை.

ஒ. (த்யுப்வாத்-யாயதனம் ஸ்வ-சப்தாத்) பி. சூ. 1.3.1.

ப்ரணவோ தனு:; சரோஹ்யாத்மா, ப்ரஹ்ம தல்லக்ஷ்ய-முச்யதே | அப்ரமத்தேன வேத்தவ்யம், சரவத்-தன்மயோ பவேத் || 2.4 ||

யஸ்மின் த்யௌ: ப்ருதிவீ சாந்திரிக்ஷ-மோதம் மன: ஸஹ ப்ராணைச்ச ஸர்வை: | தமேவைகஞ் ஜானத ஆத்மானம், அன்யா வாசோ விமுஞ்சத, அம்ருதஸ்யைஷ ஸேது: || 2.5 ||

அரா இவ ரதநாபௌ ஸம்ஹதா யத்ர நாட்ய:| ஸ ஏஷோऽந்தச்-சரதே பஹுதா ஜாயமான:| ஓமித்யேவம் த்யாயத ஆத்மானம் ஸ்வஸ்தி வ: பாராய தமஸ: பரஸ்தாத் || 2.6 ||

---

26. தேர்ச்சக்கரத்தின் குடத்தில் ஆரக்கால்கள் (ஒன்று சேர்வது) போல் எங்கு (இருதயத்தில்) நாடிகள் கூடுகின்றனவோ (அங்கு) அந்த பரமாத்மா (அந்தக்கரண உபாதியினால்) பல விதமாய் மாறுபட்டுத் தோன்றிக்கொண்டு இருக்கிறது. அந்த ஆத்மாவை 'ஓம்' என்று இவ்வாறாக (முன்சொல்லிய முறையில்) தியானம் செய்யுங்கள். (அறியாமையாகிற) இருளுக்கு அப்பாலுள்ள கரைக்குச் செல்லும் உங்களுக்கு மங்களமுண்டாகட்டும்.

---

2.5. மற்ற வார்த்தைகளை விட்டொழிக—

மாம்பழங்களைச் சாப்பிடு; தோட்டத்தில் எத்தனை ஆயிரம் மரங்கள், எத்தனை கோடி இலைகள் என்று கணக்கிடுவதில் பயன் என்ன? (ரா.கி.)

ஆழமில்லாத குளத்தில் நீர் குடிக்க வேண்டுமானால் அதைக் கலக்காமல் மெதுவாகக் குடிக்கவேண்டும். கலக்கி விட்டால் அடியிலுள்ள சேறு மேலே கிளம்பி விடும். (ரா.கி.)

यः सर्वज्ञः सर्वविद्यस्यैष महिमा भुवि । दिव्ये ब्रह्मपुरे ह्येष व्योम्न्यात्मा प्रतिष्ठितः ॥ २.७ ॥

मनोमयः प्राण-शरीर-नेता प्रतिष्ठितोऽन्ने हृदयं सन्निधाय । तद्विज्ञानेन परिपश्यन्ति धीरा आनन्दरूप-ममृतं यद्विभाति ॥ २.८ ॥

भिद्यते हृदयग्रन्थि-श्छिद्यन्ते सर्वसंशयाः । क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥ २.९ ॥

2.7. எல்லாவற்றையும் ஸாமான்யமாய் அறிபவரும், எல்லாவற்றையும் விசேஷமாய் அறிபவரும் எவரோ, இப்புவியில் காணப்பெறும் மகிமை எல்லாம் எவருடையதோ அந்தப் பரமாத்மா திவ்வியப் பிரம்ம புரமாகிய சிற்றம்பலத்தில் (இருதயாகாசத்தில்) எழுந்தருளியுள்ளார்.

2.8. அவர் மனோரூபியாயும் சரீரத்தையும் பிராணனையும் நடத்துபவராயும் இருதயத்தில் (புத்தியில்) நிலைபெற்று உடலில் உறைபவராயும் விளங்குகிறார். ஆனந்த ரூபமாய் அழிவற்றதாய் எது பிரகாசிக்கின்றதோ அதை (ஆத்மப் பிரகாசத்தை) புத்திமான்கள் அனுபவ அறிவால் எங்கும் பூர்ணமாய்க் காண்கின்றனர்.

---

2.8. ப்ரதிஷ்டிதோன்னே—அன்னத்தால் வளரும் சரீரத்தில் (இருதய குகையில்) இருக்கிறான்.

2.9. ஒ—கட. 6. 15 ; பி. சூ. 1. 3. 2 ; 4. 1. 13. பிரம்ம ஸாக்ஷாத்கார ஞானத்தால் ஞானியின் உள்ளத்தில் அஞ்ஞானத்தின் வேர் அறுந்து போகிறது.

குயவன் சக்கரம் முன் சுற்றிவிட்ட வேகத்தால் சுழலுவதுபோல் பிராரப்த வசத்தால் ஞானியின் சரீரயாத்திரை மட்டும் நிகழும். சூரியன் பூமியைச் சுற்றுவில்லை என்ற ஞானம் உண்டான பின்னும் விவஹாரத்தில் அந்தப் பழைய அறிவு தொடர்ந்து நிற்பதுபோல் உலக உணர்ச்சி ஞானியிடம் நிகழும், அது அவன் அறிவை மயக்காது.

ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித், யஸ்யைஷ மஹிமா புவி | திவ்யே ப்ரஹ்மபுரே ஹ்யேஷ வ்யோம்ன்யாத்மா ப்ரதிஷ்டித: || 2.7 ||

மனோமய: ப்ராண-சரீர-நேதா ப்ரதிஷ்டிதோ ऽன்னே ஹ்ருதயம் ஸந்நிதாய | தத்விஜ்ஞானேன பரிபச்யந்தி தீரா, ஆனந்த ரூப-மம்ருதம், யத் விபாதி || 2.8 ||

பித்யதே ஹ்ருதய-க்ரந்திச்-சித்யந்தே ஸர்வ-ஸம்சயா: க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மின் த்ருஷ்டே பராவரே || 2.9 ||

---

2.9. அந்தப் பராபரவஸ்து பார்க்கப்பட்டதும் இவனுடைய இருதயமுடிச்சு அவிழ்கிறது, சந்தேகங்களெல்லாம் ஒழிகின்றன, கருமங்களெல்லாம் நாசமடைகின்றன.

---

கிருஷ்ணன் அவதரித்தபோது சிறையின் பூட்டுகள் தாமாகத் திறந்துகொண்ட வண்ணம், நமது உள்ளத்தில் அவன் தோன்றும்போது தளைகளெல்லாம் தெரித்துப் போகின்றன.

ஏ அர்ஜுன! எவ்வாறு மண்டியெரிகின்ற தீ விறகைச் சாம்பலாகச் செய்யுமோ அவ்வாறே ஞானத் தீ எல்லாக் கருமத்தையும் சாம்பலாகச் செய்துவிடும் (கீ.4.37)

'போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்,
(திருப்பாவை)

அநேக வருஷமாய் இருட்டாய்க் கிடந்த ஒரு அறையில் தீக்குச்சியைக் கிழித்தால் உடனே இருட்டு ஓடிப்போவது போல் ஆண்டவனுடைய அருள் உண்டானால் அநேக ஜன்மங்களில் செய்த பாவம் போயொழியும். (ரா.கி.

हिरण्मये परे कोशे विरजं ब्रह्म निष्कलम् । तच्छुभ्रं ज्योतिषां ज्योति-स्तद्यदात्मविदो विदुः ॥ २.१० ॥

न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः । तमेव भान्त-मनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ॥ २.११ ॥

ब्रह्मैवेद-ममृतं पुरस्ताद्ब्रह्म पश्चाद्ब्रह्म दक्षिणतश्चोत्तरेण । अधश्चोर्ध्वं च प्रसृतं ब्रह्मैवेदं विश्वमिदं वरिष्ठम् ॥ २.१२ ॥

## तृतीयमुंडके प्रथमः खण्डः

द्वा सुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते । तयोरन्यः पिप्पलं स्वाद्वत्त्यनश्नन्नन्यो अभिचाकशीति ॥ १.१ ॥

**2.10.** பொன் போன்று பிரகாசிக்கும் சிறந்த(புத்தி) கோசத்தில் குற்றமற்றதும் பிளவு படாததுமான பிரம்மம் (உளது). அது சுத்தமாயும் ஒளிகளுக்கெல்லாம் ஒளியாயும் உளது. அப்படியுள்ள அந்த ஆத்மாவை எவர்கள் அறிந்தவர்களோ அவர்களே (அறியவேண்டியதை) அறிந்தவர்கள்.

**2.11.** அங்கே சூரியன் பிரகாசிப்பதில்லை சந்திரனும் நக்ஷத்திரங்களும் (பிரகாசிப்பதில்லை); மின்னல் கொடிகளும் பிரகாசிப்பதில்லை; இந்த அக்கினி எங்ஙனம் (பிரகாசிக்கும்); ஸ்வயம் பிரகாசமுள்ள அவனைப் பின் பற்றியே அனைத்தும் பிரகாசிக்கின்றது; அவனொளியாலேயே இவையனைத்தும் விளங்குகின்றது.

---

நாடீபந்தம், அபிமானம் எனக் கிரந்திகள் இரண்டாம். எல்லா நாடிகளினின்றும் திரும்பி ஒரே நாடியைச் சாருங்கால் ஆத்மவொளி கட்டுவிட்டுத் தனதியல்புறும். அப்போது கர்த்தா அவனலனதலின் அவனுக்குக் கர்மங் கழன்றது. அவனுக்கன்னியம் யாது மிலதாதலின் சந்தேகமேதுவு முதியாது. ஒருமுறை கட்டறுந்தோன் மீண்டும் கட்டுறான். அதுவே உத்தம சக்திநிலை. அதுவே உத்தம சக்திநிலை.

(ரமண மஹரிஷி)

ஹிரண்மயே பரே கோசே விரஜம் ப்ரஹ்ம நிஷ்கலம் | தச்சுப்ரம் ஜ்யோதிஷாஞ் ஜ்யோதிஸ்-தத்ய- தாத்மவிதோ விது: || 2.10 ||

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர-தாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோடயமக்னி: | தமேவ பாந்த-மனுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி || 2.11 ||

ப்ரஹ்மைவேத - மம்ருதம் புரஸ்தாத்-ப்ரஹ்ம பச்சாத் ப்ரஹ்ம தக்ஷிணதச்சோத்தரேண | அதச் சோர்த்வஞ்ச ப்ரஸ்ருதம் ப்ரஹ்மைவேதம் விச்வ மிதம் வரிஷ்டம் || 2.12 ||

## த்ருதிய முண்டகே ப்ரதம: கண்ட:

த்வா ஸுபர்ணா ஸயுஜா, ஸகாயா, ஸமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே | தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்-வத்-யனச்னந்-நன்யோ அபிசாகசீதி || 1.1 ||

---

2.12. அழிவற்ற இந்த பிரம்மமே கிழக்கில், பிரம்மமே மேற்கில், பிரம்மமே தெற்கிலும் வடக்கிலும், கீழும் மேலும், நிறைந்திருக்கிறது. இந்த உலகம் முழுதும் சிறந்த பிரம்மமே.

## மூன்ருவது முண்டகத்தில் முதல் கண்டம்

1.1. அழகிய சிறகுடைய பக்ஷிகள் இரண்டு இணை பிரியாதவை; ஸமான அந்தஸ்துடையவை; ஸமானமாக ஒரே விருக்ஷத்தை வாசஸ்தானமாயடைந்தவை. அவற்றுள் ஒன்று ருசியுள்ள பழத்தை உண்கிறது; மற்றதோவெனின் உண்ணுமல் பார்த்துக் கொண்டு மாத்திரம் இருக்கிறது

समाने वृक्षे पुरुषो निमग्नो ऽनीशया शोचति मुह्यमानः । जुष्टं
यदा पश्यत्यन्य-मीश-मस्य महिमान-मिति वीतशोकः ॥ १.२ ॥

यदा पश्यः पश्यते रुक्मवर्णं कर्तार-मीशं पुरुषं ब्रह्मयोनिम् ।
तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्य-मुपैति ॥ १.३ ॥

प्राणो ह्येष यः सर्वभूतै-र्विभाति विजानन्विद्वान्न भवते
नातिवादी । आत्मक्रीड आत्मरतिः क्रियावान् एष ब्रह्मविदां
वरिष्ठः ॥ १.४ ॥

.2. ஸமான வாசஸ்தானமாக விருக்ஷத்தையு டையதாயினும் ஒரு பக்ஷி (ஜீவன்) தாழ்ந்த நிலையை யடைந்து, மதிமயங்கித் திறமையற்றுச் சோகிக்கிறது. அது எப்போது ஏற்றமுள்ளதும ஆளுந் திறமை வாய்ந்ததுமான மற்றதைப் பார்க்கிறதோ அப்போது அந்த மகிமை தன்னுடையதே என்று கண்டு சோகம் நீங்கியதாக ஆகிறது.

1.8. பிரம்மமாயும் அதன் பிறப்பிடமாயும் சிருஷ்டி கர்த்தாவாயும் ஈசனுயும் உள்ள பொன்போலொளிரும் புருஷனை எபபோது பார்க்குந் திறமையுடையவன் பார்க்கிருனே அப்போது அவ்வித்வான் புண்ணிய பாவங்களை உதறிவிட்டு மாசற்றவனுய்ப் பரம (புருஷனுடன்) ஸாம்யத்தை அடைகிருன்.

---

1.1. ஒ—கட. 3.1. இரண்டு பக்ஷிகள்—ஜீவனும் ஈசுவர னும். ருசியுள்ள பழத்தை—கர்மத்தாலுண்டாகும் இன்ப துன்பங்களை. ருசியுள்ள பழத்தையே புசிக்கின்ருன் என்று கருத்தல்ல; ருசியற்றதாயினும் ருசியுள்ளதெனக் கருதிப் புசிக்கிருன்.

ஒ. ஸ்தித்யதனுப்யாஞ்ச பி. ஸூ. 1.3.7. உபயவ்யபதே சாத்-வஹிகுண்டலவத். பி.ஸூ. 3.2.27.

ஸமானே வ்ருக்ஷே புருஷோ நிமக்னோ ऽனீசயா
சோசதி முஹ்யமான: | ஜுஷ்டம் யதா பச்யத்-
யன்ய மீச-மஸ்ய மஹிமான-மிதி வீதசோக: || 1.2 ||

யதா பச்ய : பச்யதே ருக்மவர்ணம் கர்த்தார
-மீசம் புருஷம் ப்ரஹ்மயோனிம் | ததா வித்வான்
புண்யபாபே விதூய நிரஞ்ஜன : பரமம் ஸாம்ய
முபைதி || 1.3 ||

ப்ராணோ - ஹ்யேஷ ய: ஸர்வபூதைர்-விபாதி
விஜானன் வித்வான் பவதே நாதிவாதீ || ஆத்ம-
க்ரீட ஆத்மரதி: க்ரியாவான், ஏஷ ப்ரஹ்மவிதாம்
வரிஷ்ட: || 1.4 ||

---

1 4. எந்தப் பிராணன் எல்லா உயிர்களிலும் காணப்படுகிறதோ அந்தப் (பிராணனுக்கும்)பிராணன் இவனே என்று அறிந்த வித்வான் (தனக்கு வேருக ஒன்றுமின்றி எல்லாந்தானாய்க் காண்பதால் தன்னை உயர்த்திப் பிறரைத் தாழ்த்தி) வீணாய் 'அதிவாதம்' பேசியவனாகான். ஆத்மாவினிடமே விளையாடுபவனாக வும் ஆத்மாவிடமே ஆனந்திப்பவனாகவும், அதையே கிரியையாகவும் உடைய இவன் பிரம்மஞானிகளிற் சிறந்தவன்.

---

1,3. கரியானது நெருப்புடன் சேர்ந்தால் உஷ்ணமும் ஒளியும்பெற்று நெருப்பாகவே ஆய்விடுவதுபோல் ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஸாம்யத்தை அடைகிறது.

1.4. ஆத்மரதி:க்ரியாவான்—என்று ஒரே பதமாகவுங் கொள்ளலாம். ஆத்மரதியைத் தவிர வேறு கிரியை இல்லாதவன் என்று பொருள். இரண்டு பதமாகக் கொண்டால், உலகக் கிரியைகளைச் செய்து கொண்டிருப்பினும், நிவிருத்தி மார்க்கத்தின் எல்லைவிட்டுத் தவறாதவன் என்று பொருள்

सत्येन लभ्य-स्तपसा ह्येष आत्मा सम्यज्ज्ञानेन ब्रह्मचर्येण
नित्यम् । अन्तः शरीरे ज्योति-र्मयो हि शुभ्रो यं पश्यन्ति यतयः
क्षीणदोषाः ॥ १.५ ॥

सत्यमेव जयते नानृतं सत्येन पन्था विततो देवयानः ।
येनाक्रमन्त्यृषयो ह्याप्तकामा यत्र तत् सत्यस्य परमं निधानम्
॥ १.६ ॥

बृहच्च तद्दिव्य-मचिन्त्यरूपं सूक्ष्माच्च तत्सूक्ष्मतरं विभाति ।
दूरात्सुदूरे तदिहान्तिके च पश्यत्स्विहैव निहितं गुहायाम् ॥ १.७ ॥

**1.5.** உடலுக்குள்ளேயே ஜோதிர்மயமாய்ப் பரிசுத்தமாய் விளங்கும் எந்த ஆத்மபொருளைச் சித்தமலம் நீங்கிய ஸந்நியாசிகள் காண்கின்றார்களோ, அந்த ஆத்மப்பொருள் அகண்டமான பிரம்மசரியத்தாலும் தெளிந்த ஞானத்தாலும், இடைவிடாத் தவத்தாலும் ஸத்தியத்தாலுமே அடையப்பெறும்.

**1.6.** ஸத்தியமே ஜயிக்கும், பொய்யன்று. ஆசைகள் பூர்த்தி பெற்ற ரிஷிகள் ஸத்தியத்தின் எல்லை நிலமாகிய இடத்திற்கு (மோக்ஷத்திற்கு) எந்த மார்க்கத்தில் செல்லுகின்றார்களோ, அந்த தேவயான மார்க்கம் ஸத்தியத்தாலேயே பரப்பப்பட்டுள்ளது.

---

1.5. யோ—எவன் உள்ளே சுகமுடையவனோ, உள்ளே களியாட்ட முடையவனோ, உள்ளே ஒளி உள்ளவனோ அந்த யோகி உயிர்வாழும்போதே பிரம்மமாய்ப் பிரம்மத்தில் முக்தியை யடைகின்றான். (கீ. 5.24)

தபஸ் :— மனஸச் - சேந்த்ரியாணாஞ்ச ஹ்யைகாக்ர்யம் பரமம் தப: | மனதும் இந்திரியங்களும் ஒருமுகப்பட்ட நிலையே சிறந்த தவம்.

ஸத்யேன லப்யஸ்-தபஸா-ஹ்யேஷ ஆத்மா ஸம்யஜ்-ஜ்ஞாநேந ப்ரஹ்மசர்யேண நித்யம் | அந்த: சரீரே ஜ்யோதிர்மயோ-ஹி சுப்ரோ யம் ப்ச்யந்தி யதய: க்ஷீணதோஷா: || 1.5 ||

ஸத்யமேவ ஜயதே நாந்ருதம் ஸத்யேன பந்தா விததோ தேவயான: | யேநாக்ரமந்தி ருஷயோ -ஹ்யாப்தகாமா யத்ர தத் ஸத்யஸ்ய பரமம் நிதானம் || 1.6 ||

ப்ருஹச்ச தத்திவ்ய-மசிந்த்ய-ரூபம் ஸூக்ஷ்மாச்ச தத் ஸூக்ஷ்ம-தரம் விபாதி | தூராத் ஸுதூரே ததி ஹாந்திகே ச பச்யத்ஸ்விஹைவ நிஹிதம் குஹா யாம் || 1.7 ||

---

**1.7.** அது பெரியதாகவும் ஒளி பொருந்தியதாகவும், சிந்திக்கவொண்ணாத உருவமுடையதாகவும் சூட்சுமத்திலும் சூட்சுமமாகவும் (இப்படித்தானென்று சொல்ல முடியாமல்) விளங்குகிறது. அது தூரமானதிற்கும் தூரமானதாகவும், இங்கேயே அருகிலும் (உளது). (ஞானிகளாய்) பார்க்கிறவர்களிடத்தில் இங்கேயே இருதய குகையில் வைக்கப்பட்டுள்ளது.

---

1.5. நித்யம்—எப்போதும்; நித்யம் ஸத்யேன, நித்யம் தபஸா நித்யம் ஸம்யக்ஜ்ஞானேனேதி ஸர்வத்ர நித்ய சப்தோ ஸந்தர்தீபிகா - ந்யாயேன அனுஷ்டேய: (சங்). ஓ.மு. உப. 1.16.

ஸத்தியம்—ஒ.—எல்லா விளக்கும் விளக்கல்ல சான் றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு. (திருக்குறள்)

பிரம்பசரியம்—ஒரு நீர்க்குடத்தில் சிறு துவாரம் இருந்தாலும் அதன் வழி நீர் எல்லாம் ஒழுகிப்போகும். பிரம்மசரியமில்லாதவன் மனம் அந்த ஓட்டைக் குடம் போன்றதே. (ரா.கி.)

न चक्षुषा गृह्यते नापि वाचा नान्यै-र्देवै-स्तपसा कर्मणा वा।
ज्ञानप्रसादेन विशुद्धसत्त्व-स्ततस्तु तं पश्यते निष्कलं ध्यायमानः
॥ १.८ ॥

एषोऽणुरात्मा चेतसा वेदितव्यो यस्मिन् प्राणः पञ्चधा संविवेश। प्राणैश्चित्तं सर्वमोतं प्रजानां यस्मिन् विशुद्धे विभवत्येष आत्मा
॥ १.९ ॥

1.9. எதனிடம் பிராணன் ஐந்து விதமாகப் புகுந்துளதோ, இந்திரியங்களுடன் கூட மக்களின் மனதும் எல்லாமும் எதனிடம் கோக்கப்பட்டுள்ளதோ அந்த ஆத்மா சூட்சுமமானது. சித்தத்தால் அறியக்கூடியது. பரிசுத்தமான உள்ளத்தில் அது தானுகவே பிரகாசிக்கும்.

1.8. (அந்த ஆத்மதத்துவத்தைக்) கண்ணுலோ, பேச்சாலோ வேறு இந்திரியங்களாலோ, தவத்தாலோ கருமங்களாலோ அறிய முடியாது. ஞானத் தெளிவால் பரிசுத்தமான மனமுடையவன் அந்த நிஷ்களமான பரிபூர்ணத்தைத் தியானத்தால் காண்கிறுன்.

---

ஆகார தோஷத்தால் சிலசமயம் விந்து நாசம் ஏற்படக் கூடும். அதைப் பற்றிக் கவலைப்படவேண்டிய அவசியமில்லை. ஆனல் ஸாதன மார்க்கத்தில் உண்மையான தீவிரமுடையவன் ஸ்திரீகளை நாடக்கூடாது. பெண்ணுசையை ஒழித்தவனுக்குப் பகவான் வெகு ஸமீபத்திலிருப்பான்.
(ரா.கி.)

ஒருவன் தனது விந்துவைப் பன்னிரண்டு வருஷம்வரை இழக்காது வைத்திருப்பானுனல் அரிய சக்திகளைப் பெறுவான். அப்போது 'மேதை நாடி' என்ற புதிய நரம்பு ஒன்று சரீரத்தில் உற்பத்தியாகின்றது. அதனுல் ஒருவன் எல்லா விஷயங்களையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவும் எல்லா விஷயங்களையும் தெரிந்து கொள்ளவுங் கூடும்.
(ரா.கி.)

ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா நான்யைர்-தேவைஸ் தபஸா கர்மணு வா | ஜ்ஞான - ப்ரஸாதேன விசுத்தஸத்வஸ்-ததஸ்து தம் பச்யதே நிஷ்கலம் த்யாயமான : || 1.8 ||

ஏஷோ ऽணுராத்மா சேதஸா வேதிதவ்யோ யஸ்மின் ப்ராண : பஞ்சதா ஸம்விவேச | ப்ராணைச்-சித்தம் ஸர்வ-மோதம் ப்ரஜானும் யஸ்மின் விசுத்தே-விபவத்யேஷ ஆத்மா || 1.9 ||

---

ஒழியாத விந்து வுடனிற்க நிற்கு
மழியாப் பிராணனதிபலஞ் சத்தி
யொழியாத புத்தி தபஞ் செப மோன
மழியாத சித்தி உண்டாம் விந்து வற்றிலே
(திருமந்திரம்)

1 8·—(ஜ்ஞானப்ரஸாதேன) ஞானத்தெளிவால்—தெளிந்த புத்தியால்—அது நித்தியமாயும் சமீபமாயுமிருந்தும், புத்தியானது அழுக்கடைந்த கண்ணுடி போலும் கலங்கின நீர் போலும் இருந்தால் அதை உணராது. உலகப்பற்று நீங்கிச் சுத்தமான புத்தியால் உணரலாம். அல்லது பரமாத்மப் பிரசாதத்தால்.

ஓ—அபி ச ஸம்ராதனே ப்ரத்யக்ஷானுமானப்யாம். பி. சூ. 3.2.24. ததவ்யக்தம் ஆஹ ஹி—பி.சூ. 3.2.23

பாதரஸந் தடவின கண்ணுடியில் ஒருவனுடைய முகம் பிரதிபலிக்கும். அதுபோலச் சக்தியையும் தூய்மையையும் பிரம்ம சரியத்தால் காப்பாற்றிக் கொண்டிருக்கிறவனுடைய இருதயத்தில் பகவானுடைய திவ்ய ரூபம் பிரதிபலிக்கும். (ரா.கி.)

ஓ—உள்ளம் உரை செயல்
உள்ளம் விம்மூன்றையும்
உள்ளிக்கெடுத்து—இறை
உள்ளிலொடுங்கே.—(நம்மாழ்வார்).

यं यं लोकं मनसा संविभाति विशुद्ध-सत्वः कामयते यांश्च कामान्। तं तं लोकं जयते तांश्च कामां-स्तस्मा-दात्मज्ञं हि अर्चयेद्-भूतिकामः ॥ १.१० ॥

## तृतीयमुण्डके द्वितीयः खण्डः

स वेदैतत् परमं ब्रह्म धाम यत्र विश्वं निहितं भाति शुभ्रम्। उपासते पुरुषं ये ह्यकामास्ते शुक्रमेत-दतिवर्तन्ति धीराः ॥ २.१ ॥

कामान् यः कामयते मन्यमानः स कामभि-र्जायते तत्र तत्र। पर्याप्त-कामस्य कृतात्मनस्तु इहैव सर्वे प्रविलीयन्ति कामाः ॥ २.२ ॥

*1.10.* தெளிந்த சித்தமுடையவன் எந்த எந்த உலகத்தை மனதால் ஸங்கல்பிக்கின்றனோ, எந்தெந்த போகங்களை விரும்புகின்றனோ அந்தந்த உலகத்தையும் அந்தந்த போகங்களையும் அடைகிறான். ஆகையால் பெரும்பேறு வேண்டுபவன் ஆத்மஞானியைப் பூஜிக்க வேண்டும்.

## மூன்றாவது முண்டகத்தில் இரண்டாவது கண்டம்

2.1. எதனிடம் உலகம் நிலைபெற்றுள்ளதோ, எது ஸ்வயஞ் ஜோதியாய்ச் சுத்தமாய் விளங்குகின்றதோ அந்த பரப்பிரம்ம நிலையை (ஆத்ம ஞானியாகிய) அவன் அறிவான். நிஷ்காமர்களாய், தீரர்களாய் உள்ள எவர்கள் (ஆத்ம ஞானியாகிய) இப்புருஷனைப் பூஜிக்கின்றார்களோ (அவர்கள்) மீண்டும் பிறவிக்கு விதையாகிய) சுக்கிலத்தைச் சாராமல் (பிறவியினின்று) விடுபடுகின்றனர்.

யம் யம் லோகம் மனஸா ஸம்விபாதி விசுத்த-ஸத்வ: காமயதே யாம்ச்ச காமான் | தம் தம் லோகம் ஜயதே தாம்ச்ச காமான்ஸ்-தஸ்மா-தாத்மஜ்ஞம் ஹி அர்ச்சயேத் பூதிகாம: 1.10 ||

## த்ருதீய முண்டகே த்விதீய: கண்ட:

ஸ வேதைதத் பரமம் ப்ரஹ்ம தாம யத்ர விச்வம் நிஹிதம் பாதி சுப்ரம் | உபாஸதே புருஷம் யே ஹ்ய காமாஸ்தே சுக்ரமேத-ததிவர்த்தந்தி தீரா: || 2.1 ||

காமான் ய: காமயதே மன்யமான: ஸ காமபிர்-ஜாயதே தத்ர தத்ர | பர்யாப்த-காமஸ்ய க்ருதாத்மனஸ்து இஹைவ ஸர்வே ப்ரவிலீயந்தி காமா: || 2.2 ||

---

2.2. (ஆசைகளை ஜயிக்காத) எவன் எந்த ஆசைகளைப்பற்றியே சிந்தித்து விரும்பி நிற்கின்ருனே அவன் (இறந்தபின்) அந்தந்த (ஆசைகளுக்குத்தக்க) இடங்களில் (அந்தந்த) ஆசைகளுடன் பிறக்கிருன். ஆசைகளின் பூர்த்தியடைந்து ஆத்மஸ்வரூபமாய் உள்ளவன் எவனே அவனுடைய ஆசைகளெல்லாம் இங்கேயே (இந்த ஜன்மத்திலேயே) நசித்துப்போகின்றன. (மறுபிறப்புக்குக் காரணமாவதில்லை)

---

2.2. ஓ. எவர்களுடைய மனது ஸமநிலையில் நிறுத்தப்பட்டதோ அவர்களால் இங்கேயே பிறவி ஜயிக்கப்பட்டது. (கீ. 5.19)

வெளிநோக்குடையவன் எத்தனை சாஸ்திரத்தைக்கற்ருலும் ஆத்மலாபம் கிட்டாது. அந்தர்முகமாய் நாடிப் பிரார்த்தித்தால்தான் ஆத்மலாபம் கிட்டும்.

ஓ—(அந்தர்முக – ஸமாராத்யா பஹிர்முகஸு துர்லபா) உள் நாட்டத்தால் நன்கு பூஜிக்கத்தக்கவள்; வெளிநாட்டத்தால் அடையமுடியாதவள் பரதேவதை (லலிதா ஸஹஸ்ரநாமம்).

नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन ।
यमेवैष वृणुते तेन लभ्य-स्तस्यैष आत्मा विवृणुते तनूं स्वाम् ॥ २.३ ॥

नाय-मात्मा बलहीनेन लभ्यो न च प्रमादा-त्तपसो वाप्य-लिङ्गात् । एतैरुपायै-र्यतते यस्तु विद्वांस्तस्यैष आत्मा विशते ब्रह्म धाम ॥ २.४ ॥

संप्राप्यैन-मृषयो ज्ञानतृप्ताः कृतात्मानो वीतरागाः प्रशान्ताः ।
ते सर्वगं सर्वतः प्राप्य धीरा युक्तात्मानः सर्वमेवाविशन्ति ॥ २.५ ॥

2.3. வேதங்களைக் கற்றதாலோ, நுண்ணறிவி ஞலோ, விரிந்த கேள்வியாலோ இந்த ஆத்மா (ஒருஸாத கனுல்) அடையப்படுவதன்று; (ஸாதகன் எப்போது) ஆத்மா ஒன்றையே (ஆத்மாவினுல்) பிரார்த்திக்கின் ருனே (அப்போது) அவனுல் அடையப்படும்; அவனுக்கு அப்போது இந்த ஆத்மா தன்னுடைய உண்மை ஸ்வரூ பத்தைப் பிரகாசப்படுத்துகின்றது.

2.4. இந்த ஆத்மா பலஹீனனுல் அடைய முடியா தது. (உலக இச்சையைவிட்டுவிட்டோம் என்ற) பிரமை யினுலாவது, ஆசைகள் நீங்காத (ஸந்நியாஸமில்லாத) தவத்தாலாவது (இந்த ஆத்மா அடையமுடியாது) எந்த வித்வான் இவ்வுபாயங்களைக் கைக்கொண்டு முயற்சிக்கின்ருனே அவனுடைய (பிரம்மபுரமாகிய) இருதயத்தில் இந்த ஆத்மா புகுந்து (உள்ளவராக) விளங்குகிருர்.

---

2.4. நாயமாத்மா பலஹீனேன—ஆத்ம நிஷ்டையாலுண் டாகும் மனேவன்மையில்லாதவனுலும், மனைவி மக்கள் வீட்டில் உள்ள பற்றின் மிகுதியால் செய்யவேண்டிய காரியங்களை மறந்து விட்டவனுலும், ஸந்நியாஸமில்லாத ஞானத்தாலும் ஆத்மாவை அடையமுடியாது. (சங்.)

நாயமாத்மா ப்ரவசனேன லப்யோ ந மேதயா ந பஹுனா ச்ருதேன | யமேவைஷ வ்ருணுதே தேன லப்யஸ்-தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தனூம் ஸ்வாம் || 2.3 ||

நாய-மாத்மா பலஹீனேன லப்யோ ந ச ப்ரமா தாத் தபஸோ வாப்-யலிங்காத் | ஏதை-ருபாயைர்-யததே யஸ்து வித்வான்ஸ் - தஸ்யைஷ ஆத்மா விசதே ப்ரஹ்ம தாம || 2.4 ||

ஸம்ப்ராப்யைனம் ருஷயோ ஜ்ஞானத்ருப்தா : க்ருதாத்மானோ வீதராகா : ப்ரசாந்தா : | தே ஸர்வகம் ஸர்வத : ப்ராப்ய தீரா யுக்தாத்மான : ஸர்வ மேவாவிசந்தி || 2.5 ||

---

2.5. இந்த ஆத்மாவை அடைந்த ரிஷிகள் அந்த ஆத்ம ஞானத்திலேயே திருப்தியெய்தியவர்கள், ஆத்ம ஸ்வரூபமாக ஆய்விட்டவர்கள், பற்று ஒழிந்தவர்கள், பரமசாந்தர்கள். இந்திரியங்களை யடக்கியவர்களும் தீரர்களுமாகிய அவர்கள் எங்கும் நிறைகின்ற பரம் பொருளை எங்குங் கண்டு (சரீரம் விழும்போது) எல்லாமாய் விளங்கும் அவ்வான்மப் பொருளில் இரண்டறக் கலக்கிருர்கள்.

---

ஏதைருபாயை :— தவவலிமை, திடச்சித்தம், ஸந்நியாஸத்துடன் கூடிய ஞானம் ஆகிய இவ்வுபாயங்களைக் கைக்கொண்டு.

பத்தியமின்றி மருந்து பயன் தராது. நியமநிஷ்டையும் வைராககியமும் இல்லாத முயற்சி ஞானத்தை உண்டாக்காது.

2.5. ஒ—இதுவே பிரம்மத்துடன் ஒன்றுபட்ட நிலை (பிராஹ்மீஸ்திதி); இதை அடைந்தபின் ஒருவன் மோகத்தில் அழுந்தமாட்டான்; கடைசி காலத்திலும் இதில் நின்று பிரம்ம நிர்வாணம் அடைகிறுன். (கீ. 2.72

वेदान्त-विज्ञान-सुनिश्चितार्थाः संन्यासयोगा-द्यतयः शुद्ध-सत्त्वाः ।
ते ब्रह्मलोके तु परान्तकाले परामृतात् परिमुच्यन्ति सर्वे ॥ २.६ ॥

गताः कलाः पञ्चदश प्रतिष्ठा देवाश्च सर्वे प्रति-देवतासु ।
कर्माणि विज्ञान-मयश्च आत्मा परेऽव्यये सर्व एकीभवन्ति ॥ २.७ ॥

यथा नद्यः स्यन्दमानाः समुद्रेऽस्तं गच्छन्ति नामरूपे
विहाय । तथा विद्वान्नामरूपा-द्विमुक्तः परात्परं पुरुष-मुपैति दिव्यम् ॥ २.८ ॥

2.6. வேதாந்த அனுபவஞானத்தின் பயனாகிய ஆத்மஸாக்ஷாத்காரத்தில் திடநிச்சயம் எய்தியவர்கள் ஸந்நியாஸ யோகத்தால் பரிசுத்தமான சித்தம் படைத்த யதிகள். அவர்கள் எல்லோரும் பராமிருதமாகிய பிரம்மத்தில் நிலைபெற்று (ஜீவன்முக்தர்களாகவே வாழ்ந்து அந்திய காலத்தில் (சரீரம் விழுந்த பின்) பற்றனைத்தினின்றும் அறவே விடுபடுகின்றனர் (எங்கும் நிறைந்த பிரம்மத்தில் லயிக்கின்றனர்)

2.7. (மோக்ஷகாலத்தில்) பதினைந்து கலைகளும் தத்தம் மூலஸ்தானத்திற்குச் சென்றுவிடுகின்றன; இந்திரியங்கள் அனைத்தும் தத்தம் அதிஷ்டான தேவதைகளிடம் (சென்று விடுகின்றன); (பற்று நீங்கிய) எல்லாக் கருமங்களும் விஜ்ஞான மயமான ஆத்மாவும் அழிவில்லாப் பரம்பொருளில் ஒன்றுபடுகின்றன.

2.8. எங்ஙனம் பெருகியோடும் நதிகள் நாமரூபங்களையிழந்து ஸமுத்திரத்தில் மறைகின்றனவோ; அங்ஙனம் ஞானி நாம ரூபங்களினின்று விடுபட்டு உயர்ந்ததற்கெல்லாம் உயர்ந்த தேஜோமயமான புருஷனை அடைகிறான்.

வேதாந்த - விஜ்ஞான - ஸுநிச்சிதார்தா : ஸந்ந்யாஸயோகாத்-யதய : சுத்த-ஸத்வா : | தே ப்ரஹ்ம-லோகே து பராந்தகாலே பராம்ருதாத் பரிமுச்யந்தி ஸர்வே || 2.6 ||

கதா : கலா : பஞ்சதச - ப்ரதிஷ்டா தேவாச்ச ஸர்வே ப்ரதி - தேவதாஸு | கர்மாணி விஜ்ஞானமயச்ச ஆத்மா பரேऽவ்யயே ஸர்வ ஏகீபவந்தி || 2.7 ||

யதா நத்ய : ஸ்யந்தமானா : ஸமுத்ரே ऽஸ்தங் கச்சந்தி நாமரூபே விஹாய | ததா வித்வான் நாம ரூபாத்- விமுக்த : பராத்பரம் புருஷ - முபைதி திவ்யம் || 2.8 ||

---

ஓ—உள்ளே இருக்கும் ஜனங்கள் விழித்துக்கொண்டிருக்கும் வீட்டில் திருடர் நுழைவதில்லை. நீ விழித்துக்கொண்டிருந்தால் உன் உள்ளத்தில் கெட்ட எண்ணங்கள் நுழையமாட்டா. (ரா கி.)

அவிழ்த்துவிடப்பட்ட யானையானது மரங்களையும் செடிகளையும் வேரோடு பிடுங்கிக்கொண்டு போகிறது. ஆனால் அதன் பாகன் அங்குசத்தால் அதன் தலையில் குத்தினதும் அது சாந்தமாகிவிடுகிறது. அதுபோல அடக்கியாளப்படாத மனம் வீண் எண்ணங்களில் ஓடுகிறது. விவேகம் என்ற அங்குசத்தால் இடிக்கப்பட்டதும் அது சாந்தமாக அமைகின்றது. (ரா.கி.)

2.6. ஓ—(சகுனீனா-மிவாகாசே ஜலே வாரிசரஸ்ய ச | பதம் யதா ந த்ருச்யேத ததா ஜ்ஞானவதாம் கதி: ||) ஆகாயத்தில் பறவைகளின் அடிச்சுவடும், நீரில் நீர்ப்பிராணிகளின் அடிச்சுவடும எப்படி காணப் படுவதில்லையோ அப்படி ஞானிகளின் கதியும் அறிய முடியாதது.

2.7. ஓ—(தானி பரே ததாஹ்யாஹ) பி சூ. 3.2.15

2.8. பராத்பரம் புருஷம்—மு. உப. 2. 1. 2—இல் 'திவ்யோ ஹ்யமூர்த்த: புருஷ:' என்று வர்ணிக்கப்பட்ட புருஷனை ஓ—(முக்தோபஸ்ருப்யவ்யபதேசாத்) பி.சூ. 1.3.2.

स यो ह वै तत्परमं ब्रह्म वेद ब्रह्मैव भवति, नास्याऽब्रह्म-वित्कुले भवति, तरति शोकं, तरति पाप्मानं, गुहाग्रन्थिभ्यो विमुक्तो ऽमृतो भवति ॥ २.९ ॥

तदेतदृचाभ्युक्तम् । क्रियावन्तः श्रोत्रिया ब्रह्मनिष्ठाः स्वयं जुह्वत एकर्षिं श्रद्धयन्तः । तेषामेवैतां ब्रह्मविद्यां वदेत शिरोव्रतं विधिवद्यैस्तु चीर्णम् ॥ २.१० ॥

2.9. எவன் அந்தப் பரப்பிரம்மத்தை யறிகிருனே அவன் குலத்தில் பிரம்மஞானமில்லாதவன் உண்டாக மாட்டான். அவன் சோகத்தைத் தாண்டுகிருன். இருதய முடிச்சுகளினின்று விடுபட்டு அமிருதத்வத்தை (சாகாத்தன்மையை) அடைகிருன்.

2.10. அது(பின் வரும்)மந்திரத்தாலும் கூறப்படுகிறது. 'கர்மானுஷ்டானம் செய்கிறவர்களாகவும்,வேதத்தைக்கற்றுணர்ந்தவர்களாகவும், பிரம்மத்தில் நாட்டமுடையவர்களாகவும், சிரத்தையுடையவர்களாகவும் (எவர்கள்) ஏகரிஷி என்ற பெயருள்ள அக்கினியில் ஹோமம் செய்கிருர்களோ, எவர்களால் (தலையில் அக்கினியைத் தாங்கும்) சிரோவிரதம் (என்னும் அதர்வ வேத விரதம்) முறைப்படி செய்யப்பட்டதோ அவர்களுக்கே இந்தப் பிரம்ம வித்தையைச் சொல்ல வேண்டும்'.

---

நதியானது சமுத்திரத்தை நாடியோடி, முகத்துவாரத்தையடைந்து, சமுத்திரத்தினுள் புகுந்து, இரண்டறக் கலப்பதுபோல் பிரம்மப்பிராப்திக்கு ஐந்துபடிகளைப் பிரம்மார்ப்பணம், பிரம்மயோகம், பிரம்ம ஸம்ஸ்பர்சம், பிராம்மீ ஸ்திதி, பிரம்ம நிர்வாணம் என்று கீதை கூறுகிறது.

ஸ யோ ஹ வை தத் பரமம் ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி நாஸ்யாऽப்ரஹ்மவித் குலே பவதி தரதி சோகம் தரதி பாப்மானம் குஹாக்ரந்திப்யோ விமுக்தோ ऽம்ருதோ பவதி || 2.9 ||

ததேதத் - ருசாப்யுக்தம் | க்ரியாவந்த: ச்ரோத்ரியா ப்ரஹ்மநிஷ்டா: ஸ்வயம் ஜுஹ்வத ஏகர்ஷிம் ச்ரத்தயந்த: | தேஷாமேவைதாம் ப்ரஹ்மவித்யாம் வதேத சிரோவ்ரதம் விதிவத்-யைஸ்து சீர்ணம் || 2.10 ||

---

2.9. 'மோக்ஷத்துக்கு அவித்தை தான் பிரதிபந்தமே தவிர வேறு பிரதிபந்தமில்லை. ஆகையால் எவனொருவன் இந்த உலகத்திலேயே அந்த சிரேஷ்டமான பிரம்மத்தை நான் தான் என்று சாக்ஷாத்கரிக்கிறானோ அவன் வேறு கதியை அடைகிறதில்லை. தேவதைகள் கூட பிரம்மத்தை அடையும் விஷயத்தில் அவனுக்கு விக்கினம் செய்ய முடியாது. தேவதைகளுக்கும் இவனே ஆத்மாவாயிருக்கிறான். ஆகையால் பிரம்மத்தை அறிபவன் பிரம்மமாகவே ஆகிறான்.'
ப்ரு. உப. 1.4.10. (சங்.)

ஒ.—ப்ரகரணாத். பி.சூ. 1.3.6

அதோ அனந்தேன ததா ஹி லிங்கம். பி.சூ. 3.2.26

புருஷார்த்தோऽத: சப்தாதிதி பாதராயண: பி.சூ.3.4.1,

ஒ. நான் பற்றொழிந்தவன் என்ற அஹங்காரத்தையும் யோக சித்தியால் ஏற்படும் வன்மையையும் அது சம்பந்த மான கருவத்தையும், பிராரப்த வசமாய் வருவனவற்றிலும் ஆசை, கோபம், உடைமை முதலிய பாவனைகளையும் ஒழித்து எனது என்ற எண்ண மில்லாதவனாய் மன அமைதி யுற்றவன் பிரம்மம் ஆவதற்கு உரியவனாகிறான். பிரம்மத்தில் நிஷ்டை கூடித் தெளிந்த மன முடையவன் துக்கிப்பதில்லை, ஆசைப்படுவதில்லை, எல்லா உயிர்களிடத்தும் சமமான வனாய் என்னிடம் ஒப்புயர்வற்ற பக்தியை அடைகிறான்.
—கீ. 18.51-52.

तदेतत् सत्य-मृषिरङ्गिराः पुरोवाच, नैत-दचीर्णव्रतो ऽधीते ।
नमः परमर्षिभ्यो नमः परमर्षिभ्यः ॥ २.११ ॥

ॐ भद्रं कर्णेभिः शृणुयाम देवाः । भद्रं पश्येमाक्षभिर्यजत्राः ।....

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

॥ इत्यथर्ववेदीया मुंडकोपनिषत्समाप्ता ॥

**2.11.** பரம்பொருளைப் பற்றிய இந்த ஸத்தியத்தை அங்கிரஸ ரிஷி (தன்னை முறைப்படி யணுகிய சௌனகருக்கு) முன் உபதேசித்தார். இதை விரதமனுஷ்டிக்காதவன் அத்தியயனம் செய்யக்கூடாது. (பிரம்ம ஸாக்ஷாத்காரத்தை எய்தியவர்களும் பரம்பரையாக உபதேசித்த முனிவர்களுமாகிய) பரம ரிஷிகளுக்கு நமஸ்காரம்; பரம ரிஷிகளுக்கு நமஸ்காரம்!

ஓம். தேவர்களே! காதுகளால் நாங்கள் நல்லதைக் கேட்கவேண்டும். பூஜைக்குரியவர்களே! கண்களால் நாங்கள் நல்லதைக் காணவேண்டும்!... முவ்வகையிலும் சாந்தி நிலவுக!

இங்ஙனம் அதர்வ வேத முண்டகோபநிஷத்து முற்றும்

தததேத் ஸத்யம் ருஷிரங்கிரா: புரோவாச நைத-தசீர்ண-வ்ரதோ ஽தீதே நம: பரமருஷிப்யோ நம: பரமருஷிப்ய: || 2.11 ||

ஓம் பத்ரம் கர்ணேபி: ச்ருணுயாம தேவா: |
பத்ரம் பச்யேமாக்ஷபிர்-யஜத்ரா:...
ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||
இதி அதர்வவேதீயா முண்டகோபநிஷத்
ஸமாப்தா ||

---

2.11. அங்கிரஸ ரிஷியானவர் விதிப்படித் தம்மை யணுகிய சௌனகாதி ரிஷிகளுக்குப் பிரம்மத்தை எப்படி உபதேசித்தாரோ அப்படியே மற்ற ஞானிகளும் தங்களை நாடும் முமுக்ஷுக்களுக்கு உபதேசிக்க வேண்டும் என்பது கருத்து. பசித்து உண்ட உணவே நன்றாக ஜீர்ணமாவது போல் விரதத்தை அனுஷ்டித்தவனுக்கே வித்தை பலனைக் கொடுக்கும் என்பதும் கூறப்பட்டது. ஒ—பி.சூ. 3.3.3.

**உபநிஷத்தின் விஷயச் சுருக்கம்**

.—ஆதிதேவனுன பிரம்மா தன் குமாரனுன அதர்வருக்குப் பிரம்ம வித்தையை உபதேசித்தார். பரம்பரையாக வந்த இந்த வித்தையை அங்கிரஸ மகரிஷி தன்னை நாடிய சௌனகருச்கு உபதேசித்தார். வித்தை இரண்டு விதம், ஒன்று உயர்ந்தது, மற்றது தாழ்ந்தது. எதனுல் பிரம்ம ஞானமுண்டாகிறதோ அது உயர்ந்தது; எதனுல் உலக ஞான முண்டாகிறதோ அது தாழ்ந்தது. சிலந்திப் பூச்சி தன்னிடமிருந்தே நூலை உண்டாக்கித் தானுகவே அதை இழுத்துக் கொள்வது போலும், பூமி செடி கொடிகளை உற்பத்தி செய்வது போலும், அக்ஷரப் பொருள் உலகத்தைத் தோற்றுவிக்கிறது.

கர்மானுஷ்டானத்தால் உயர்ந்த உலகங்களை எய்தலாம் எனினும் அவ்வுயர்ந்த உலகங்களும் இவ்வுலகத்தைப் போல் அழிவுள்ளவைகளே என ஆராய்ந்தறிந்து முமுக்ஷுவானவன் இதர விஷயங்களில் ஆசையை விட்டு பிரம்ம ஞானத்தை யடையும் பொருட்டு பிரம்ம நிஷ்டராகிய குருவைச் சரணடையவேண்டும்.

பரம புருஷன் ஒளிநிறைந்தவன் எனினும் உருவில்லாதவன்; உள்ளும் புறமும் உறைபவனெனினும், உண்டாகாதவன்; பிராணனில்லாதவன், மனமில்லாதவன், பரிசுத்தன், அக்ஷரத்துக்கும் அப்பாற்பட்டவன். உண்டாய அனைத்துக்கும் அந்தராத்மா, அவனிடமிருந்தே ஜ்வாலையிலிருந்து பொறிகள் போல மலைகளும் நதிகளும் மரங்களும் செடிகளும் பிராணி வர்க்கங்களும் அனைத்தும், உண்டாயின. அவனையறிய முயலுந் தவமே நமது கருமம். இந்த பிரம்மத்தைத் தன்உள்ளத்தே உறைவதாக எவன் காண்கிருனே அவன் அவித்தையினின்றும் விடுபடுகிருன்.

ஓங்கார வில்லை எடுத்து உபாசனையால் கூர்மைபெற்ற ஜீவனை அம்பாகத் தொடுத்து பிரம்ம பாவனை நிறைந்த சித்தத்தால் அதை இழுத்து அக்ஷரப் பொருளாகிய லக்ஷியத்தை நோக்கிப் பாய்ந்து அதனுள் ஊடுருவி நிற்பாய். ஒருவனுகிய பரமாத்மாவை அறிவதே கடமை. மற்ற வார்த்தைகளை விட்டொழிக. இதுவே மோக்ஷத்திற்குப் பாலம். அந்தப் பராபர வஸ்து பார்க்கப்பட்டதும் ஒருவனுடைய இருதய முடிச்சு அவிழ்கிறது, சந்தேகங்களெல்லாம் ஒழிகின்றன, கருமங்களெல்லாம் நாசமடைகின்றன.

சரீரமாகிற விருக்ஷத்தில் ஜீவனும் ஈசுவரனும் இணை பிரியாத அழகிய இரண்டு பக்ஷிகளைப்போல்உறைகின்றனர். ஜீவனுகிய பக்ஷி கசப்பும் தித்திப்புமான பழங்களை உண்டு மதிமயங்குகிறது. ஈசுவரனுகிய பக்ஷி உண்ணுமல் பார்த்துக்கொண்டிருக்கிறது. பொன்போலொளிரும் ஈச்வரப் பக்ஷியைப் பார்க்குந்தோறும் அதை நாடி ஜீவப்பக்ஷி முடிவில் (புண்ணிய பாவங்களாகிற) பழங்களை உதறித் தள்ளி விட்டு அத்துடன் ஸமநிலை எய்துகிறது. அழியாத ஆன்மப் பொருள் அகண்டமான பிரம்மசரியத்தாலும், தெளிந்த ஞானத்தாலும், தவத்தாலும், ஸத்தியத்தாலுமே அடையப் பெறும் ஸத்தியமே ஜயிக்கும், பொய்யன்று. அதை வாய்ப் பேச்சாலோ இந்திரிய வன்மையாலோ, கருமங்களாலோ அடைய முடியாது. ஞானத்தெளிவால் பரிசுத்தமான புத்தியுடையவன் தியானத்தால் காண்பான்.

எவன் எந்த எந்த ஆசைகளைச் சிந்தித்து விரும்பி நிற்கின்றுனே அவன் அந்தந்த ஆசைகளுடன் அந்தந்த இடங்களில் பிறவியடைகிறுன். ஆனுல் ஆத்மஞானியின் ஆசைகளெல்லாம் இங்கேயே நசித்துப் போகின்றன. அவனுக்குப் போக்கு வரவில்லை. எங்ஙனம் பெருகியோடும் நதிகள் நாமரூபங்களையிழந்து ஸமுத்திரத்துடன் ஒன்றுபடுகின்றனவோ அங்ஙனம் ஆத்மஞானி உயர்வற உயர்நலமுடைய பரம் பொருளிடம் இரண்டறக் கலக்கிறுன். பிரம்மமாகவே ஆகிறுன். அவன் சோகத்தைத் தாண்டுகிறுன், பாவத்தைத் தாண்டுகிறுன், சாகாத்தன்மையை யடைகிறுன்.

முண்டகோபநிஷத்திற்கு ஸ்ரீராமகிருஷ்ண தீபம் எனும்

உரை முற்றும்.

**உபநிஷத்தின் விஷயச் சுருக்கம்**

.—ஆதிதேவனுன பிரம்மா தன் குமாரனுன அதர்வருக்குப் பிரம்ம வித்தையை உபதேசித்தார். பரம்பரையாக வந்த இந்த வித்தையை அங்கிரஸ மகரிஷி தன்னை நாடிய சௌனகருக்கு உபதேசித்தார். வித்தை இரண்டு விதம், ஒன்று உயர்ந்தது, மற்றது தாழ்ந்தது. எதனுல் பிரம்ம ஞானமுண்டாகிறதோ அது உயர்ந்தது; எதனுல் உலக ஞான முண்டாகிறதோ அது தாழ்ந்தது. சிலந்திப் பூச்சி தன்னிடமிருந்தே நூலை உண்டாக்கித் தானுகவே அதை இழுத்துக் கொள்வது போலும், பூமி செடி கொடிகளை உற்பத்தி செய்வது போலும், அக்ஷரப் பொருள் உலகத்தைத் தோற்றுவிக்கிறது.

கர்மானுஷ்டானத்தால் உயர்ந்த உலகங்களை எய்தலாம் எனினும் அவ்வுயர்ந்த உலகங்களும் இவ்வுலகத்தைப் போல் அழிவுள்ளவைகளே என ஆராய்ந்தறிந்து முமுக்ஷுவானவன் இதர விஷயங்களில் ஆசையை விட்டு பிரம்ம ஞானத்தை யடையும் பொருட்டு பிரம்ம நிஷ்டராகிய குருவைச் சரணடையவேண்டும்.

பரம புருஷன் ஒளிநிறைந்தவன் எனினும் உருவில்லாதவன்; உள்ளும் புறமும் உறைபவனெனினும், உண்டாகாதவன்; பிராணனில்லாதவன், மனமில்லாதவன், பரிசுத்தன், அக்ஷரத்துக்கும் அப்பாற்பட்டவன். உண்டாய அனைத்துக்கும் அந்தராத்மா, அவனிடமிருந்தே ஜ்வாலையிலிருந்து பொறிகள் போல மலைகளும் நதிகளும் மரங்களும் செடிகளும் பிராணி வர்க்கங்களும் அனைத்தும், உணடாயின. அவனையறிய முயலுந் தவமே நமது கருமம். இந்த பிரம்மத்தைத் தன்உள்ளத்தே உறைவதாக எவன் காண்கிருனே அவன் அவித்தையினின்றும் விடுபடுகிருன்.

ஓங்கார வில்லை எடுத்து உபாசனையால் கூர்மைபெற்ற ஜீவனை அம்பாகத் தொடுத்து பிரம்ம பாவனை நிறைந்த சித்தத்தால் அதை இழுத்து அக்ஷரப் பொருளாகிய லக்ஷியத்தை நோக்கிப் பாய்ந்து அதனுள் ஊடுருவி நிற்பாய். ஒருவனுகிய பரமாத்மாவை அறிவதே கடமை. மற்ற வார்த்தைகளை விட்டொழிக. இதுவே மோக்ஷத்திற்குப் பாலம். அந்தப் பராபர வஸ்து பார்க்கப்பட்டதும் ஒருவனுடைய இருதய முடிச்சு அவிழ்கிறது, சந்தேகங்களெல்லாம் ஒழிகின்றன, கருமங்களெல்லாம் நாசமடைகின்றன.

சரீரமாகிற விருக்ஷத்தில் ஜீவனும் ஈசுவரனும் இணை பிரியாத அழகிய இரண்டு பக்ஷிகளைப்போல்உறைகின்றனர். ஜீவனாகிய பக்ஷி கசப்பும் தித்திப்புமான பழங்களை உண்டு மதிமயங்குகிறது. ஈசுவரனாகிய பக்ஷி உண்ணாமல் பார்த்துக்கொண்டிருக்கிறது. பொன்போலொளிரும் ஈசுவரப் பக்ஷியைப் பார்க்குந்தோறும் அதை நாடி ஜீவப்பக்ஷி முடிவில் (புண்ணிய பாவங்களாகிற) பழங்களை உதறித் தள்ளி விட்டு அத்துடன் ஸமநிலை எய்துகிறது. அழியாத ஆன்மப் பொருள் அகண்டமான பிரம்மசரியத்தாலும், தெளிந்த ஞானத்தாலும், தவத்தாலும், ஸத்தியத்தாலுமே அடையப் பெறும் ஸத்தியமே ஜயிக்கும், பொய்யன்று. அதை வாய்ப் பேச்சாலோ இந்திரிய வன்மையாலோ, கருமங்களாலோ அடைய முடியாது. ஞானத்தெளிவால் பரிசுத்தமான புத்தியுடையவன் தியானத்தால் காண்பான்.

எவன் எந்த எந்த ஆசைகளைச் சிந்தித்து விரும்பி நிற்கின்றானோ அவன் அந்தந்த ஆசைகளுடன் அந்தந்த இடங்களில் பிறவியடைகிறான். ஆனால் ஆத்மஞானியின் ஆசைகளெல்லாம் இங்கேயே நசித்துப் போகின்றன. அவனுக்குப் போக்கு வரவில்லை. எங்ஙனம் பெருகியோடும் நதிகள் நாமரூபங்களையிழந்து ஸமுத்திரத்துடன் ஒன்றுபடுகின்றனவோ அங்ஙனம் ஆத்மஞானி உயர்வற உயர்நலமுடைய பரம் பொருளிடம் இரண்டறக் கலக்கிறான். பிரம்மமாகவே ஆகிறான். அவன் சோகத்தைத் தாண்டுகிறான், பாவத்தைத் தாண்டுகிறான், சாகாத்தன்மையை யடைகிறான்.

முண்டகோபநிஷத்திற்கு ஸ்ரீராமகிருஷ்ண தீபம் எனும்

உரை முற்றும்.

# ॥ माण्डूक्योपनिषत् ॥

ॐ भद्रं कर्णेभिः शृणुयाम देवाः । भद्रं पश्येमाक्षभिर्यजत्राः। स्थिरैरङ्गैस्तुष्टुवाꣳसस्तनूभिः । व्यशेम देवहितं यदायुः । स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः । स्वस्ति नः पूषा विश्ववेदाः । स्वस्ति न-स्ताक्ष्र्यो अरिष्टनेमिः । स्वस्ति नो बृहस्पति-र्दधातु ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

ओमित्येत-दक्षर मिदꣳ सर्वं, तस्योपव्याख्यानं, भूतं भव-द्भविष्य-दिति सर्वमोंकार एव । यच्चान्यत् त्रिकालातीतं, तदप्योंकार एव ॥ १ ॥

## மாண்டூக்கியோபநிஷத்து

ஓம் தேவர்களே! காதுகளால் நாங்கள் நல்லதைக் கேட்கவேண்டும். பூஜைக்குரியவர்களே! கண்களால் நாங்கள் நல்லதைக் காணவேண்டும்...

ஓம் முவ்வகையிலும் சாந்தி நிலவுக.

1 'ஓம்' என்ற இந்த அக்ஷரமே இது எல்லாம். (இனி) அதன் விளக்கம சென்றது, நிகழ்வது, வரப் போவது என்ற எல்லாம் ஓங்காரமே. எது முக்காலத் துக்கும் அப்பாலுள்ளதோ அதுவும் ஓங்காரமே.

---

**உபநிஷத்தின் பெயரும் தொடர்பும்:**—இவ்வுபநிஷத் துக்கு இப்பெயர் வந்தகாரணந்தெளிவாய்த் தெரியவில்லை. இவ்வுபநிஷத்தின் ரிஷி மண்டூக ரூபியான வருணபகவான். 'இதி மண்டூகரூபீ ஸ்ந்ததர்ச வருண: ச்ருதிம்' என்று ஹரிவம்சம் கூறுகிறது. அதனால் இது மாண்டூக்கியோ பநிஷத்து எனப் பெயர் பெற்றதென்பர் சிலர். யோகி யினுடைய மனம் மூன்று அவஸ்தைகளையும் தவளை (மண் டூகம்) போலத் தாவிச் சென்று நாலாவதான துரீயத்தை யடைவதால் இந்த அனுபவத்தைக் கூறும் இவ்வுபநிஷத்து 'மாண்டூக்கியோபநிஷத்து' எனபபட்டது என்று கூறுவா ரும் உண்டு.

# மாண்டுக்யோபநிஷத்

ஓம் பத்ரங்கர்ணேபி: ச்ருணுயாம தேவா : | பத்ரம் பச்யே-மாக்ஷபிர்-யஜத்ரா : ஸ்திரை-ரங்கைஸ்-துஷ்டுவாம்ஸஸ் - தனூபி : | வ்யசேம தேவஹிதம் யதாயு : | ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்தச்ரவா : | ஸ்வஸ்தி ந : பூஷா விச்வவேதா : | ஸ்வஸ்தி நஸ்-தார்க்ஷ்யோ அரிஷ்ட-நேமி: | ஸ்வஸ்தி நோ ப்ருஹஸ்பதிர்-ததாது |

ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி : ||

ஓமித்-யேத - தக்ஷர - மிதம்-ஸர்வம், தஸ்யோப வ்யாக்யானம், பூதம்-பவத் - பவிஷ்ய - திதி ஸர்வ - மோங்கார ஏவ | யச்சான்யத்-த்ரிகாலாதீதம் ததப்-யோங்கார ஏவ || 1 ||

---

இது அதர்வ வேதத்தைச் சேர்ந்தது. இதில் அடங்கிய பன்னிரண்டு மந்திரங்களையும் நான்கு பாகங்களாகப் பிரிக்கலாம். 1 முதல் 6 வரை முதல் பாகம்; 7வது மந்திரம் இரண்டாம் பாகம்; 8 முதல் 11 வரை மூன்றும் பாகம். 12 வது நான்காம் பாகம். இதில் அதர்வ வேத மஹா வாக்கியமாகிய 'அயமாத்மா ப்ரம்ம' என்பது உபதேசிக்கப் படுகிறது. இதற்கு ஆதிசங்கரருடைய பரமகுருவான ஸ்ரீ கௌடபாதாசாரியார் காரிகை என்னும் வியாக்கியானத்தை எழுதியிருக்கிறார். இந்தக் காரிகையில் நாலு அத்தியாயங்கள் அடங்கியிருக்கின்றன. சங்கராசாரியார் இந்தக் காரிகையின் நான்கு அத்தியாயங்களுக்கும் பாஷ்யம் எழுதியிருக்கிறார். (மாண்டுக்ய-மேக-மேவாலம் முமுக்ஷூணாம் விமுக்தயே)முமுக்ஷுக்களின் விடுதலைக்கு மாண்டுக்கியம் ஒன்றே போதும் என்று முக்திகோபநிஷத்துக் கூறுகிறது. ஆதலால் இது உபநிஷத்துக்களுக்குள் மிகச் சிறியதாயினும் அனைத்தினும் மிகப் பெருமை வாய்ந்தது.

सर्वं ह्येतद्ब्रह्म, अयमात्मा ब्रह्म, सोऽयमात्मा चतुष्पात्
॥ २ ॥

जागरित-स्थानो बहिःप्रज्ञः, सप्ताङ्ग एकोनविंशति-मुखः स्थूलभुग्वैश्वानरः प्रथमः पादः ॥ ३ ॥

स्वप्नस्थानो ऽन्तःप्रज्ञः, सप्ताङ्ग एकोनविंशति-मुखः, प्रविविक्तभुक्, तैजसो द्वितीयः पादः ॥ ४ ॥

2. இது எல்லாம் பிரம்மமே. இந்த ஆத்மாவும் பிரம்மமே, அப்படியுள்ள இவ்வாத்மா நான்கு பாதங்களுள்ளது.

3. முதல் பாதம் ஸ்தூலத்தை யனுபவிக்கும் வைசுவாநரன்; ஏழு அங்கங்கள்; பத்தொன்பது முகங்கள், வெளிப் பிரஜ்ஞை; இருப்பிடம் ஜாக்கிரம்.

---

1. ஓமித்யேதத்—ஒ. கட. 2.15. தை. 1,8.1. தேவதா புத்தியுடன் உபாசிக்கப்பட்ட பிரதிமை அந்த தேவதையை யடையச் சாதகமாயிருப்பதுபோல் பிரம்ம புத்தியுடன் உபாசிக்கப்பட்ட ஓங்காரம் பிரம்மத்தை யடையச் சாதகமாயிருக்கிறது. ஸமாதி நிஷ்டன் ஓங்காரத்தை அனுசந்தானம் செய்துகொண்டு ஸ்தூலமான அகாரத்தைச் சூக்ஷ்மமான உகாரத்திலும், அதைக் காரணமாக மகாரத்திலும், அதைக் காரியகாரண அதீதமான பிரத்யகாத்மாவினிடத்திலும் உபஸம்ஹாரம் செய்து பிரத்யகாத்மாவாகவே இருந்து விடுகிறன்.

2. பிரம்ம வாசகமாகிய பிரணவமே எல்லாம் என்று முதல் மந்திரம் கூறிற்று. வாச்யமாகிய பிரம்மமே எல்லாம் என்று இரண்டாவது மந்திரம் கூறுகிறது. வாச்யமும் (சப்தமும்) பிரிக்கப்படாத ஒன்று என்று அறியவேண்டும்.

ஓ, (பாதா: மாத்ரா, மாத்ராச்ச பாதா :) பாதங்கள் ஓங்காரத்தின் மாத்திரைகள்; மாத்திரைகளே பாதங்கள் இந்த வாச்ய வாசக அபேதத்தைத்தான் இது எல்லாம் பிரம்மம் என்று இந்த மந்திரங் கூறுகிறது.

ஸர்வ ஃ ஹ்யேதத்-ப்ரஹ்ம, அயமாத்மா ப்ரஹ்ம ஸோSய-மாத்மா சதுஷ்பாத் || 2 ||

ஜாகரிதஸ்தாநோ, பஹி : ப்ரஜ்ஞ :, ஸப்தாங்க, ஏகோ நவிம்சதிமுக: , ஸ்தூலபுக் வைச்வாநர:, ப்ரதம : பாத : || 3 ||

ஸ்வப்னஸ்தாநோ Sந்த: ப்ரஜ்ஞ:, ஸப்தாங்க, ஏகோநவிம்சதிமுக:, ப்ரவிவிக்தபுக், தைஜஸோ, த்விதீய : பாத : || 4 ||

---

4. இரண்டாம் பாதம் (ஸூக்ஷ்ம வாசனைகளைத்) தனிமையில் அனுபவிக்கும் தைஜஸன்; ஏழு அங்கங்கள், பத்தொன்பது முகங்கள், உள் பிரஜ்ஞை; இருப்பிடம் ஸ்வப்னம்.

'அயமாத்மா ப்ரஹ்ம'—இது அதர்வவேதத்தின் சிரசு (அஹம் ப்ரஹ்மாஸ்மி—யஜுர்வேதம், தத்-த்வமஸி—ஸாம வேதம்; ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம—ருக்வேதம்). விசுவன், தைஜஸன், பிராஜ்ஞன், துரீயன் என்று வெவ்வேறு பெயருடன் விளங்கும் இந்த ஆத்மா பிரம்மம் என்று விரலை இருதயத்தில் வைத்து இது சுட்டிக் காட்டுவது போலிருக்கிறது

துரீயம் அடையத் தகுந்த ஸ்தானம். அதை அடைய சாதகமாக யுள்ளது ஓங்காரத்தின் பாதங்களின் உபாஸனை.

3. ஏழு அங்கங்கள்—ஓ. (அக்னிர்மூர்த்தா) ஸ்வர்க்கம் தலை, சந்திர சூரியர் கண்கள், திசைகள் காதுகள், வாயு மூச்சுக் காற்று, வேதங்கள் வாக்கு. ஆகாயம் இருதயம், பூமி பாதம். மு. உப. 2.1.4 வைசுவாநரனுக்கு விராட்ரூபம் சொன்னது இருவரும் ஒன்றேயாதலால்.

பத்தொன்பது முகங்கள்:—ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, பிராணன் ஐந்து, அந்தக் கரணம் நான்கு ஆகப் பத்தொன்பது. இவற்றின் வழி உலகை உண்டனுபவிப்பதால் இவைகள் முகங்கள் எனப்பட்டன.

விசுவம் என்ற ஸ்தூல உலகை அனுபவிக்கும் நரன் வைச்வாநரன்—ஆத்தியாத்மிகமான (வைசுவாநர) பிரத்யகாத்மாவும், ஆதிதெய்விகமான விராடாத்மாவும் ஒன்றே. விராட்டும் விசுவனும் ஸ்தூலப் பிரபஞ்சத்தின் அபிமானி

यत्र सुप्तो न कञ्चन कामं कामयते, न कञ्चन स्वप्नं पश्यति, तत्सुषुप्तम् । सुषुप्त-स्थान एकीभूतः, प्रज्ञानघन एवानन्दमयो-ह्यानन्दभुक्, चेतोमुखः प्राज्ञ-स्तृतीयः पादः ॥ ५ ॥

एष सर्वेश्वर एष सर्वज्ञ एषोऽन्तर्याम्येष योनिः सर्वस्य प्रभवाप्ययौ हि भूतानाम् ॥ ६ ॥

नान्तःप्रज्ञं, न बहिःप्रज्ञं, नोभयतःप्रज्ञं, न प्रज्ञानघनं, न प्रज्ञं, नाप्रज्ञम् । अदृष्ट-मव्यवहार्य-मग्राह्य-मलक्षण-मचिन्त्य-मव्यपदेश्य-मेकात्म-प्रत्ययसारं प्रपञ्चोपशमं शान्तं शिव-मद्वैतं, चतुर्थं मन्यन्ते स आत्मा स विज्ञेयः ॥ ७ ॥

5 மூன்றும் பாதம் ஆனந்தத்தை யனுபவிக்கும் ப்ராஜ்ஞன்; சித்தம் (ஒன்றே) முகம்; ஒருவனாய் நிற்ப வன்; பிரஜ்ஞையே வடிவானவன்; இருப்பிடம் ஸுஷுப்தி. தூங்குவோன் எந்நிலையில் விருப்பம் எதையும் விரும்புவதில்லையோ கனவு எதையுங் காண்பதில்லையோ அதுதான் ஸுஷுப்தி.

களானதால் ஒன்று என்றும், தைஜஸனும் ஹிரண்ணியகர்ப் பனும் சூக்ஷ்மப் பிரபஞ்ச அபிமானிகளாதலால் ஒன்று என்றும், பிராஜ்ஞனும் அவ்யாகிருதப் பிரளயத்தில் நிர்விசேஷமாயிருக்கும் அவ்வியாகிருதனும் ஒன்று என்றும் அறியவேண்டும்.

ஒ. பிரு. 4.5. (மதுப்பிராம்மணம்).

கட. 3.2. (ருதம் பிபந்தௌ).

4. 'ப்ரவிவிக்தபுக்' விசுவன் ஸ்தூல உணர்ச்சியை வெளிப் பட அனுபவிப்பதுபோல் தேஜோமயமாய் ஸ்வப்ன ஸ்தானத்திலுள்ள தைஜஸன் வாசனாமயமான சூக்ஷ்ம உணர்ச்சியைத் தனிமையில் அனுபவிக்கிறான்.

ஒ. 'அத்ரைவ தேவ: ஸ்வப்னே மஹிமான-மனுபவதி' ப்ரச். உப. 4.5

5. ஏகீபூத :—பகலில்–காணப்படும் பொருள்கள் தங்கள் குண விசேஷங்களை இழக்காமல் இரவு வந்தபோது பிரித்தறியப் படாமல் இருளில் முழுகிப்போவதுபோல், ஜாக்ரஸ்வப்ன விவகாரங்கள் ஸுஷுப்தியில் ஒன்றாய் விடுகின்றன.

ஒ. (ப்ராஜ்ஞேனாத்மனா ஸம்பரிஷ்வக்த): ப்ரு.உ.ப.4.3.21

யத்ர ஸுப்தோ ந கஞ்சன காமம் காமயதே, ந கஞ்சன ஸ்வப்னம் பச்யதி தத் ஸுஷுப்தம் | ஸுஷுப்தஸ்தான ஏகீபூத:, ப்ரஜ்ஞானகன ஏவானந்தமயோ ஹ்யானந்தபுக், சேதோமுக:, ப்ராஜ்ஞஸ் – த்ருதீய :- பாத : ‖ 5 ‖

ஏஷ ஸர்வேச்வர, ஏஷ ஸர்வஜ்ஞ, ஏஷோ ऽந்தர்யாம்யேஷ யோனி:ஸர்வஸ்ய,ப்ரபவாப்யயௌ ஹி பூதானாம் ‖ 6 ‖

நாந்த : ப்ரஜ்ஞம் ந பஹி: ப்ரஜ்ஞம், நோபயத: ப்ரஜ்ஞம், ந ப்ரஜ்ஞானகனம், ந ப்ரஜ்ஞம் நாப்ரஜ்ஞம் | அத்ருஷ்ட-மவ்யவஹார்ய-மக்ராஹ்ய-மலக்ஷண - மசிந்த்ய - மவ்யபதேச்ய–மேகாத்மப்ரத்யய-ஸாரம் ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவ-மத்வைதஞ் சதுர்த்தம் மன்யந்தே ஸ ஆத்மா ஸ விஜ்ஞேய : ‖ 7 ‖

---

6. இவனே எல்லாவற்றையும் ஆளும் ஈசுவரன் இவனே எல்லாவற்றையும் அறிந்தவன், இவனே உயிரனைத்தையும் உள்ளிருந்து நடத்துபவன், இவனே அனைத்துக்கும் பிறப்பிடமும், உண்டாயவற்றின் தோற்றமும் ஒடுக்கமும்.

7. நாலாவது பாதமாய்க் கருதப்படுபவன் உள் பிரஜ்ஞையில்லாதவன், வெளிப் பிரஜ்ஞையில்லாதவன்; இரண்டிற்குமிடையேயுள்ள பிரஜ்ஞையில்லாதவன்; பிரஜ்ஞை வடிவானவனுமன்று, சேதனனுமன்று, அசேதனனுமன்று; பார்க்க முடியாதவன், விவரிக்க முடியாவதன், கிரகிக்கமுடியாதவன், அடையாளமில்லாதவன், நினைக்க முடியாதவன் குறிப்பிடமுடியாதவன். ஒன்றே ஆத்மா என்ற அறிவால் அனுசரித்தறியத் தக்கவன்,

6. ஸுஷுப்தியில் ஞானமில்லை என்று சொல்லக் கூடாது. எல்லாக் கற்பனைகளுக்கும் ஆதாரமான ஞானம் இருக்கவே இருக்கிறது.

ஒ. (ந ஹி விஜ்ஞாதுர் விஜ்ஞாதேர் விபரிலோபோ வித்யதே) ப்ரு. 4.3.30,

सोऽयमात्मा ऽध्यक्षर-मोंकारः, अधिमात्रं पादा मात्राः, मात्राश्च पादा अकार उकार मकार इति ॥ ८ ॥

जागरितस्थानो वैश्वानरोऽकारः प्रथमा मात्राप्ते-रादिमत्वा-द्वा आप्नोति ह वै सर्वान् कामा-नादिश्च भवति, य एवं वेद ॥ ९ ॥

(பஞ்ச பூதங்களின் விரிவாகிய) பிரபஞ்சமற்றவன், சாந்தன், சிவன், இரண்டற்றவன். அவனையே துரீய மாக (நான்காவதாகக்) கருதுகின்றனர். அவனே ஆத்மா, அவனே அறியத்தகுந்தவன்.

---

7. **நான்காவது**;—இது எண்ணிக்கைக்கு விஷயமாகா விட்டாலும் மற்ற மூன்று நிலைகளைவிட வேறானதால் நான் காவது எனப்பட்டது. கயிறு, தடி, பூமியில் பிளவு இவை வெளிச்சக் குறைவில் பாம்புபோல் தோன்றினாலும், இவற்றி னின்று பாம்பு எப்படி வேறோ அப்படி ஆத்மா(ஸ ஆத்மா ஸ விஜ்ஞேய:).

"பந்தமறு மெய்ஞ்ஞான,மான மோனப்
பண்பொன்றை யருளி, அந்தப் பண்புக்கேதான்
சிந்தையில்லை நானென்னும் பான்மையில்லை
தேசமில்லை காலமில்லை திக்குமில்லை
தொந்தமில்லை நீக்கமில்லை பிறிவுமில்லை
சொல்லுமில்லை இராப் பகலாந் தோற்றமில்லை;
அந்தமில்லை ஆதியில்லை நடுவுமில்லை
அகமுமில்லை புறமுமில்லை யனைத்துமில்லை;
இல்லையில்லை யென்னினென்று மில்லாதல்ல
இயல்பாகி யென்றுமுள்ள வியற்கையாகிச்
சொல்லரிய தன்மையதா யான்றானென்னத்
தோன்றுதெல்லாம் விழுங்குஞ் சொருபமாகி
அல்லையுண்ட பகல்போல வவித்தையெல்லா
மடையவுண்டு தடையறவுன்னறிவைத் தானே
வெல்லவுண்டிங் குன்னையுந்தானாகக் கொண்டு
வேதமாய்ப் பேசாமை விளங்குந்தானே.!'

—தாயுமானவர்.

ஸோऽயமாத்மா ऽத்யக்ஷர-மோங்கார:, அதிமாத்ரம் பாதா மாத்ரா:, மாத்ராச்ச பாதா அகார உகார மகார இதி || 8 ||

ஜாகரிதஸ்தாநோ வைச்வாநரோ ऽகார:, ப்ரதமா மாத்ராப்தே-ராதிமத்வாத்வா; ஆப்நோதி ஹ வை ஸர்வான் காமாநாதிச்ச பவதி, ய ஏவம் வேத || 9 ||

---

8. அந்த இவ்வாத்மா (ஒரு) அக்ஷரத்தால் (குறிக்கப்படும்போது, ஓங்காரம்; (ஓங்காரத்தின் பகுதிகளாகிய) மாத்திரைகளால் (குறிக்கப்படும்போது) மாத்திரைகளே பாதங்கள் (ஜாக்ரம் ஸ்வப்னம் ஸுஷுப்தி துரீயம்); அகாரம், உகாரம், மகாரம் என்னும் (பகுதிகளாகிய) பாதங்களே (ஓங்காரத்தின்) மாத்திரைகள்.

9. (எல்லாவற்றையும்) அடையுந்தன்மையால் (எல்லாவற்றிற்கும்) முதல் மாத்திரையாகிய அகாரமே ஜாக்கிரத்தை இருப்பிடமாயுடைய வைசுவானரன்; எவன் இங்ஙனம்) அறிகிருனே அவன் எல்லா விருப்பங்களையும் முற்றும் அடைகிருன்; நிச்சயமாக (எல்லோருக்கும்) முதல்வனுகவும் ஆகிருன்.

---

8. அத்யக்ஷரம்—(அதிகத்வாச்ச நித்யத்வா-தத்யக்ஷர-முதாஹ்ருதம்) எல்லாவற்றிற்கும் மேலானதாலும் நாசமற்றதாலும் அத்யக்ஷரம்.

அதிமாத்ரம்—எல்லாம் அதனுடைய அம்சமாயிருப்பதால் அதிமாத்ரம்.

9. ஆப்தே :—(அகாரோ வை ஸர்வா வாக்) அகாரமே எல்லா சப்தங்களும் ; அகாரம் எல்லாவற்றிலும் வியாபித்திருப்பதால்.

ஒ. அக்ஷராணா-மகாரோऽஸ்மி—கீ. 10.33.

स्वप्नस्थान-स्तैजस उकारो द्वितीया मात्रोत्कर्षा-दुभयत्वाद्वोत्कर्षति ह वै ज्ञान-सन्ततिं समानश्च भवति, नास्या ऽब्रह्मवित्कुले भवति, य एवं वेद ॥ १० ॥

सुषुप्तस्थानः प्राज्ञो मकार-स्तृतीया मात्रा मिने-रपीतेर्वा मिनोति ह वा इदं॰ सर्व-मपीतिश्च भवति, य एवं वेद ॥ ११ ॥

अमात्र-श्चतुर्थो ऽव्यवहार्यः प्रपञ्चोपशमः शिवो ऽद्वैत एव-मोंकार आत्मैव संविशत्यात्मनात्मानं, य एवं वेद, य एवं वेद ॥ १२ ॥

ॐ भद्रं कर्णेभिः शृणुयाम देवाः । भद्रं पश्येमाक्षभिर्यजत्राः ।....

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

॥ इति माण्डूक्योपनिषत्समाप्ता ॥

10. உயர்வாலும், உபய (இரட்டை) ஸம்பந்தம் உடைமையாலும் இரண்டாவதுமாத்திரையாகிய உகாரம் ஸ்வப்னத்தை இருப்பிடமாயுடைய தைஜஸன்; எவன் இங்ஙனம் அறிகிருனே அவன் ஞானப்பெருக்கை உண்மையில் உயர்த்துவான்; அன்றியும் சுகதுக்கம் முதலிய இரட்டைகளில் ஸமபுத்தியுடையவனுவான். அவன் குலத்தில் பிரம்மஞானமில்லாதவன் தோன்ற மாட்டான்.

11. அளவைக் காட்டுந் தன்மையானும், தன்னிடம் மறைத்துக்கொள்ளுந் தன்மையாலும் மூன்றுவது மாத்திரையாகிய மகாரமே ஸுஷுப்தியை ஸ்தானமாயுடைய பிராஜ்ஞன். எவன் இங்ஙனம் அறிகிருனே அவன் (அறிவால் உலகனைத்தையும்) அளவிடக்கூடியவனுகவும், எல்லாவற்றையும் (தன்னிடம்) மறைத்துக் கொள்ளக் கூடியவனுகவும் ஆகிருன்.

ஸ்வப்ன - ஸ்தானஸ் - தைஜஸ உகாரோ, த்வி தீயா மாத்ரோத்கர்ஷா - துபயத்வாத்வோத்கர்ஷதி ஹ வை ஜ்ஞானஸந்ததிம், ஸமானச்ச பவதி, நாஸ்யா ऽப்ரஹ்மவித் குலே பவதி, ய ஏவம் வேத || 10 ||

ஸுஷுப்தஸ்தான : ப்ராஜ்ஞோ மகாரஸ்-த்ரு தீயா-மாத்ரா மிதே - ரபீதேர்வா-மினோதி ஹ வா இதஃ ஸர்வ-மபீதிச்ச பவதி ய ஏவம் வேத || 11 ||

அமாத்ரச் - சதுர்த்தோ ऽவ்யவஹார்ய : ப்ரபஞ் சோபசம : சிவோ ऽத்வைத ஏவமோங்கார ஆத் மைவ ; ஸம்விசத்-யாத்மனாத்மானம் ய ஏவம் வேத, ய ஏவம் வேத || 12 ||

ஓம் பத்ரங்கர்ணேபி : ச்ருணுயாம தேவா : |

பத்ரம் பச்யேமாக்ஷபிர்யஜத்ரா : | ....

ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி : ||

|| இதி மாண்டுக்யோபநிஷத் ஸமாப்தா ||

---

12. இரண்டற்றதாயும் சிவமாயும் பிரபஞ்சம் லயிக்கும் இடமாயும், விவகரிக்க முடியாததாயும் உள்ள நாலாவது (ஸ்தானம்) மாத்திரையில்லாதது. இங்ஙனம் ஓங்காரம் ஆத்மாவே. எவனெவன் இங்ஙனம் அறிகி ருனே அவனவன் தன்னால் தானாகிய ஆத்மாவை யடைகிருன்.

இங்ஙனம் மாண்டுக்கியோபநிஷத்து முற்றும்.

---

11. அபீதே :—விருத்தி ஞானத்தின் லயத்திற்குக் காரணமாயிருப்பதால்.

# ॥ गौडपादकारिका: ॥

## १. आगम-प्रकरणम्

बहि:प्रज्ञो विभु-र्विश्वो ह्यन्त:प्रज्ञस्तु तैजस: ।
घन-प्रज्ञस्तथा प्राज्ञ एक एव त्रिधा स्मृत: ॥ १.१ ॥
दक्षिणाक्षि-मुखे विश्वो मनस्यन्तस्तु तैजस: ।
आकाशे च हृदि प्राज्ञ-स्त्रिधा देहे व्यवस्थित: ॥ १.२ ॥
विश्वो हि स्थूलभुङ्-नित्यं तैजस: प्रविविक्तभुक् ।
आनन्दभुक् तथा प्राज्ञस्त्रिधा भोगं निबोधत ॥ १.३ ॥
त्रिषु धामसु यद्भोज्यं भोक्ता यश्च प्रकीर्तित: ।
वेदैत-दुभयं यस्तु स भुञ्जानो न लिप्यते ॥ १.५ ॥
इच्छा-मात्रं प्रभो: सृष्टि-रिति सृष्टौ विनिश्चिता: ।
कालात् प्रसूतिं भूतानां मन्यन्ते काल-चिन्तका: ॥ १.८ ॥
भोगार्थं सृष्टि-रित्यन्ये क्रीडार्थ-मिति चापरे ।
देवस्यैष स्वभावोऽय-माप्तकामस्य का स्पृहा ॥ १.९ ॥

## கௌடபாத காரிகை

### 1. ஆகமப் பிரகரணம்

**1.1.** விசுவன் வெளிப் பிரஜ்ஞையுடையவன் எங்கும் வியாபிப்பவன்; தைஜஸன் உள் பிரஜ்ஞையுடையவன்; அவ்வாறே பிராஜ்ஞன் உள்வெளியற்ற பிரஜ்ஞையே உருக்கொண்டவன். (இவ்விதம்) ஒருவனே மூன்று வடிவில் கூறப்படுகிறான்.

1.2. வலது கண்ணின் முன் விசுவரூபியாயும், மனத்தினுள் தைஜஸரூபியாயும், இருதய ஆகாசத்தில், பிராஜ்ஞரூபியாயும், (ஒருவனே) மூன்று வடிவில் தேகத்தில் இருக்கிறான்.

1.3. விசுவன் எப்போதும் ஸ்தூலமான போகங்களையனுபவிப்பவன்; தைஜஸன் வாஸனாமயமான ஸூக்ஷ்ம போகங்களை யனுபவிப்பவன். அவ்வாறே பிராஜ்ஞன் ஆனந்தத்தை யனுபவிப்பவன். (இவ்விதம் போகம் முவ்வகைப்படும்.

1.5. மூன்று நிலைகளிலும் எது போஜ்யமோ அதையும், எவன் போக்தாவோ அவனையும் எவன் அறிகிறானோ, அவன் அனுபவிப்பவனாயினும் பற்றப்படுவதில்லை.

1.8. சிருஷ்டி விஷயத்தில் சிலர் சிருஷ்டியானது ஈசுவரனுடைய இச்சைமாத்திரம் என்று நிச்சயித்திருக்கிறார்கள்; காலத்தை ஆராய்பவர்கள் காலத்திலிருந்து பொருள்களின் சிருஷ்டி ஏற்பட்டதாய் எண்ணுகிறார்கள்.

1.9. ஈசுவரனுடைய போகத்தின் பொருட்டு என்று சிலரும், விளையாட்டுக்காக என்று வேறு சிலரும் எண்ணுகிறார்கள். இந்த சிருஷ்டி ஈசுவரனுடைய இயற்கை (ஒரு காரணமும் இல்லை). பூர்ணகாமனுக்கு ஆசை ஏது?

1.1. ப்ராஜ்ஞன்—ப்ர + அஜ்ஞன். ஸுஷுப்தியில் பிரகாசத்துடன் அஜ்ஞான விருத்தி சேர்ந்திருக்கிறது. இருட்டு வீட்டில் சிறு விளக்குள்ள சிறு இடம் பிரகாசிப்பது போன்றது அந்தப் பிரகாசம். அங்கே அஹங்காரம் மட்டும் மின்மினிப் பூச்சியைப்போல் பிரகாசிக்கிறது—மற்றொன்றும் விளங்கவில்லை.

निवृत्तेः सर्वदुःखाना-मीशानः प्रभु-रव्ययः ।
अद्वैतः सर्व-भावानां देवस्तुर्यो विभुः स्मृतः ॥ १.१० ॥
कार्य-कारण-बद्धौ ताविष्येते विश्व-तैजसौ ।
प्राज्ञः कारण-बद्धस्तु द्वौ तौ तुर्ये न सिध्यतः ॥ १.११ ॥
नाऽऽत्मानं न परं चैव न सत्यं नापि चानृतम् ।
प्राज्ञः किञ्चन संवेत्ति तुर्यं तत् सर्वदृक् सदा ॥ १.१२ ॥
द्वैतस्याग्रहणं तुल्य-मुभयोः प्राज्ञ-तुर्ययोः ।
बीज-निद्रायुतः प्राज्ञः सा च तुर्ये न विद्यते ॥ १.१३ ॥
स्वप्ननिद्रायुतावाद्यौ प्राज्ञ-स्त्वस्वप्न-निद्रया ।
न निद्रां नैव च स्वप्नं तुर्ये पश्यन्ति निश्चिताः ॥ १.१४ ॥
अन्यथा गृह्णतः स्वप्नो निद्रा तत्त्व-मजानतः ।
विपर्यासे तयोः क्षीणे तुरीयं पद-मश्नुते ॥ १.१५ ॥
अनादि-मायया सुप्तो यदा जीवः प्रबुध्यते ।
अज-मनिद्र-मस्वप्न-मद्वैतं बुध्यते तदा ॥ १.१६ ॥

**1.10.** எல்லாத் துன்பங்களினின்றும் விடுதலைக்காக (நான்காவதான) துரீயன், ஆள்பவன், பிரபு, மாறுதலில்லாதவன், பாவனைகள் அனைத்துள்ளும் இரண்டற்றவன், பிரகாசமுள்ளவன் எங்கும் வியாபித்தவன் என்று நினைக்கப்படுகிறான்.

**1.11.** விசுவனும் தைஜஸனும் காரியகாரணத்தால் கட்டப்பட்டவர்களெனச் சொல்லப்படுகிறார்கள்; பிராஜ்ஞன் காரணத்தால் கட்டப்பட்டவன்; இக்கட்டுகள் (காரிய காரணம்) இரண்டும் துரீயனிடத்தில் இல்லை.

1.12. பிராஜ்ஞன் தன்னையோ, தனக்கு வேறான தையோ, மெய்யையோ, பொய்யையோ, எதையும் நன்றாக அறிகிறதில்லை. ஆனால் துரீயனோ எப்போதும் எல்லாவற்றையும் காண்பவனாக இருக்கிறான்.

1.13. துவைதத்தைக் காணாமை என்பது பிராஜ்ஞன், துரீயன் இருவருக்கும் சமம். பிராஜ்ஞன் அறியாமையெனும் உறக்கத்துடன் கூடியவன்; அது துரீயனிடத்தில் இல்லை.

1.14. முதல் இருவரும் (விசுவனும் தைஜஸனும்) கனவுகளை (ஒன்றை மற்றொன்றாக)க் காணும் அஜ்ஞான நித்திரையுடன் கூடியவர்கள்; பிராஜ்ஞனோ கனவில்லாத அஜ்ஞான நித்திரையுடன் கூடியவன். துரீய நிலையில் திட நிச்சயமுள்ளவர்கள் நித்திரையையோ கனவையோ காண்பதில்லை.

1.15 ஒன்றை மற்றொன்றாகக் கொள்பவனுக்குக் கனவு (உண்டாகிறது); தத்துவத்தை அறியாதவனுக்கு அஜ்ஞானமாகிற நித்திரை (உண்டாகிறது); இவற்றின் விபரீதங்கள் நசிக்கும்போது நான்காவதான நிலையை (ஜீவன்) அனுபவிக்கிறான்.

1.16. அனாதிமாயையால் தூங்கும் ஜீவன் எப்போது விழித்துக்கொள்கிறானோ அப்போது பிறப்பில்லாமலும் நித்திரையில்லாமலும் ஸ்வப்னமில்லாமலும் இருக்கிற அத்வைதவஸ்ரூபமான துரீயத்தை அறிகிறான்.

प्रपञ्चो यदि विद्येत निवर्तेत न संशयः ।
माया-मात्र-मिदं द्वैत-मद्वैतं परमार्थतः ॥ १.१७ ॥
विकल्पो विनिवर्तेत कल्पितो यदि केनचित् ।
उपदेशा-दयं वादो ज्ञाते द्वैतं न विद्यते ॥ १.१८ ॥
त्रिषु धामसु यत्तुल्यं सामान्यं वेत्ति निश्चितः ।
स पूज्यः सर्व-भूतानां वंद्यश्चैव महामुनिः ॥ १.२२ ॥
अकारो नयते विश्व-मुकारश्चापि तैजसम् ।
मकारश्च पुनः प्राज्ञं नामात्रे विद्यते गतिः ॥ १.२३ ॥
युंजीत प्रणवे चेतः प्रणवो ब्रह्म निर्भयम् ।
प्रणवे नित्य-युक्तस्य न भयं विद्यते क्वचित् ॥ १.२५ ॥
प्रणवो ह्यपरं ब्रह्म प्रणवश्च परः स्मृतः ।
अपूर्वो ऽनंतरो ऽबाह्यो ऽनपरः प्रणवो ऽव्ययः ॥ १.२६ ॥
प्रणवं हीश्वरं विद्यात् सर्वस्य हृदि संस्थितम् ।
सर्वव्यापिन-मोंकारं मत्वा धीरो न शोचति ॥ १.२८ ॥
अमात्रो ऽनंतमात्रश्च द्वैतस्योपशमः शिवः ।
ओंकारो विदितो येन स मुनि-र्नेतरो जनः ॥ १.२९ ॥

**1.17.** பிரபஞ்சம் இருக்குமேயானால் அது போய் விடும், சந்தேகமில்லை. இந்த துவைதமானது மாயா ஸ்வரூபமே. உண்மையில் அத்வைதமே இருக்கிறது.

**1.18.** வித்தியாஸங்கள் கல்பிக்கப்பட்டிருந்தால் நிவிருத்தியாய்விடும். இவ்வித்தியாசங்கள் உபதேசத்தின் பொருட்டே. ஞான மடைந்த பின் துவைதம் இருக்காது.

1.22. மூன்று அவஸ்தைகளிலும் எது ஒரே சமமாக உள்ளதோ அதை நிச்சயமாய் அறிபவன் பூஜிக்கத் தகுந்தவன், வந்தனத்துக்குரியவன், சிறந்த முனிவன்.

1.23. அகாரம் விசுவனிடம் அழைத்துச்செல்லுகிறது; உகாரம் தைஜஸனிடம் அழைத்துச்செல்லுகிறது; மகாரம் பிராஜ்ஞனிடம் அழைத்துச்செல்லுகிறது; மாத்திரையில்லாத ஓங்காரத்தினிடம் செல்லுதல் என்பது இல்லை. (காரிய காரணங்களும், அடைகிறவன் அடைதல் என்பவைகளும் இல்லை).

1.25. மனதைப் பிரணவத்தில் சேர்க்கவேண்டும். பிரணவம் பயமில்லாத பிரம்மஸ்வரூபம். பிரணவத்தை எப்போதும் தியானிப்பவனுக்கு எவ்விடத்திலும் பயமில்லை.

1.26. பிரணவமே அபரப்பிரம்மம்; பிரணவமே பரம் என்றும் கூறப்படுவது. பிரணவம் காரணமில்லாதது, பிறிதொன்றில்லாதது, வெளியொன்றில்லாதது, காரியமில்லாதது, நாசமில்லாதது.

1.28. எல்லாப் பிராணிகளுடைய இருதயத்திலும் வீற்றிருக்கும் ஈசுவரனுகப் பிரணவத்தை அறியவேண்டும். ஞானியானவன் எங்கும் வியாபித்த பிரணவத்தை அறிந்தபின் துக்கப்படுவதில்லை.

1.29. மாத்திரைகளுக்கப்பாற்பட்டதாயும் அளவுக்கு அடங்காததாயும் துவைதமற்றதாயும் மங்களஸ்வரூபமாயும் இருக்கும் பிரணவம் எவனுல் அறியப்பட்டதோ அவனே முனிவன், மற்ற எம்மனிதனும் அன்று.

## २. वैतथ्य-प्रकरणम्

वैतथ्यं सर्व-भावानां स्वप्न आहु-र्मनीषिणः ।
अन्तः स्थानात्तु भावानां संवृतत्वेन हेतुना ॥ २.१ ॥
अदीर्घत्वाच्च कालस्य गत्वा देशान्न पश्यति ।
प्रति-बुद्धश्च वै सर्व-स्तस्मिन् देशे न विद्यते ॥ २.२ ॥
अभावश्च रथादीनां श्रूयते न्याय-पूर्वकम् ।
वैतथ्यं तेन वै प्राप्तं स्वप्न आहुः प्रकाशितम् ॥ २.३ ॥
स्वप्न-जागरिते स्थाने ह्येकमाहु-र्मनीषिणः ।
भेदानां हि समत्वेन प्रसिद्धेनैव हेतुना ॥ २.५ ॥
आदावन्ते च यन्नास्ति वर्तमानेऽपि तत्तथा ।
वितथैः सदृशाः सन्तो ऽवितथा इव लक्षिताः ॥ २.६ ॥
सप्रयोजनता तेषां स्वप्ने विप्रतिपद्यते ।
तस्मा-दाद्यन्तवत्वेन मिथ्येव खलु ते स्मृताः ॥ २.७ ॥
उभयोरपि वैतथ्यं भेदानां स्थानयो-र्यदि ।
क एतान् बुध्यते भेदान् को वै तेषां विकल्पकः ॥ २.११ ॥

## 2. வைதத்யப்ரகரணம்

2.1. கனவில் காணப்படும் கற்பனைகள் (தேர், குதிரை முதலியவை சரீரத்திற்குள் இல்லாவிடினும்) உள்ளே இடம் பெற்றமையாலும், மறைந்துள்ள காரணத்தாலும், கற்பனைகள் எல்லாம் பொய்யானவை என்று அறிவாளிகள் கூறுகிறார்கள். (சரீரத்திற்குள் தேருங் குதிரையும் ஏது?)

2.2. (ஸ்வப்னத்தில்) குறுகிய காலத்தில் நெடுந் தூரத்திலுள்ளவற்றைச் சென்று பார்ப்பதாய்த் தோற்றுகிறது; அப்படிச் செல்லவில்லை. விழித்துக்கொண்ட பின்னும் எவனும் ஸ்வப்னத்தில் கண்ட அந்த இடத்தில் இருப்பதில்லை.

2.3. (ஸ்வப்னத்தில் காணும்) தேர் முதலியன பொய் என்பதைக் காரணத்துடன் சுருதி கூறுகிறது. சூக்ஷ்மமான நாடிகளில் அடையப்படும் தோற்றங்கள் பொய் என (சுருதியால்) விளக்கப்பட்டிருப்பதை (அறிவாளிகள்) கூறுகிறார்கள்.

2.5. (விஷயங்களை இந்திரியங்கள் நுகர்கின்றன என்ற) முக்கியமான காரணத்தால், ஸ்வப்னத்திலும் ஜாக்கிரத்திலும் காணப்படும் வேறுபட்ட தோற்றங்கள் சமமாயிருப்பதால் அறிவாளிகள் அவற்றை ஒன்றாகவே சொல்லுகிறார்கள்.

2.6. எது ஆதியிலும் முடிவிலும் இல்லையோ அது நடுவிலும் அப்படியே (இல்லைதான்) இன்மையால் சமானமாயிருப்பினும் (ஜாக்கிரத்தில் காண்பவை) உண்மைபோல் தோற்றுகின்றன.

2.7. (ஜாக்கிரத்தில் காணும்) அவை பயன்படுவது ஸ்வப்னத்தில் இல்லை. ஆகையால் (அவை எப்போதும் பயன்படுவன அல்ல). ஆதியும் அந்தமும் உள்ள அவை பொய்யெனவே கருதப்படுகின்றன.

2.11. இரண்டு நிலைகளிலுள்ள பொருள்களும் பொய்யாக இருந்தால், இப்பொருள்களை அறிபவன் யார், இவைகளைக் கற்பிப்பவன் யார் (என்று கேள்வி எழக்கூடும்).

कल्पय-त्यात्मना ऽऽत्मान-मात्मा देवः स्वमायया ।
स एव बुध्यते भेदानिति वेदान्त-निश्चयः ॥ २.१२ ॥
विकरोत्यपरान् भावा-नन्तश्चित्ते व्यवस्थितान् ।
नियतांश्च बहिश्चित्त एवं कल्पयते प्रभुः ॥ २.१३ ॥
चित्तकाला हि येऽन्तस्तु द्वयकालाश्च ये बहिः ।
कल्पिता एवं ते सर्वे विशेषो नान्य-हेतुकः ॥ २.१४ ॥
अव्यक्ता एव येऽन्तस्तु स्फुटा एव च ये बहिः ।
कल्पिता एव ते सर्वे विशेषस्त्विन्द्रियान्तरे ॥ २.१५ ॥
जीवं कल्पयते पूर्वं ततो भावान् पृथग्विधान् ।
बाह्या-नाध्यात्मिकांश्चैव यथाविद्य-स्तथा स्मृतिः ॥ २.१६ ॥
अनिश्चिता यथा रज्जु-रन्धकारे विकल्पिता ।
सर्पधारादिभि-र्भावै-स्तद्व-दात्मा विकल्पितः ॥ २.१७ ॥
निश्चितायां यथा रज्ज्वां विकल्पो विनिवर्तते ।
रज्जुरेवेति चाद्वैतं तद्व-दात्म-विनिश्चयः ॥ २.१८ ॥
प्राणादिभि-रनन्तैश्च भावै-रेतै-र्विकल्पितः ।
मायैषा तस्य देवस्य यथा संमोहितः स्वयम् ॥ २.१९ ॥

2.12 ஸ்வயம்பிரகாசமான ஆத்மா தன்னுடைய மாயையால் தன்னைத் தானே கற்பிக்கிறான், அவனே சிருஷ்டி வேற்றுமைகளை அறிகிறான் என்பது தான் வேதாந்த நிச்சயம்.

2.13. ஒரு சர்வவல்லமை வாய்ந்த ஆத்மா உள் நோக்குடையவனு யிருக்கையில் பாவனைகளைச் சிருஷ்டிப்பது போலவே வெளி நோக்குடையவனுயிருக்கையில் வெளியுள்ள பதார்த்தங்களையும் சிருஷ்டிக்கிறான்.

2.14. எவை சித்தத்தில் கற்பிக்கப்பட்ட காலத்தில் மட்டும் உள்ளே உள்ளனவோ, எவை இரு காலங்களிலும் வெளியே உள்ளனவோ, அவையெல்லாம் கற்பனைகளே. (வெளிக்காலம், கற்பனைக்காலம் என்ற) விசேஷமும் வேறு காரணமுடையதாயில்லை.

2.15. எவை வெளிப்படையாயில்லாமல் உள்ளே இருக்கின்றனவோ, எவை வெளிப்படையாக வெளியே இருக்கின்றனவோ அவை எல்லாம் கற்பனைகளே. வேற்றுமை இந்திரிய பேதத்தில் தான் இருக்கிறது.

2.16. (ஆத்மா) முதலில் ஜீவனைக் கற்பித்துப் பின் வெளியிலும் உள்ளும் உள்ள பலவிதமான பொருள்களைக் கற்பிக்கிறான்: அறிவுக்குத் தகுந்த ஆசையும், ஆசைக்குத் தகுந்த அறிவும் மாறிமாறி வந்து கற்பனை பெருகுகிறது.

2.17. இருட்டில் நிச்சயபுத்தி ஏற்படாததால் எங்ஙனம் ஒரு பழுதையானது பாம்பு என்றோ கோடு என்றோ விகல்பமாய்க் கருதப்படுமோ அங்ஙனமே ஆத்மா விகல்பமாய்க் கருதப்படுகிறது.

2.18. இது பழுதை என்ற நிச்சயபுத்தி ஏற்படும் போது விகல்பம் எப்படி நீங்கி விடுமோ அப்படி இது ஆத்மா என்ற நிச்சயபுத்தி ஏற்படும்போது அத்வைத சித்தி ஏற்படும்.

2.19. பிராணன் முதலிய பல பாவனைகளால் ஆத்மா பலவாறாய்க் கற்பிக்கப்படுகிறது. இந்த மாயை ஸ்வயம் பிரகாசனான ஆத்மாவினுடையதே. தன் மாயையால் தானே மறைக்கப்படுகிறான்.

प्राण इति प्राणविदो भूतानीति च तद्विदः ।
गुणा इति गुणविद-स्तत्त्वानीति च तद्विदः ॥ २.२० ॥
पञ्चविंशक इत्येके षड्विंश इति चापरे ।
एकत्रिंशक इत्याहु-रनन्त इति चापरे ॥ २.२६ ॥
यं भावं दर्शये-द्यस्य तं भावं स तु पश्यति ।
तं चावति स भूत्वा-ऽसौ तद्ग्रहः समुपेति तम् ॥ २.२९ ॥
स्वप्न-माये यथा दृष्टे गन्धर्व-नगरं यथा ।
तथा विश्व-मिदं दृष्टं वेदान्तेषु विचक्षणैः ॥ २.३१ ॥
न निरोधो न चोत्पत्तिर्न बद्धो न च साधकः ।
न मुमुक्षुर्न वै मुक्त इत्येषा परमार्थता ॥ २.३२ ॥
वीत-राग-भय-क्रोधै-र्मुनिभि-र्वेदपारगैः ।
निर्विकल्पो ह्ययं दृष्टः प्रपंचोपशमो-ऽद्वयः ॥ २.३५ ॥
तस्मादेवं विदित्वैन-मद्वैते योजयेत् स्मृतिम् ।
अद्वैतं समनुप्राप्य जडव-ल्लोक-माचरेत् ॥ २.३६ ॥
निस्तुति-र्निर्नमस्कारो निस्स्वधाकार एव च ।
चलाचलनिकेतश्च यति-र्यादृच्छिको भवेत् ॥ २.३७ ॥

2.20. (உலகின் உற்பத்திக்குக் காரணம்) பிராணன் என்று பிராணனை அறிந்தவர்களும், பஞ்சபூதங்கள் என்று அவற்றையறிந்தவர்களும், குணங்கள் என்று குணங்களை யறிந்தவர்களும் தத்துவங்கள் என்று தத்துவங்களை யறிந்தவர்களும் (கூறுகிறார்கள்

2.26. தத்துவங்கள் இருபத்தைந்து என்று சிலரும், இருபத்தாறு என்று சிலரும், முப்பத்தொன்று என்று சிலரும், அநேகம் என்று பிறரும் கூறுகிறார்கள்.

2.29. (ஆசாரியர்) எக்கருத்தை எவனுக்குக் காண்பிக்கிறரோ அக்கருத்தை அவன் பார்க்கிறன். அதுவே ஆத்மாவாயிருந்து அவனைக் காப்பாற்றுகிறது. அதுவே தத்துவம் என்ற அபிப்பிராயம் அவனிடம் நிலை பெறுகிறது.

2.31. எங்ஙனம் ஸ்வப்னமும் மாயையும் பார்க்கப்படுகின்றனவோ, எங்ஙனம் கந்தர்வநகரம் பார்க்கப்படுகிறதோ அவ்வாறே இவ்வுலகெல்லாம் வேதாந்த நிபுணர்களால் பார்க்கப்படுகிறது.

2.32. பிரளயமும் இல்லை, உற்பத்தியும் இல்லை, கட்டுப்பட்டவனும் இல்லை, ஸாதகனும் இல்லை, முமுக்ஷுவும் இல்லை; விடுபட்டவனும் இல்லை என்பது தான் பரமார்த்த ஸத்தியம்.

2.35. பற்று, பயம், கோபம் இவைகளில்லாதவர்களும் வேதாந்தத்தை அறிந்தவர்களும் ஆகிய முனிவர்களால் நிர்விகல்பமாயும் துவைதப் பிரபஞ்சமற்றதாயும் அத்துவயமாயுமுள்ள ஆத்மா பார்க்கப்படுகிறது.

2.36. ஆகையால் இதை இவ்விதமாக அறிந்து அத்துவைதத்தில் நினைவை நிலைநிறுத்தவேண்டும். அத்துவைதத்தைச் செவ்வையாக அடைந்து ஜடனைப் போல் உலகில் சஞ்சரிக்கவேண்டும்.

2.37. (தேவதைகளுக்கு) ஸ்தோத்ர நமஸ்காரமோ (பிதிருக்களுக்கு) ஸ்வதாகாரமோ செய்ய வேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லாதவனும் சலமான சரீரமே வீடாகவும் அசலமான ஆத்மாவே இருப்பிடமாகவும் கொண்டு தற்செயலாய்க் கிடைத்ததில் திருப்தியடைந்தவனுகவும் யதியானவன் இருக்கவேண்டும்.

तत्त्व-माध्यात्मिकं दृष्ट्वा तत्त्वं दृष्ट्वा तु बाह्यतः ।
तत्त्वी-भूत-स्तदाराम-स्तत्त्वा-दप्रच्युतो भवेत् ॥ २.३८ ॥

## ३ अद्वैत-प्रकरणम्

अतो वक्ष्याम्यकार्पण्य-मजाति समतां गतम् ।
यथा न जायते किंचि-ज्जायमानं समन्ततः ॥ ३.२ ॥

आत्मा ह्याकाशव-ज्जीवै-र्घटाकाशै-रिवोदितः ।
घटादिवच्च संघातै-र्जातावेत-न्निदर्शनम् ॥ ३.३ ॥

घटादिषु प्रलीनेषु घटाकाशादयो यथा ।
आकाशे संप्रलीयंते तद्वज्जीवा इहात्मनि ॥ ३.४ ॥

मरणे संभवे चैव गत्यागमनयोरपि ।
स्थितौ सर्वशरीरेषु चाकाशेनाविलक्षणः ॥ ३.९ ॥

रसादयो हि ये कोशा व्याख्याता-स्तैत्तिरीयके ।
तेषा-मात्मा परो जीवः खं यथा संप्रकाशितः ॥ ३.११ ॥

द्वयो-र्द्वयो-र्मधुज्ञाने परं ब्रह्म प्रकाशितम् ।
पृथिव्या-मुदरे चैव यथा ऽऽकाशः प्रकाशितः ॥ ३.१२ ॥

2.38. அந்தரங்கத்தில் ஆத்ம தத்துவத்தைப் பார்த்து, வெளியேயும் அதே தத்துவத்தைப் பார்த்துத் தத்துவாகாரமாகி அதிலேயே பரமானந்த முடையவனாய் அந்த ஆத்மதத்துவத்தினின்று ஒருபோதும் நழுவாமலிருக்கவேண்டும்.

3.11. (பஞ்சாபி கோசா ஆத்மவந்தோஸந்தரதமேன) கோசங்கள் ஐந்தாயினும் அனைத்துள்ளும் உறையும் ஒன்றுலேயே அவை ஆத்மாவை உடையன. அந்த ஆத்மா 'ஸத்யம் ஜ்ஞானம் அனந்தம்' எனப்பட்டது. (தை. 2).

## 3. அத்வைதப்ரகரணம்

3.2. உற்பத்தியற்றதாயும் எங்கும் சமமாய் வியாபித்துள்ளதாயும் குறைவற்றதாயும் உள்ளதைக் கூறுறேன். எங்கும் உண்டாயிருப்பதாய்த் தோன்றும் எதுவும் எங்ஙனம் உண்டாகவில்லையோ அதையுங் கூறுகிறேன்.

3 3. பரமாத்மா மஹாகாசத்தைப்போல் என்று கூறப்பட்டுள்ளது; சரீரங்கள் குடங்களைப் போலும், ஜீவர்கள் குடத்திலுள்ள ஆகாசத்தைப் போலும் சிருஷ்டி விஷயத்தில் இதுவே தகுந்த திருஷ்டாந்தம்.

3 4. குடங்கள் உடைந்தபோது குடங்களிலுள்ள ஆகாசம் மஹாகாசத்தில் கலந்து விடுவதுபோல் இந்தப் பரமாத்மாவில் ஜீவன் லயமடைகிறான்.

3.9. இறப்பிலும் பிறப்பிலும், போதலிலும் வருதலிலும் இருத்தலிலும், எல்லாச் சரீரங்களிலும், ஆத்மாவுக்கும் ஆகாசத்திற்கும் வித்தியாசமில்லை.

3.11. அன்னமயம் முதலான எக்கோசங்கள் தைத்திரீய உபநிஷத்தில் கூறப்பட்டுள்ளனவோ அவைகட்குள்ளுறையும் ஜீவன் பரமாத்மாவே. ஆகாசம் எப்படியோ அப்படியென இது விளக்கப்பட்டது.

3.12 மதுப்பிராம்மணத்தில் இரண்டிரண்டு ஸ்தானங்களில் பரப்பிரம்மம் விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது. (அதிதெய்வமாகிய) பூமியிலும் (அத்தியாத்மமாகிய) சரீரத்திலும் எங்ஙனம் ஆகாசமோ அங்ஙனம் என்று விளக்கப்பட்டிருக்கிறது.

3 12. (ப்ரஹ்மவித்யாக்யம் மது அம்ருதம், அம்ருதத்வம் மோதன – ஹேதுத்வாத், தத் விஜ்ஞாயதே யஸ்மின்னிதி மதுஜ்ஞானம் மதுப்ராஹ்மணம்). பிரம்ம வித்தை

जीवात्मनो-रनन्यत्व-मभेदेन प्रशस्यते ।
नानात्वं निन्द्यते यच्च तदेवं हि समञ्जसम् ॥ ३.१३ ॥

मृल्लोह-विस्फुलिंगाद्यैः सृष्टिर्या चोदिता ऽन्यथा ।
उपायः सोऽवताराय नास्ति भेदः कथंचन ॥ ३.१५ ॥

स्वसिद्धान्त-व्यवस्थासु द्वैतिनो निश्चिता दृढम् ।
परस्परं विरुध्यन्ते तैरयं न विरुध्यते ॥ ३.१७ ॥

अद्वैतं परमार्थो हि द्वैतं तद्भेद उच्यते ।
तेषा-मुभयथा द्वैतं तेनायं न विरुध्यते ॥ ३.१८ ॥

मायया भिद्यते ह्येत-न्नान्यथा-ऽजं कथंचन ।
तत्त्वतो भिद्यमाने हि मर्त्यता-ममृतं व्रजेत् ॥ ३.१९ ॥

नेह नानेति चाम्नाया-दिन्द्रो मायाभि-रित्यपि ।
अजायमानो बहुधा मायया जायते तु सः ॥ ३.२४ ॥

*3. 13.* ஜீவப்பிரம்ம ஒற்றுமையே அத்துவைதத்தால் போற்றப்படுகிறது; வேற்றுமை நிந்திக்கப்படுகிறது. இதுதான் யுக்திக்கும் பொருத்தமாயிருக்கிறது.

*3.15.* மண், இரும்பு. நெருப்புப்பொறி முதலிய உதாரணங்களாலும் வேறு வகைகளிலும் எந்த சிருஷ்டி சொல்லப் பட்டதோ அது பிரம்மத்தை நமது மனோ நிலைக்குக் கொண்டுவர உபாயமேயன்றி அதில் சிறிதும் வேற்றுமை இல்லை.

---

யாகிற தேன். அமிருதம், ஆனந்தத்தைத் தருவதால்; எங்கு அந்த மதுஞானம் கூறப்படுகிறதோ அது மது ப்பிராம்மணம். (சங்.

அயமாத்மா ஸர்வேஷாம் பூதானும் மத்வஸ்யாத்மன: ஸர்வாணி பூதானி மது, யச்சாய-மஸ்மின்-னுத்மனி தேஜோமயோऽம்ருதமய; புருஷோ, யச்சாய-மாத்மா தேஜோமயோऽம்ருதமய: புருஷோ அயமேவ ஸ யோऽய-மாத்மேத-மம்ருதமிதம்; ப்ரஹ்மேதம் ஸர்வம்|| (ப்ரு. 2. 5. 14.)

3. 17. துவைதிகள் தங்கள் சித்தாந்தங்களை நிலை நிறுத்துவதில் திடமான நிச்சயமுடையவர்கள்; அவர்கள் ஒருவருக் கொருவர் விரோதப்படுவார்கள். (அத்துவைதமாகிய) இது அவர்களுடன் விரோதப்படுவதில்லை.

3. 18. அத்துவைதம் காரணமாகிய பாரமார்த்திக ஸத்தியம்; துவைதம் அதன் காரியமாகிய வியாவஹாரிக ஸத்தியம் என்று சொல்லப்படும். அவர்களுக்கு (துவைதிகளுக்கு) இரண்டிலும் துவைதம் என்ற நம்பிக்கை. அதனால் அத்துவைதமாகிய இது, விரோதப்படுவதில்லை.

3. 19. இரண்டற்ற ஆத்மா மாயையால் வேற்றுமையடைந்தாற்போல் தோன்றுகிறது. வாஸ்தவத்தில் ஒருபோதும் வேற்றுமை இல்லை. உண்மையில் வேறுபாடு ஏற்பட்டால் அழிவற்ற பொருள் அழிவுடையதாய்விடும்,

3. 24. (நேஹ நாநா இதி) இந்த ஆத்மாவில் அநேகமில்லை என்றும், (இந்த்ரோ மாயாபி: இதி) ஈசுவரன் மாயையால் என்றும்,(அஜாயமானோ பஹுதாவிஜாயதே) பிறப்பில்லாதவன் மாயையால் பலவாய்ப் பிறக்கிறான் என்றும் சுருதி கூறுகிறது.

---

3. 13. ஓ.—உதரமந்தரங் குருதே அத தஸ்ய பயம் பவதி. (தை 2. 7) ம்ருத்யோ: ஸ ம்ருத்யு-மாப்னோதி ய இஹ நானேவ பச்யதி. '(கட 4. 10:)

3. 15. யதா ஸோம்யைகேன ம்ருத்பிண்டேன (சா.6.1.4) யதா ஸோம்யைகேன லோஹமணினா (சா. 6.1.5)

யதா ஸுதீப்தாத் பாவகாத் விஸ்புலிங்கா: (மு 2.1 1)

स एष नेति नेतीति व्याख्यातं निह्नुते यतः ।
सर्व-मग्राह्य-भावेन हेतुनाऽजं प्रकाशते ॥ ३.२६ ॥

यथा स्वप्ने द्वयाभासं स्पन्दते मायया मनः ।
तथा जाग्रद्द्वयाभासं स्पन्दते मायया मनः ॥ ३.२९ ॥

अद्वयं च द्वयाभासं मनः स्वप्ने न संशयः ।
अद्वयं च द्वयाभासं तथा जाग्रन्न संशयः ॥ ३.३० ॥

मनोदृश्य-मिदं द्वैतं यत्किञ्चित् सचराचरम् ।
मनसो ह्यमनी-भावो द्वैतं नैवोपलभ्यते ॥ ३.३१ ॥

आत्म-सत्यानुबोधेन न संकल्पयते यदा ।
अमनस्ता तदा याति ग्राह्याभावे तदग्रहम् ॥ ३.३२ ॥

अकल्पक-मजं ज्ञानं ज्ञेयाभिन्नं प्रचक्षते ।
ब्रह्म ज्ञेय-मजं नित्य-मजेनाजं विबुध्यते ॥ ३.३३ ॥

निगृहीतस्य मनसो निर्विकल्पस्य धीमतः ।
प्रचारः स तु विज्ञेयः सुषुप्ते ऽन्यो न तत्समः ॥ ३.३४ ॥

**3. 26.** எதற்கும் பிடிபடாத காரணத்தால் ஆத்மாவை (நேதி, நேதி) இது அல்ல, இது அல்ல என்று அனைத்தையும் சுருதி தள்ளுகிறது. இதனால் பிறப்பையடையாத பிரம்மமே பிரகாசிக்கிறது.

---

3. 24. நேஹ நாநாஸ்தி கிஞ்சன (கட 4. 11). இந்த்ரோ மாயாபி: புரு ரூப ஈயதே (ப்ரு 2. 5. 19). அஜாயமானோ பஹுதா விஜாயதே (புருஷ ஸூக்தம்).

3. 26. ஸ ஏஷ நேதி நேத்யாத்மா க்ருஹ்யோ ந ஹி க்ருஹ்யதே —(ப்ரு, 4.4. 22.

3. 29. மனது எப்படி ஸ்வப்னத்தில் மாயையால் இருவகையாய் மாறுகிறதோ அப்படியே ஜாக்கிரத்தி லும் மனது மாயையால் (உணர்பவன் உணரப்படுவது என) இருவகையாய் மாறுகிறது.

3. 30. இரண்டற்ற மனது ஸ்வப்னத்தில் இரண் டாய்க் காணப்படுகிறது; இதில் சந்தேகமில்லை. அப்ப டியே ஜாக்கிரத்திலும் மனது ஒன்ருனலும் இரண்டாய்க் காணப்படுகிறதென்பதில் சந்தேகமில்லை.

3. 31. மனதால் காணப்படும் சராசரமாகிய துவை தப் பிரபஞ்சம் எது உண்டோ அந்த துவைதப் பிர பஞ்சம் மனதற்ற நிலையில் காணப்படுவதில்லை.

3. 32. ஆத்மாவே ஸத்தியம் என்ற அறிவின் விழிப் பிஞல், எப்போது மனது சங்கற்பிக்கவில்லையோ அப் போது உணரப்படும் வஸ்து இல்லாததால், உணரும் மனதும் இல்லாததாகிறது.

3. 33. கற்பனையற்றதாயும் பிறப்பற்றதாயும் உள்ள சைதன்னியத்தை பிரம்மத்தினின்று வேறல் லாததாகக் கூறுகிருர்கள். பிரம்மம்தான் அறியத் தக்கது, பிறப்பில்லாதது, நித்தியமானது; பிரம்மத்தா லேயே பிரம்மம் அறியப்படுகிறது.

3. 34 நன்ருய் அடக்கப்பட்டதாயும் சங்கற்பங் களற்றதாயும் உள்ள விவேகியினுடைய (பிரம்மத் தையே விஷயமாகக் கொண்ட) மனதின் போக்கு அறி யத்தக்கது. இது ஸுஷுப்திக்கு வேறுபட்டது, அதற் கொப்பானதன்று.

लीयते हि सुषुप्ते तन्निगृहीतं न लीयते ।
तदेव निर्भयं ब्रह्म ज्ञानालोकं समन्ततः ॥ ३.३५ ॥
अज-मनिद्र-मस्वप्न-मनामक-मरूपकम् ।
सकृद्विभातं सर्वज्ञं नोपचारः कथंचन ॥ ३.३६ ॥
सर्वाभिलापविगतः सर्वचिन्ता-समुत्थितः ।
सुप्रशान्तः सकृज्ज्योतिः समाधि-रचलो ऽभयः ॥ ३.३७ ॥
अस्पर्श-योगो वै नाम दुर्दर्शः सर्वयोगिभिः ।
योगिनो बिभ्यति ह्यस्मा-दभये भय-दर्शिनः ॥ ३.३९ ॥
उपायेन निगृह्णीयाद्-विक्षिप्तं काम-भोगयोः ।
सुप्रसन्नं लये चैव यथा कामो लयस्तथा ॥ ३.४२ ॥
दुःखं सर्व-मनुस्मृत्य कामभोगा-न्निवर्तयेत् ।
अजं सर्व-मनुस्मृत्य जातं नैव तु पश्यति ॥ ३.४३ ॥

3. 35: ஸுஷுப்தியில் அது (மனது) லயமடைந்து விடுகிறது. அடக்கப்பட்ட மனது லயமடைகிறதில்லை. அதுவே பயமற்ற ப்ராம்மீ ஸ்திதி, எங்கும் பரந்த ஞானஸ்வரூபம்,

3. 36. பிறப்பற்றதாயும் நித்திரையற்றதாயும் ஸ்வப்ன மற்றதாயும் நாமரூபங்களற்றதாயும் ஸ்வயம் பிரகாசமாயும் எல்லாவற்றையும் அறிவதாயும் உள்ள தற்குச் செய்யவேண்டிய உபசாரம் எவ்வாற்றுலு மில்லை.

3. 37. அது பேச்சற்றது, சிந்தனைகளனைத்துக்கு மப்பாற்பட்டது, சாந்தமானது, ஸ்வயம் பிரகாச

மானது, ஸமாதியால் அறியத் தகுந்தது, செயலற்றது பயமற்றது.

3. 39. இது (அஸ்பர்சயோகம்) பற்றின்மை எனும் யோகம்; சாதாரண யோகிகளால் அடைதற்குக் கடினமானது. பயமற்ற இதனிடத்தில் பயத்தைக் காணும் யோகிகள் இந்தயோகத்தினின்று பின் வாங்குகிறார்கள்.

3. 42. காமத்திலும் போகத்திலும் சிதறிப்போன மனதை உபாயத்தால் அடக்க வேண்டும். காமம் எப்படியோ அப்படித்தான் நித்திரையும் (அனர்த்தத்திற்குக் காரணம்).

3- 43. அனைத்துந் துன்பம் என்று நினைவில் வைத்துக் காம போகங்களிலிருந்து மனதைத் திருப்ப வேண்டும். அனைத்தும் பிரம்மம் என்று நினைவில் வைத்த பின், உண்டாகிய துவைதப் பிரபஞ்சத்தைப் பார்ப்பதே இல்லை.

---

3.36: அதற்குச் செய்ய வேண்டிய உபசாரம் எவ்வாற்றானுமில்லை—

ஒ—ஆதவனுக்கவன் கிரணத்தங்கியைக்கொண்
டாலாத்தி சுழற்றலென்கோ,
சீதமதிக் கவனிலவி னொழுகுசிலைப்
புனல்கொடுபசரிப்பதென்கோ,
போதியமைக் கடல்வேந்தை யவன்புனலான்
முழுக்காட்டு முறைமையென்கோ
நீ தருசொற்கவி கொடுனைப் பாடியுன
தருள் பெருமென்னீதியம்மே.

(ஸௌந்தர்யலஹரீ 100.)

लये संबोधयेच्चित्तं विक्षिप्तं शमयेत् पुनः ।
सकषायं विजानीयात् समप्राप्तं न चालयेत् ॥ ३.४४ ॥
नास्वादयेत् सुखं तत्र निस्संगः प्रज्ञया भवेत् ।
निश्चलं निश्चरच्चित्त-मेकीकुर्यात् प्रयत्नतः ॥ ३.४५ ॥
यदा न लीयते चित्तं न च विक्षिप्यते पुनः ।
अनिङ्गन-मनाभासं निष्पन्नं ब्रह्म तत्तदा ॥ ३.४६ ॥
स्वस्थं शान्तं सनिर्वाण-मकथ्यं सुखमुत्तमम् ।
अज-मजेन ज्ञेयेन सर्वज्ञं परिचक्षते ॥ ३.४७ ॥
न कश्चि-ज्जायते जीवः संभवो ऽस्य न विद्यते ।
एतत्तदुत्तमं सत्यं यत्र किंचिन्न जायते ॥ ३.४८ ॥

## ४. अलात-शान्ति-प्रकरणम्

अस्पर्श-योगो वै नाम सर्वसत्त्व-सुखो हितः ।
अविवादो ऽविरुद्धश्च देशितस्तं नमाम्यहम् ॥ ४.२ ॥

**3. 44.** ஸுஷுப்தியில் லயமடைந்த மனதை எழுப்பி விட வேண்டும். சிதறிப் போன மனதை மறுபடி சமாதானப்படுத்த வேண்டும். அழுக்கடைந்தால் அதை உணரவேண்டும். (இப்படி இடைவிடாமல் அப்பியசித்து ஸமாதி நிலைக்குக் கொண்டு போக வேண்டும்) ஸமத்துவ நிலையை யடைந்த பின் மீண்டும் (விஷயத்தில்) நழுவவிடக் கூடாது.

**3. 45.** (ஸமாதியில் அடையக் கூடிய) சுகத்தைக் கூட விரும்பக் கூடாது. அந்நிலையில் விவேகத்தால் பற்றில்லாதவனாயிருக்க வேண்டும். (அந்த சுகமும்

பொய்யென்று அதினின்று மனதைத் திருப்ப வேண்டும்). நிச்சலமான மனது மீண்டும் விஷயங்களை நாடினல் நல்ல முயற்சியால் ஆத்மாவிடம் ஒன்றுபடுத்த வேண்டும்.

*3.* 46. மனது எப்போது ஸுஷுப்தியில் அழுந்திப் போகவில்லையோ, மீண்டும் (சிதறிப் போய்) விக்ஷேபத்தையுமடைய வில்லையோ. (காற்றில்லாத விடத்திலுள்ள தீபம் போல்) அசைவற்று நிற்கிறதோ வெளிப் பொருள்களைப் பிரதிபலிக்காமலிருக்கிறதோ அப்போது அது பிரம்ம ரூபமாகிறது.

*3.* 47. உத்தமமான சுகத்தைத் தன்னிடத்திலேயே இருப்பதாயும். விருத்திகள் அற்றதாயும், நிர்வாணத்துடன் கூடியதாயும், சொல்ல முடியாததாயும், உற்பத்தி யில்லாததாயும், உற்பத்தியற்ற ஜ்ஞேய வஸ்துவுடன் ஒன்றுபட்டு நின்று எல்லாவற்றையும் அறிவதாயும் உள்ள பிரம்மமே என்று (ஞானிகள்) கூறுகிருர்கள்.

*3.* 48 எந்த ஜீவனும் உண்டாவதுமில்லை; இவனுக்கு உண்டாகக் காரணமு மில்லை; எதனிடத்தில் ஒன்றும் உண்டாவதில்லையோ அந்த பிரம்மம் உத்தமமான ஸத்தியம்.

## 4. அலாத-சாந்தி-ப்ரகரணம்

4. 2. 'அஸ்பர்ச யோக' மெனப்படும் இது எல்லாப் பிராணிகளுக்கும் இன்பத்தையும் நன்மையையும் பயப்பது என்பது பிரசித்தம். இது விவாதமில்லாதது, எதையும் விரோதிக்காதது. இவ்வுபதேசத்தை நான் நமஸ்கரிக்கிறேன்.

स्वतो वा परतो वापि न किञ्चि-द्वस्तु जायते ।
सदसत् सदसद्वापि न किञ्चि-द्वस्तु जायते ॥ ४.२२ ॥
हेतुर्न जायते-ऽनादेः फलं चापि स्वभावतः ।
आदिर्न विद्यते यस्य तस्य ह्यादिर्न विद्यते ॥ ४.२३ ॥
चित्तं न संस्पृशत्यर्थं नार्थाभासं तथैव च ।
अभूतो हि यतश्चार्थो नार्थाभासस्ततः पृथक् ॥ ४.२६ ॥
सर्वे धर्मा मृषा स्वप्ने कायस्यान्त-र्निदर्शनात् ।
संवृते ऽस्मिन् प्रदेशे वै भूतानां दर्शनं कुतः ॥ ४.३३ ॥
न युक्तं दर्शनं गत्वा कालस्यानियमाद्गतौ ।
प्रतिबुद्धश्च वै सर्वस्तस्मिन् देशे न विद्यते ॥ ४.३४ ॥
मित्राद्यैः सह संमन्त्र्य संबुद्धो न प्रपद्यते ।
गृहीतं चापि यत्किंचित् प्रतिबुद्धो न पश्यति ॥ ४.३५ ॥
स्वप्ने चावस्तुकः कायः पृथगन्यस्य दर्शनात् ।
यथा कायस्तथा सर्वं चित्तदृश्य-मवस्तुकम् ॥ ४.३६ ॥
ग्रहणा-ज्जागरितवत्तद्धेतुः स्वप्न उच्यते ।
तद्धेतुत्वात्तु तस्यैव सज्जागरित-मिष्यते ॥ ४.३७ ॥

4. 22. எந்த வஸ்துவும் தன்னிடத்திலிருந்தோ பிறிதொரு இடத்திலிருந்தோ உண்டாவதில்லை. ஸத்தாயினும், அஸத்தாயினும், ஸதஸத்தாயினும், எவ்வஸ்துவும் உண்டாவதில்லை.

4. 23. அனாதிப் பொருளுக்குக் காரணம் இல்லை; இயற்கையில் பயனும் இல்லை. எதற்குக் காரணமில்லையோ அதற்கு உற்பத்தியும் இல்லை.

4. 26. மனது விஷயங்களைத் தொடுகிறதில்லை. அப்படியே மனதிலேயே பிரதிபலிக்கும் விஷயக் கற்பனைகளையும் தொடுகிறதில்லை. ஏனெனில் விஷயமும் இல்லை, மனத்திற்கு வேருக விஷயாபாஸமும் இல்லை.

4. 33. ஸ்வப்னத்தில் எல்லாப் பொருள்களும் உடலுக்குள்ளே காணப்படுவதால் பொய்யே. அடைபட்ட இந்த இடத்துக்குள் பொருள்களின் காட்சி எப்படிக் கூடும்?

4 34.(ஸ்வப்னத்தில்) ஓரிடத்திலிருந்து மற்றோரிடம் போவதில்லை. காலத்தின் கட்டுப்பாடு இல்லாததால் வேறிடத்தில் போய்ப் பொருள்களை ஒருவன் கனவில் காண்கிருன் என்பது யுக்திக்குப் பொருந்தாது. விழித்துக் கொண்டபின் கனவில் கண்ட அனைத்தும்அங்கேயும் இருப்பதும் இல்லை.

4 35. ஸ்வப்னத்தில் நண்பர் முதலியவர்களுடன் பேசிக் கொண்டிருந்து விழித்துக் கொண்டவன் (அங்கு கண்ட எவரையும்) காண்பதில்லை. ஸ்வப்னத்தில் கண்ட எப்பொருளையும் விழித்துக் கொண்டவன் காண்பதில்லை.

4. 36. ஸ்வப்னத்தில் சரீரம் பொய்; அந்த ஸ்வப்ன சரீரத்திற்கு வேருக ஜாக்கிர சரீரம் காணப்படுதலால் எப்படி ஸ்வப்ன சரீரமோ அப்படியே ஜாக்கிரத்திலும் மனதால் காணப்படும் அனைத்தும் பொய்யே.

4. 37. ஜாக்கிரத்தில் போலவே ஸ்வப்னத்திலும் விஷயங்கள் கிரகிக்கப்படுங் காரணத்தால், ஜாக்கிரத்தால் ஸ்வப்னம் ஏற்படுகிறதென்று சொல்லப்படுகிறது. அக்காரணத்தால் (ஸ்வப்னத்தைக் காண்பவனுக்கே

जात्याभासं चलाभासं वस्त्वाभासं तथैव च ।
अजाचल-मवस्तुत्वं विज्ञानं शान्त-मद्वयम् ॥ ४.४५ ॥

ऋजु-वक्रादिकाभास-मलात-स्पन्दितं यथा ।
ग्रहण-ग्राहकाभासं विज्ञान-स्पन्दितं तथा ॥ ४.४७ ॥

अज-मनिद्र-मस्वप्नं प्रभातं भवति स्वयम् ।
सकृद्विभातो ह्येवैष धर्मो धातु-स्वभावतः ॥ ४.८१ ॥

अस्ति नास्त्यस्ति नास्तीति नास्ति नास्तीति वा पुनः ।
चल-स्थिरोभयाभावै-रावृणोत्येव बालिशः ॥ ४.८३ ॥

प्राप्य सर्वज्ञतां कृत्स्नां ब्राह्मण्यं पदमद्वयम् ।
अनापन्नादि-मध्यान्तं किमतः पर-मीहते ॥ ४.८५ ॥

स-वस्तु सोपलम्भञ्च द्वयं लौकिक-मिष्यते ।
अवस्तु सोपलम्भञ्च शुद्धं लौकिक-मिष्यते ॥ ४.८७ ॥

अवस्त्वनुपलंभं च लोकोत्तर-मिति स्मृतम् ।
ज्ञानं ज्ञेयं च विज्ञेयं सदा बुद्धैः प्रकीर्तितम् ॥ ४.८८ ॥

ஸ்வப்னம் உண்மையாயிருப்பது போல்) அவனுக்கே ஜாக்கிரமும் உண்மையாயிருப்பதாய்ச் சொல்லப்படு கிறது. (மற்றவர்களுக்கு இல்லை. ஆகையால் ஜாக்கி ரமும் பொய்யே).

4. 45 ஆத்மாவுக்குப் பிறவியேற்படுதலும், சல னம் ஏற்படுதலும், உடல் முதலியன ஏற்படுதலும் (ஆபாஸம்) தோற்றமே யன்றி உண்மையல்ல; வாஸ்த வத்தில் அது பிறப்பற்றது, சலனமற்றது, வஸ்து சம் பந்தமற்றது, அது ஞானம், சாந்தம், அத்துவயம்.

4. 47. எப்படிக் கொள்ளிக் கட்டையின் அசை வானது நேர், கோணல்முதலிய வடிவங்களைத் தோற்று விக்கிறதோ அப்படியே விஜ்ஞானத்தின் அசைவும் ஜ்ஞாதா, ஜ்ஞேயம் முதலிய வடிவங்களைத் தோற்றுவிக் கிறது.

4. 81. (ஆத்மா) பிறப்பற்றது, நித்திரையற்றது, ஸ்வப்னமற்றது, தானுகவே பிரகாசிப்பது. இது மாருத பிரகாசமுடையது, இயற்கையாகவே அனைத் தையும் தாங்குவது.

4. 83. ஆத்மா இருக்கிறதென்றும், இல்லையென் றும், இருக்கிறதோ இல்லையோ என்றும், இல்லவே இல்லையென்றும்—சலம், ஸ்திரம், உபயம், அபாவம் என்ற நான்கு வகைகளில்—அறிவிற் சிறியோர் ஆத்மா வைப் பற்றி விவாதம் செய்து ஆத்ம தத்துவத்தை மறைக்கிருர்கள்.

4. 85. அனைத்தையும் அறியும் நிலையை யடைந்து, அத்துவயமாயும், அடிமுடி நடுவற்றதாயும் உள்ள பிரம்ம பதத்தை யடைந்தால் அதன் பின் இச்சிப்பதற் கென்ன இருக்கிறது?

4. 87. ஸ்தூல வியவஹாரமுடையதாயும், தோற்ற முடையதாயும் இருக்கிற துவைத நிலை ஜாக்கிரா வஸ்தை என்று சொல்லப்படும். ஸ்தூல வியவஹாரமில் லாமல் தோற்றம் மட்டும் உடைய சூக்ஷ்மமாகிய நிலை ஸ்வப்னம் என்று சொல்லப்படுகிறது.

4 88. ஸ்தூல சூக்ஷ்ம விஷயங்களில்லாமலும் தோற்றமில்லாமலும் ஞானமாகவும் ஞேயமாகவும் விக்ஞேயமாகவும் உள்ள நிலை (உலகைத் தாண்டிய) ஸுஷுப்தி நிலை என்று பிரம்மஞானிகளால் சொல்லப் படுகிறது.

ज्ञाने च त्रिविधे ज्ञेये क्रमेण विदिते स्वयम् ।
सर्वज्ञता हि सर्वत्र भवतीह महाधियः ॥ ४.८९ ॥

आदिबुद्धाः प्रकृत्यैव सर्वे धर्माः सुनिश्चिताः ।
यस्यैवं भवति क्षान्तिः सोऽमृतत्वाय कल्पते ॥ ४.९२ ॥

आदिशान्ता ह्यनुत्पन्नाः प्रकृत्यैव सुनिर्वृताः ।
सर्वे धर्माः समाऽभिन्ना अजं साम्यं विशारदम् ॥ ४.९३ ॥

अजे साम्ये तु ये केचिद्भविष्यन्ति सुनिश्चिताः ।
ते हि लोके महाज्ञाना-स्तच्च लोको न गाहते ॥ ४.९५ ॥

दुर्दर्श-मतिगंभीर-मजं साम्यं विशारदम् ।
बुद्ध्वा पद-मनानात्वं नमस्कुर्मो यथाबलम् ॥ ४.१०० ॥

इति गौडपादाचार्य-कृत-माण्डूक्योपनिषत्-

कारिकाः संपूर्णाः ॥ ओं तत्सत् ॥

---

4 89. மூன்று விதமான ஞானமும் ஞேயமும் ஒன்றன்பின் ஒன்ருக அறியப்பட்ட அளவில் இங்கேயே அந்தச்சிறந்த புத்திமானுக்குத் தாளுகவே எல்லாவிடத்திலும் எல்லாவற்றையும் அறியுந் திறமை உண்டாகிறது.

4. 92. எல்லா ஜீவர்களும் இயற்கையாகவே நித்திய புத்தர்கள் என நிச்சயிக்கப்பட்டுள்ளனர். எவனுக்கு இவ்வண்ணம் சாந்தி ஏற்படுகிறதோ அவன் மோக்ஷத்திற்குரியவன்.

4. 93. எல்லா ஜீவர்களும் இயற்கையாகவே நித்திய சாந்தர்கள், உற்பத்தியில்லாதவர்கள், நித்தியமுக்தர்கள், ஸமமானவர்கள், வேற்றுமையில்லாதவர்கள். ஆத்ம தத்துவம் பிறப்பற்றதாயும், ஸமமாயும், சுத்தமாயும் இருக்கிறது.

4. 95. எந்தச் சிலர் பிறப்பற்றதாயும் ஸமமாயும், உள்ள ஆத்ம தத்துவத்தில் திடமான நிச்சய முடையவர்களோ அவர்கள் பிரபஞ்சத்தில் மஹா ஞானிகள். அவர்களுடைய மார்க்கத்தை உலகம் எட்டுகிறதில்லை.

4. 100. காண்பதற்கரிதாயும், எளிதில் அறியக் கூடாததாயும், பிறப்பற்றதாயும், சமமாயும், சுத்தமாயும் வேற்றுமை நீங்கியதாயும் உள்ள நிலையை எமது சக்திக்கு எட்டிய வகையில் அறிந்து நமஸ்கரிக்கிறோம்.

இங்ஙனம் மாண்டுக்கியோபநிஷத் கௌடபாத காரிகை

முற்றும்.

---

4.95. ஒ. (அலோக-ஸாமான்ய-மசிந்த்ய-ஹேதுகம் த்விஷந்தி மந்தாச்-சரிதம் மஹாத்மனும்) உலக நடத்தை போலில்லாததும் காரணத்தை அறிய முடியாததுமான மஹான்களின் நடத்தையை அறிவிலிகள் வெறுக்கின்றனர்.

—காளிதாஸர்

உபநிஷத்தின் விஷயச் சுருக்கம்:—ஜீவன் இந்திரிய விஷயங்களையும் இந்திரியங்களுக்கு எட்டாதவைகளையும் அறியுந் திறமையுடையவன். அவனுக்கு ஜாக்கிரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளும் அவைகளையெல்லாங் கடந்த துரீயம் என்ற நிலையும் உண்டு. ஜாக்கிரத்தில் ஜீவன் இந்திரியங்களின் வழியாக வெளி விஷயங்களை அறிகிறான். ஸ்வப்னத்தில் விஷய வாசனைகளின் வடிவங்களை மனதால் அறிகிறான். ஸுஷுப்தியில் விஷயங்களும்

இல்லை; விஷய வாசனைகளின் வடிவங்களுமில்லை; இங்ஙன மென்று விளக்க முடியாததாய் இருட்டறையிலுள்ள சிறு விளக்குப் போன்ற ஞானமும் ஆனந்தமுந்தான் இருக்கின் றன. துரீயத்தில் ஜீவன் தன் ஸ்வரூபத்தை அடைகிறான்

உபாசனையை நாடுவோர்க்கு ஓங்காரம் ஒப்புயர்வற்ற பிரதீகம் என உபதேசிக்கப்படுகிறது, ஸ்தூலமான அகா ரத்தை (அது குறிக்கும் ஜாக்கிரத்துடன்) ஸூக்ஷ்மமான உகாரத்திலும் (ஸ்வப்னத்திலும்), அதைக் காரணமான மகா ரத்திலும் (ஸுஷுப்தியிலும்), அனைத்தையும் காரியகாரணா தீதமான துரீயத்தில் (பிரத்யகாத்மாவிடத்திலும்) ஒடுக்கித் தானேயாகிய இரண்டற்ற நிலையையடைகிறான்.

"ஆனாலுமிதன் பெருமை யெவர்க்கார் சொல்வார்?
அதுவானாலதுவாவர் அதுவே சொல்லும்."
—தாயுமானவர்

இங்ஙனம் மாண்டுக்கியோபநிஷத்திற்கு ஸ்ரீராம
கிருஷ்ண தீபம் எனும் உரை முற்றும்.

# ॥ ऐतरेयोपनिषत् ॥

ॐ वाङ् मे मनसि प्रतिष्ठिता। मनो मे वाचि प्रतिष्ठितम्, आविरावीर्म एधि। वेदस्य म आणीस्थः। श्रुतं मे मा प्रहासीः। अनेनाधीतेनाहोरात्रान् संदधामि। ऋतं वदिष्यामि। सत्यं वदिष्यामि। तन्मामवतु। तद्वक्तारमवतु। अवतु माम्। अवतु वक्तारम्। अवतु वक्तारम्॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः॥

# ஐதரேயோபநிஷத்

ஓம். வாங்மே மனஸி ப்ரதிஷ்டிதா | மனோ மே வாசி ப்ரதிஷ்டிதம் | ஆவிராவீர்ம ஏதி | வேதஸ்ய ம ஆணீஸ்த: | ச்ருதம் மே மா ப்ரஹாஸீ: | அநேநாதீதேனாஹோராத்ரான் ஸந்ததாமி | ருதம் வதிஷ்யாமி | ஸத்யம் வதிஷ்யாமி | தன்மாமவது | தத்வக்தார மவது | அவது மாம் | அவது வக்தாரம் | அவது வக்தாரம் ||

ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி : ||

## ஐதரேயோபநிஷத்து

ஓம்; என் வாக்கு மனதில் ஊன்றி நிற்கட்டும்; மனமும் வாக்கில் ஊன்றி நிற்கட்டும். ஆவியே (ஆன்ம ஜோதியே)! என்னிடம் பிரகாசித்தருள்வாய். (வாக்கும்

## प्रथमेऽध्याये प्रथमः खण्डः

आत्मा वा इदमेक एवाग्र आसी-न्नान्यत्किञ्चन मिषत् । स ईक्षत लोकान्नु सृजा इति । स इमांल्लोका-नसृजत ॥ १.१.१ ॥

अम्भो मरीची-र्मरमापोऽदोऽम्भः परेण दिवं द्यौः प्रतिष्ठान्तरिक्षं मंरीचयः । पृथिवी मरो या अधस्तात्ता आपः ॥ १.१.२ ॥

स ईक्षतेमे नु लोका लोकपालान्नु सृजा इति । सोऽद्भ्य एव पुरुषं समुद्धृत्यामूर्च्छयत् ॥ १.१.३ ॥

மனமுமாகிய நீவிர்) என்னிடம் வேதத்து அச்சாணி போன்றிருங்கள்; என் கேள்வியை வீணுக்கவேண்டாம். இந்த (ஆத்ம வித்தையின்) அத்தியயனத்தில் இரவை யும் பகலையுங் ஒன்ருக்குவேன். (உலகின் அழகும் ஒழுங்குமாய் விளங்கும்) ருதத்தைப் போற்றுகிறேன். (அதற்கு ஆதாரமாயுள்ள) ஸத்தியத்தைப் போற்றுகி றேன். அது என்னைக் காப்பாற்றட்டும். ஆசாரிய னைக் காப்பாற்றட்டும். (மீண்டும் அதுவே பிரார்த் தனை) என்னைக்காப்பாற்றட்டும். ஆசாரியனைக் காப் பாற்றட்டும். ஆசாரியனைக் காப்பாற்றட்டும்.

ஓம். முவ்வகையிலும் சாந்தி நிலவுக!

---

**உபநிஷத்தின் பெயருந் தொடர்பும்:—**

இந்த உபநிஷத்தின் ரிஷி மஹீதாஸ ஐதரேயர் ஆதலால் இது அவர் பெயரால் வழங்குகிறது. அவர் பூதேவியை உபாசித்து ஞானத்தைப் பெற்றவர் என்பர். இந்த உப நிஷத்து ருக்வேதத்தில் ஐதரேய ஆரண்யகம் இரண்டாவது பாகத்தில் நாலு, ஐந்து, ஆருவது அத்தியாயங்களாக அமைந்துள்ளது. 'ப்ரஜ்ஞானம் ப்ரம்ம' என்னும் ருக்வேத மஹாவாக்கியம் இங்கு உபதேசிக்கப்படுகிறது.

ப்ரதமேऽத்யாயே ப்ரதம : கண்ட :

ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீந் நான்யத் கிஞ்சன மிஷத் | ஸ ஈக்ஷத லோகாந்நு ஸ்ருஜா இதி ஸ இமான் லோகானஸ்ருஜத || 1.1.1. ||

அம்போ மரீசீர்–மரமாபோ ऽதோ ऽம்ப : பரேண திவம் த்யௌ : ப்ரதிஷ்டாந்தரிக்ஷம் மரீசய : | ப்ருதிவீ மரோ யா அதஸ்தாத்தா ஆப: || 1.1.2. ||

ஸ ஈக்ஷதேமே நு லோகா லோகபாலான்னு ஸ்ருஜா இதி | ஸோऽத்ப்ய ஏவ புருஷம் ஸமுத்த்ருத்யாமூர்ச்சயத் || 1.1.3. ||

---

முதல் அத்தியாயத்தில் முதல் கண்டம்

1.1.1. இது ஆத்மா ஒன்ருகவே ஆதியில் இருந்தது; வேறு எதுவும் இல்லை; உலகங்களைச் சிருஷ்டிக்க அது விரும்பியது;அது இவ்வுலகங்களைச்சிருஷ்டித்தது.

1.1.2. (அதாவது) 'அம்பஸ்', 'மரீசி', 'மரம்' 'ஆப' (என்ற சொற்களால் குறிக்கப்படும் உலகங்களை) அம்பஸ் ஸ்வர்க்கலோகத்திற்கு மேல்; அதற்கு ஆதாரமாக உளது ஸ்வர்க்க லோகம்; மரீசீ (கிரணங்கள் நிறைந்த) அந்தரிக்ஷம்; மரம் என்பது (மரிப்பவர்கள் வசிக்கும்) பூமி; எது அதற்குக் கீழே உள்ளதோ அது (ஆப :) ஜலமயமான உலகம்.

1.1.3. அது (ஆத்மா) நினைத்தது, 'இவை உலகங்கள்; உலகபாலகர்களைச் சிருஷ்டிப்பேன்' என்று. (பாலிலிருந்து வெண்ணெய் எடுப்பது போல்) நீரைப் பிரதானமாக உடைய ஐம்பூதங்களினின்றே புருஷனை (பிண்ட வடிவாக) திரட்டியெடுத்து உருவாக்கிற்று.

तमभ्यतपत्तस्याभितप्तस्य मुखं निरभिद्यत यथाण्डं मुखाद्वा-ग्वाचोऽग्निर्नासिके निरभिद्येतां, नासिकाभ्यां प्राणः प्राणाद्वायुरक्षिणी निरभिद्येतां, अक्षिभ्यां चक्षुश्चक्षुष आदित्यः, कर्णौ निरभिद्येतां, कर्णाभ्यां श्रोत्रं श्रोत्राद्दिशस्त्वङ्निरभिद्यत त्वचो लोमानि, लोमभ्य ओषधिवनस्पतयो, हृदयं निरभिद्यत, हृदयान्मनो मनसश्चन्द्रमा, नाभिर्निरभिद्यत नाभ्या अपानोऽपानान्मृत्युः, शिश्नं निरभिद्यत शिश्नाद्रेतो, रेतस आपः || १.१.४ ||

## प्रथमेऽध्याये द्वितीयः खण्डः

ता एता देवताः सृष्टा अस्मिन् महत्यर्णवे प्रापतं-स्तमशना-पिपासाभ्यामन्ववार्जत् । ता एन-मब्रुवन्नायतनं नः प्रजानीहि यस्मिन् प्रतिष्ठिता अन्नमदामेति || १.२.१ ||

1.1.4. அதைப்பற்றி (ஆத்மா) சிந்தித்தது. அச் சிந்தனையால், முட்டை பிளப்பதுபோல், வாயின் துவாரம் உண்டாயிற்று, வாயிலிருந்து வாக்கு ; வாக்கிலிருந்து அக்கினி ; பின்பு நாசிகளின் துவாரங்கள் உண்டாயின ; நாசிகளினின்று பிராணன். பிராணனிலிருந்து வாயு. கண்களின் துவாரங்கள் உண்டாயின ; கண்களிலிருந்து பார்வை; பார்வையிலிருந்து சூரியன். காதுகளின் துவாரங்கள் உண்டாயின. காதுகளிலிருந்து கேள்வி; கேள்வியிலிருந்து திசைகள் ; தோலில் துவாரமுண்டாயிற்று. தோலிலிருந்து உரோமங்கள்; உரோமங்களிலிருந்து செடிகொடிகளும் மரங்களும். இருதயத்தின் துவாரம் உண்டாயிற்று;

தமப்யதபத் தஸ்யாபிதப்தஸ்ய முகம் நிர
பித்யத யதாண்டம், முகாத் வாக் வாசோ ऽக்னிர்—
நாஸிகே நிரபித்யேதாம், நாஸிகாப்யாம் ப்ராண:,
ப்ராணாத்-வாயு-ரக்ஷிணீ நிரபித்யேதாம் அக்ஷிப்
யாம் சக்ஷுச்-சக்ஷுஷ ஆதித்ய:, கர்ணௌ நிரபித்யே
தாம், கர்ணாப்யாம் ச்ரோத்ரம் சரோத்ராத்-திசஸ்-
த்வங்நிரபித்யத, த்வசோ லோமானி,லோமப்யஓஷதி-
வனஸ்பதயோ, ஹ்ருதயம் நிரபித்யத, ஹ்ருதயான்
மனோ, மனஸச்சந்த்ரமா, நாபிர் – நிரபித்யத நாப்யா
அபானோ ऽபானன் ம்ருத்யு:, சிச்னம் நிரபித்யத,
சிச்னாத் ரேதோ, ரேதஸ ஆப: || 1.1.4. ||

ப்ரதமேऽத்யாயே த்விதீய: கண்ட:

தாஏதா தேவதா: ஸ்ருஷ்டா அஸ்மின் மஹத்
யர்ணவே ப்ராபதம்ஸ் தமசனா—பிபாஸாப்யா—மன்
வவார்ஜத் | தா ஏன-மப்ருவன்னயதனம் ந: ப்ர
ஜானீஹி யஸ்மின் ப்ரதிஷ்டிதா அன்னமதாமேதி
|| 1.2.1 ||

---

இருதயத்திலிருந்து மனது; மனதிலிருந்து சந்திரன். நாபித்துவாரமுண்டாயிற்று; நாபியிலிருந்து அபானன்; அபானனிலிருந்து சாவு. ஆண் குறியின் துவாரமுண்டாயிற்று; ஆண் குறியினின்று ரேதஸ்; ரேதஸ்ஸிலிருந்து அப்பு.

ताभ्यो गामानयत् ता अब्रुवन् न वै नोऽयमलमिति ।
ताभ्योऽश्वमानयत् ता अ ुवन् न वै नोऽयमलमिति ॥ १.२.२ ॥

ताभ्यः पुरुषमानयत् ता अब्रुवन् सुकृतं बतेति पुरुषो वाव सुकृतम् । ता अब्रवीद्यथायतनं प्रविशतेति ॥ १.२.३ ॥

अग्नि-र्वाग्भूत्वा मुखं प्राविश-द्वायुः प्राणो भूत्वा नासिके प्राविश-दादित्यश्चक्षुर्भूत्वाऽक्षिणी प्राविश-द्दिशः श्रोत्रं भूत्वा कर्णौ प्राविश-न्नोषधिवनस्पतयो लोमानि भूत्वा त्वचं प्राविशन् चन्द्रमा मनो भूत्वा हृदयं प्राविशन् मृत्यु-रपानो भूत्वा नाभिं प्राविशदापो रेतो भूत्वा शिश्नं प्राविशन् ॥ १.२.४ ॥

## முதல் அத்தியாயத்தில் இரண்டாவது கண்டம்

**1.2.1.** இங்கு இங்ஙனம் சிருஷ்டிக்கப்பட்ட (அக்னி முதலிய) இந்த தேவதா சக்திகள் இந்தப் பெரிய (ஸம்ஸார) ஸமுத்திரத்தில் வீழ்ந்தன. அந்த ஆதிபுருஷனை (சிருஷ்டிகர்த்தா) பசிக்கும் தாகத்துக்கும் உள்ளாக்கினார். (பசிக்கும் தாகத்துக்கும் உள்ளான) தேவதா சக்திகள் சிருஷ்டிகர்த்தா வாகிய அவரிடம் "எந்த இடத்தில் நிலைபெற்று நாங்கள் அன்னத்தைப் புசிக்கலாமோ அப்படிப்பட்ட இடத்தை எங்களுக்குக் கல்பியுங்கள்" என்று கூறின.

**1.2.2.** அந்தச் சக்திகளிடம் அவர் (சிருஷ்டி கர்த்தா) ஒரு பசுவைக் கொண்டு வந்தார். "இது எங்களுக்குப் போதாது" என்று அவைகள் கூறின. அவர் அவைகளிடம் ஒரு குதிரையைக் கொண்டு வந்தார். அவைகள் "இதுவும் எங்களுக்குப் போதாது" என்றன.

தாப்யோ காமானயத் தா அப்ருவன் ந வை நோsய-மலமிதி, தாப்யோ sச்வமானயத் தா அப்ருவன் ந வை நோsயமலமிதி || 1.2.2 ||

தாப்ய: புருஷ மானயத் தா அப்ருவன் ஸுக்ருதம் பதேதி புருஷோ வாவ ஸுக்ருதம் | தா அப்ரவீத் யதாயதனம் ப்ரவிசதேதி || 1.2.3. ||

அக்னிர்-வாக்பூத்வா முகம் ப்ராவிசத்—வாயு: ப்ராணோ பூத்வா நாஸிகே ப்ராவி ச-தாதித்யச்-சக்ஷுர் பூத்வா sக்ஷிணீ ப்ராவிசத்-திச: ச்ரோத்ரம் பூத்வா கர்ணௌ ப்ராவிசந்-நோஷதி - வனஸ்பதயோ லோமானி பூத்வா த்வசம் ப்ராவிசன்ச் சந்த்ரமா மனோ பூத்வா ஹ்ருதயம் ப்ராவிசன்- ம்ருத்யு-ரபானோ பூத்வா நாபிம் ப்ராவிச-தாபோ ரேதோ பூத்வா சிச்னம் ப்ராவிசன் || 1.2.4. ||

---

1.2.3. அவைகளிடம் அவர் ஒரு மனிதனைக் கொண்டு வந்தார். "இது நன்றாயமைந்திருக்கிறது. மனித வடிவம் உண்மையில் எல்லா நற்செயல்களுக்கும் உறைவிடமா யமைந்துள்ளது. (இது போதும்)" என்றன. 'அவரவர்க்குரிய இடங்களில் இதில் பிரவேசியுங்கள்' என்று அவைகளிடம் அவர் கூறினார்.

1.2.4. அக்கினி வாக்காகி வாயில் புகுந்தது; வாயு பிராணனாகி மூக்கில் புகுந்தது; சூரியன் பார்வையாகிக் கண்ணில் புகுந்தது; திசைகள் கேள்வியாகிக்

तमशनायापिपासे अब्रूता-मावाभ्या-मभिप्रजानीहीति । ते अब्रवी-देतास्वेव वां देवतास्वाभजाम्येतासु भागिन्यौ करोमीति । तस्माद्यस्यै कस्यै च देवतायै हविर्गृह्यते भागिन्यावेवास्या-मशनाया-पिपासे भवतः ॥ १.२.५ ॥

## प्रथमेऽध्याये तृतीयः खण्डः

स ईक्षतेमे नु लोकाश्च लोकपाला-श्चान्नमेभ्यः सृजा इति ॥ १.३.१ ॥

सोऽपोऽभ्यतपत् ताभ्योऽभितप्ताभ्यो मूर्ति-रजायत । या वै सा मूर्ति-रजायतान्नं वै तत् ॥ १.३.२ ॥

तदेन-दभिसृष्टं पराङ्त्यजिघांसत् तद्वाचा ऽजिघृक्षत्तन्ना शक्नोद्वाचा ग्रहीतुम् । स यद्धैन-द्वाचाऽग्रहैष्य-दभिव्याहृत्य हैवान्न-मत्रप्स्यत् ॥ १.३.३ ॥

காதில் புகுந்தன; ஓஷதி வனஸ்பதிகள் உரோமங்களாகித் தோலில் புகுந்தன; சந்திரன் மனதாகி இருதயத்தில் புகுந்தது; மிருத்யு அபானனுகி நாபியில் புகுந்தது; தண்ணீர் ரேதஸாகி ஆண் குறியில் புகுந்தது.

1.2.5. பசியும் தாகமும் 'எங்களுக்கு ஒரு இடத்தைக் கல்பியுங்கள்' என்று அவரிடம் கூறின. '(அக்னி முதலிய) இந்த தேவதைகளிடம் உங்களுக்கு இடமளித்து இவர்களிடம் பாகமுடையவர்களாக உங்களைச் செய்கிறேன்' என்று அவர் அவர்களிடம் கூறினார். ஆகையால் எந்த ஒரு தேவதைக்கு ஹவிஸ்

தமசனுயா - பிபாஸே அப்ருதா - மாவாப்யா-மபி ப்ரஜானீஹீதி | தே அப்ரவீ-தேதாஸ்வேவ வாம் தேவதாஸ்வா பஜாம் - யேதாஸ்ய பாகின்யௌ க்ரோமீதி | தஸ்மாத் யஸ்யை கஸ்யை ச தேவதாயை ஹவிர் - க்ருஹ்யதே பாகின்யாவேவாஸ்யா-மசனுயா பிபாஸே பவத: || 1.2.5. ||

ப்ரதமேऽத்யாயே த்ருதீய: கண்ட:

ஸ ஈக்ஷதமே நு லோகாச்ச லோகபாலாச்சான்ன மேப்ய: ஸ்ருஜா இதி || 1.3.1. ||

ஸோऽபோऽப்யதபத் தாப்யோऽபிதப்தாப்யோ மூர்த்தி-ரஜாயத | யா வை ஸா மூர்த்தி-ரஜாயத தான்னம் வை தத் || 1.3.2 ||

ததேந-தபிஸ்ருஷ்டம் பராங்த்யஜிகாம்ஸத் தத் வாசாऽஜிக்ருக்ஷத் தந்நாசக்னோத்-வாசா க்ரஹீதும், ஸ யத்-தைனத்-வாசாऽக்ரஹைஷ்ய - தபி - வ்யாஹ்ருத்ய ஹைவான்ன-மத்ரப்ஸ்யத் || 1.3.3 ||

---

அளிக்கப் பட்டாலும் பசியும் தாகமும் அதில் பங்குடையவர்களாகின்றனர்.

## முதல் அத்தியாயத்தில் மூன்றுவது கண்டம்

**1.3.1.** 'இவ்வுலகங்களும் உலகத்தைக் காப்பவர்களும் (இவ்வாருகச் சிருஷ்டிக்கப் பெற்றனர்) இவர்களுக்கு இனி அன்னத்தைச் சிருஷ்டிக்கிறேன்' என்று அவர் (ஈசுவரர்) எண்ணிஞர்.

तत्प्राणेनाजिघृक्षत् तन्नाशक्नोत्प्राणेन ग्रहीतुम् । स यद्धैन-
त्प्राणेनाग्रहैष्यदभिप्राण्य हैवान्नमत्रप्स्यत् ॥ १.३.४ ॥

तच्चक्षुषाऽजिघृक्षत् तन्नाशक्नोच्चक्षुषा ग्रहीतुम् । स यद्धैन-
च्चक्षुषाऽग्रहैष्यद्दृष्ट्वा हैवान्नमत्रप्स्यत् ॥ १.३.५ ॥

तच्छ्रोत्रेणाजिघृक्षत् तन्नाशक्नोच्छ्रोत्रेण ग्रहीतुम् । स यद्धै-
नच्छ्रोत्रेणाग्रहैष्यच्छ्रुत्वा हैवान्नमत्रप्स्यत् ॥ १.३.६ ॥

तत् त्वचाजिघृक्षत् तन्नाशक्नोत्त्वचा ग्रहीतुम् । स यद्धैनत्त्वचा-
ऽग्रहैष्यत् स्पृष्ट्वा हैवान्न-मत्रप्स्यत् ॥ १.३.७ ॥

**1.3.2.** அவர் அப்புவைச் சிந்தித்தார். அங்ஙனம் சிந்திக்கப்பெற்ற அப்புவிலிருந்து ஒரு உருவம் தோன்றிற்று. எந்த உருவம் தோன்றிற்றோ அதுதான் அன்னம்.

**1.3.3.** அங்ஙனம் சிருஷ்டிக்கப்பட்ட அன்னம் ஓடி மறைய விரும்பிற்று. ஆதி புருஷன் அதை வாக்கினால் பிடிக்க முயன்றான், ஆனால் வாக்கினால் பிடிக்க முடியவில்லை. வாக்கினால் பிடித்திருக்கக் கூடுமானால் ஒருவன் அன்னத்தைப் பற்றிப் பேசுவதாலேயே திருப்தியடைவான்.

1.3.4. (பின்னர் ஆதிபுருஷன்) அதைப் (பிராணனால்) மூச்சால் பிடிக்க முயன்றான், ஆனால் மூச்சால் பிடிக்க முடியவில்லை. மூச்சால் பிடித்திருக்கக் கூடு

---

1.3.3. அன்னம் ஓடி மறைய விரும்பிற்று—பூனையைக் கண்டு எலி அஞ்சி ஓடுவதுபோல், அன்னத்தை உண்பவரைக் கண்டு அன்னம் அஞ்சிற்று —சங்.

தத்ப்ராணேனுஜிக்ருக்ஷத் தந்நாசக்நோத் ப்ராணேன க்ரஹீதும் | ஸ யத்தைனத் ப்ராணேனுக்ரஹைஷ்ய-தபிப்ராண்ய ஹைவான்ன - மத்ரப்ஸ்யத் || 1.3.4 ||

தச்சக்ஷுஷா ऽஜிக்ருக்ஷத் தந்நாசக்நோச்-சக்ஷுஷா க்ரஹீதும் | ஸ யத்தைனச்-சக்ஷுஷா ऽக்ரஹைஷ்யத்-த்ருஷ்ட்வா ஹைவான்ன-மத்ரப்ஸ்யத் || 1.3.5 ||

தச்ச்ரோத்ரேணுஜிக்ருக்ஷத் தந்நாசக்நோச் ச்ரோத்ரேண க்ரஹீதும் | ஸ யத்தைனச்ச்ரோத்ரேணு க்ரஹைஷ்யச்-ச்ருத்வா ஹைவான்ன - மத்ரப்ஸ்யத் || 1.3.6 ||

தத் த்வசாஜிக்ருக்ஷத் தந்நாசக்நோத் த்வசா க்ரஹீதும் | ஸ யத்தைனத் த்வசா ऽக்ரஹைஷ்யத் ஸ்ப்ருஷ்ட்வா ஹைவான்ன-மத்ரப்ஸ்யத் || 1.3.7 ||

---

மானுல் ஒருவன் அன்னத்தை முகர்வதாலேயே திருப்தியடைவான்.

1.3.5. அதைக் கண்ணுல் பிடிக்க முயன்றுன், ஆனுல் கண்ணுல் பிடிக்க முடியவில்லை. கண்ணுல் பிடித்திருக்கக் கூடுமானுல், ஒருவன் அன்னத்தைப் பார்ப்பதாலேயே திருப்தியடைவான்.

1.3.6. அதைக் காதால் பிடிக்க முயன்றுன், ஆனுல் காதால் பிடிக்க முடியவில்லை. காதால் பிடித்திருக்கக் கூடுமானுல், ஒருவன் அன்னத்தைப் பற்றிக் கேப்பதாலேயே திருப்தியடைவான்.

तन्मनसाऽजिघृक्षत् तन्नाशक्नोन्मनसा ग्रहीतुम् । स यद्धैनन्मनसा-ऽग्रहैष्यद् ध्यात्वा हैवान्न-मत्रप्स्यत् ॥ १.३.८ ॥

तच्छिश्नेनाजिघृक्षत् तन्नाशक्नोच्छिश्नेन ग्रहीतुम् । स यद्धैनच्छिश्नेनाग्रहैष्य-द्विसृज्य हैवान्नमत्रप्स्यत् ॥ १.३.९ ॥

तदपानेनाजिघृक्षत् तदावयत् । सैषोऽन्नस्य ग्रहो यद्वायु-रन्नायुर्वा एष यद्वायुः ॥ १.३.१० ॥

स ईक्षत कथं न्विदं मदृते स्यादिति स ईक्षत कतरेण प्रपद्या इति । स ईक्षत यदि वाचाऽभिव्याहृतं यदि प्राणेनाभिप्राणितं यदि चक्षुषा दृष्टं यदि श्रोत्रेण श्रुतं यदि त्वचा स्पृष्टं यदि मनसा ध्यातं यद्यपानेनाभ्यपानितं यदि शिश्नेन विसृष्ट-मथ कोऽहमिति ॥ १.३.११ ॥

1.3.7. அதை உணர்வால் பிடிக்க முயன்றான் ஆனால் உணர்வால் பிடிக்க முடியவில்லை. உணர்வால் பிடித்திருக்கக் கூடுமானால், ஒருவன் அன்னத்தைத் தொட்டு உணர்வதாலேயே திருப்தியடைவான்.

1.3.8. அதை மனதால் பிடிக்க முயன்றான். ஆனால் மனதால் பிடிக்க முடியவில்லை. மனதால் பிடித்திருக்கக் கூடுமானால், ஒருவன் அன்னத்தைப் பற்றி நினைப்பதாலேயே திருப்தியடைவான்.

1.3.9. அதை ஆண்குறியால் பிடிக்க முயன்றான், ஆனால் பிடிக்க முடியவில்லை: ஆண்குறியால் பிடித்திருக்கக் கூடுமானால், ஒருவன் (தன்னிடமிருந்து) அன்னத்தைக் கழிப்பதாலேயே திருப்தியடைவான்.

தன்மனஸாऽஜிக்ருக்ஷத் தந்நாசக்னோன் மனஸா க்ரஹீதும் | ஸ யத்தைனன் மனஸா ऽக்ரஹைஷ்யத் த்யாத்வா ஹைவான்ன-மத்ரப்ஸ்யத் || 1.3.8 ||

தச்சிச்னேனாஜிக்ருக்ஷத் தந்நாசக்னோச்சிச் னேன க்ரஹீதும் | ஸ யத்தைனச் சிச்னேனாக்ரஹை ஷ்யத் விஸ்ருஜ்ய ஹைவான்ன-மத்ரப்ஸ்யத் || 1.3.9 ||

தத்பானேனாஜிக்ருக்ஷத் ததாவயத் | ஸைஷோ ऽன்னஸ்ய க்ரஹோ யத்வாயு-ரன்னாயுர்வா ஏஷ யத்வாயு : || 1.3.10 ||

ஸ ஈக்ஷத கதம் ந்விதம் மத்ருதே ஸ்யாதிதி ஸ ஈக்ஷத கதரேண ப்ரபத்யா இதி | ஸ ஈக்ஷத யதி வாசா ऽபிவ்யாஹ்ருதம் யதி ப்ராணேனாபிப்ராணிதம் யதி சக்ஷுஷா த்ருஷ்டம் யதி ச்ரோத்ரேண ச்ருதம் யதி த்வசா ஸ்ப்ருஷ்டம் யதி மனஸா த்யாதம் யத்யபானேனா-ப்யபானிதம் யதி சிச்னேன விஸ்ருஷ்ட-மத கோ ऽஹமிதி || 1.3.11 ||

---

1.3.10. அதை அபானனால் (வாயின் வழியாகப்) பிடிக்க முயன்றான், (அப்போது) அது பிடிக்கப் பட்டது. இந்த அபானவாயுதான் அன்னத்தைப் பிடிப்பது. இந்த அபானவாயுவின் உயிர் நிலை அன்னம்.

1.3.11. 'நான் இல்லாமல் இது எப்படி இருக்கும்?' என்று ஆதிபுருஷன் எண்ணினான். ஆகையால் நான் எந்த வழியாக உள்ளே புகலாம்?' என்று யோசித்தான்.

स एतमेव सीमानं विदार्यैतया द्वारा प्रापद्यत। सैषा विद्दतिर्नाम द्वास्तदेतन्नान्दनं। तस्य त्रय आवसथा-स्त्रयः स्वप्ना अयमावसथो ऽयमावसथो ऽयमावसथ इति ॥ १.३.१२ ॥

स जातो भूतान्यभिव्यैख्यत् किमिहान्यं वावदिषदिति। स एतमेव पुरुषं ब्रह्म ततम-मपश्यदिद-मदर्शमिती ३ ॥ १.३.१३ ॥

'வாக்கால் பேச்சும், பிராணனுல் மூச்சும், கண்ணுல் பார்வையும், காதால் கேள்வியும், தோலால் உணர்வும், மனதால் எண்ணமும்,அபானனுல் அன்னத்தைப்புசித்தலும் ஆண்குறியால் கழித்தலும் ஏற்படுகிறதென்ருல் (என் வேலை என்ன) நான் யார்?' என்று மீண்டும் யோசித்தான்.

1.3.12. அந்த ஆதிபுருஷன் (தலையின் உச்சியாகிய) இந்த எல்லையைப் பிளந்து கொண்டு இந்த வாயிலின் வழியாக உள்ளே புகுந்தான். இந்த வாயிலுக்கு 'வித்ருதி' எனப்பெயர் இது (நாந்தனம்) ஆனந்தத்தின் உறைவிடம். அப்புருஷனுக்கு உறைவிடம் மூன்று—உறங்குமிடம் மூன்று. இவ்விடம், இவ்விடம், இவ்விடம்.

---

1.3 12. வித்ருதி :— (விதாரிதத்வாத் வித்ருதி:) பிளக்கப் பட்டதால் வித்ருதி எனப் பெயர். இது பிரம்ம ரந்த்ரம் எனப்படும். யோகிகளின் பிராணன் இந்த வழியே வெளிச் செல்லும். இது யஜமானன் செல்லும் ராஜத்வாரம். கண், காது முதலிய துவாரங்கள் வேலையாட்கள் செல்லும் வாயில்கள்.

நாந்தனம் :— (நாந்தனம் நந்தனமேவ, நாந்தனமிதி தைர்க்யம் சாந்தஸம். நந்தத்யனேன த்வாரேண கத்வா பரஸ்மின் ப்ரஹ்மணீதி) நந்தனம் என்னும் சொல்லே வேத பாஷையில் நாந்தனம் என நீண்டது. பிரம்மரந்திரத்தின் வழியாகச் சென்று பரப்பிரம்மத்துடன் கூடி ஆனந்தத்தை

ஸ ஏதமேவ ஸீமானம் விதார்-யைதயா த்வாரா ப்ராபத்யத | ஸைஷா வித்ருதிர்-நாம த்வாஸ்-ததே தந்நாந்தனம்| தஸ்ய த்ரய ஆவஸதாஸ்-த்ரய: ஸ்வப்ந அயமாவஸதோ ऽயமாவஸதோ ऽயமாவஸத இதி || 1.3.12 ||

ஸ ஜாதோ பூதான்யபிவ்யைக்யத் கிமிஹான்யம் வாவதிஷ்யதிதி | ஸ ஏதமேவ புருஷம் ப்ரஹ்ம ததம-மபச்யதித-மதர்சமிதீ 3 || 1.3.13 ||

1.3.13. அப்புருஷன் இவ்வுடலில் (புகுந்து) பிறந்த பின் உண்டாய பொருள்களைப் பற்றியே விவகாரம் செய்தான். வேறு எதைப்பற்றி அவன் பேசுவான்? (ஞானோதயம் ஏற்பட்ட) பின்பு பிரம்மமாகிய புருஷன் எங்கும் வியாபித்திருக்கக் கண்டு 'இதை நான் கண்டு கொண்டேன்' என (ஆச்சரியத்துடன்) கூறினான்.

1.3.14. (இதம் என்று பரமபுருஷனைப் பார்த்த) இக்காரணத்தால் (பரமபுருஷன்) 'இதந்த்ரன்' எனப்படுகிறான். 'இதந்த்ரன்' என்பது பிரசித்தமான பெயர். 'இதந்த்ரன்' என்பதே 'இந்த்ரன்' என மறைத்துக் கூறப்படுகிறது. தேவர்கள் மறைந்திருப்பதில் பிரியமுள்ளவர்கள்போல் காண்கின்றனர்.

---

ஜீவன் அனுபவிப்பதால் இதற்கு நாந்தனம் என்ற சிறப்புப் பெயர்.

உறைவிடம் மூன்று :— தந்தையின் உடல், தாயின் உடல், தன் உடல்.

உறங்குமிடம் மூன்று :— ஜாக்ரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று நிலைகளும் அறிவில் விழிப்பில்லாமல் அஞ்ஞான உறக்கத்தைப் போலிருப்பதால் மூன்றுமே உறக்கமாய்க் கூறப்பட்டது. ஜாக்ரத்தில் இடம் வலதுகண்,

तस्मादिदन्द्रो नामेदन्द्रो ह वै नाम तमिदन्द्रं सन्तमिन्द्र इत्याचक्षते परोक्षेण। परोक्षप्रिया इव हि देवाः परोक्ष प्रिया इव हि देवाः ॥ १.३.१४ ॥

## द्वितीयोऽध्यायः

पुरुषे ह वा अयमादितो गर्भो भवति। यदेतद्रेत-स्तदेतत् सर्वेभ्योऽङ्गेभ्यस्तेजः संभूतमात्मन्येवात्मानं बिभर्ति तद्यथा स्त्रियां सिंचत्यथै-नज्जनयति तदस्य प्रथमं जन्म ॥ २.१ ॥

तत्स्त्रिया आत्मभूयं गच्छति यथा स्वमंगं तथा। तस्मादेनां न हिनस्ति, साऽस्यैतमात्मान-मत्र गतं भावयति ॥ २.२ ॥

## இரண்டாவது அத்தியாயம்

2.1. இவன் ஆதியில் புருஷனிடத்தில் (விந்து வடிவான) கர்ப்பமாயிருக்கிறான். இந்த விந்து எதுவோ அது எல்லா உறுப்புக்களின் சக்தியும் திரண்டு உண்டாகியது. (அந்த விந்து வடிவான) தன்னைப் புருஷன் தன்னிடத்துக் (கருவாய்த்) தானே

---

ஸ்வப்னத்தில் மனது, ஸுஷுப்தியில் இருதயம். 'இவ் விடம், இவ்விடம், இவ்விடம்' என்று இம்மூன்றுமே சுட்டிக் காட்டப்பட்டன.

1.3.13. ததமம்: (தகாரேண ஏகேன லுப்தேன தத-தமம் வ்யாப்த-தமம் பரிபூர்ணம் ஆகாசவத்) குறைந்திருக்கும் ஒரு 'த'வைச் சேர்த்து 'தத-தமம்'-வ்யாப்த-தமம் அதாவது சிறப்பாக எங்கும் வியாபித்தது, ஆகாசத்தைப் போல் பரிபூர்ணம் என்று கொள்ளவேண்டும். அப்படிப் பட்ட பிரம்மத்தை குருவின் உபதேசத்தால் ஜீவன் காண்கிறான்.

இதீ:—ஆச்சரியத்தைக் காட்ட 'இதீ' என்று நீண்டது.

தஸ்மாதிதந்த்ரோ நாமேதந்த்ரோ ஹ வை நாம தமிதந்த்ரம் ஸந்த-மிந்த்ர இத்யாசக்ஷதே பரோக்ஷேண | பரோக்ஷப்ரியா இவ ஹி தேவா: பரோக்ஷப்ரியா இவ ஹி தேவா: || 1.3.14 ||

## த்விதீயோऽத்யாய:

புருஷே ஹ வா அயமாதிதோ கர்போ பவதி யதேதத்ரேதஸ்—ததேதத் ஸர்வேப்யோ ऽங்கேப்யஸ் தேஜ: ஸம்பூத மாத்மன்யே வாத்மானம் பிபர்த்தி, தத்யதா ஸ்த்ரியாம் ஸிஞ்சத்யதைநஜ் ஜனயதி தத்ஸ்ய ப்ரதமம் ஜன்ம || 2.1 ||

தத்-ஸ்த்ரியா ஆத்மபூயங் கச்சதி யதா ஸ்வமங்கம் ததா | தஸ்மா-தேனம் ந ஹிநஸ்தி, ஸாऽஸ்யை தமாத்மான-மத்ர-கதம் பாவயதி || 2.2 ||

---

தரிக்கிறான். அதை எப்போது ஸ்திரீயிடம் விடுகிறானோ அப்போது தன்னைப் பிறப்பிக்கிறான். அது இவனுடைய முதற்பிறப்பு.

2.2. அது உடலுக்குச் சொந்தமான ஒரு உறுப்பே போல் அந்த ஸ்திரீயுடன் ஒன்றுபட்டுப் போகின்றது. ஆகையால் அவளை அது துன்புறுத்துவதில்லை. அவள் இங்ஙனம் தன்னிடம் புகுந்த (பர்த்தாவின் ஆத்மாவேயாகிய) ஜீவனைப் பரிபாலிக்கிறாள்.

---

1.3.14. இதந்த்ர:—(இதம் பச்யதீதி இதந்த்ரோ நாம பரமாத்மா) இது என்று ஸாக்ஷாத்தாகப் பார்க்கப் படுவதால் 'இதந்த்ரன்' என்று பரமாத்மாவின் பெயர்.

सा भावयित्री भावयितव्या भवति, तं स्त्री गर्भं बिभर्ति, सोऽग्र एव कुमारं जन्मनोऽग्रे ऽधिभावयति। स यत्कुमारं जन्मनोऽग्रेऽधिभावय-त्यात्मान-मेव तद्भावयत्येषां लोकानां सन्तत्या एवं सन्तता हीमे लोका-स्तदस्य द्वितीयं जन्म ॥ २.३ ॥

सोऽस्याय-मात्मा पुण्येभ्यः कर्मभ्यः प्रतिधीयते। अथास्याऽयमितर आत्मा कृतकृत्यो वयोगतः प्रैति स इतः प्रयन्नेव पुन-र्जायते तदस्य तृतीयं जन्म ॥ २.४ ॥

तदुक्त-मृषिणा। गर्भे नु सन्नन्वेषा-मवेद-महं देवानां जनिमानि विश्वा। शतं मा पुर आयसी-ररक्षन्नधः श्येनो जवसा निरदीय-मिति, गर्भ एवैतच्छयानो वामदेव एवमुवाच ॥ २.५ ॥

2.3. அங்ஙனம் பரிபாலிக்கும் அவளும் பரிபாலித்தற்குரியவளாகிறாள். அவள் (இவ்வாறாக) கர்ப்பத்தைச் சுமக்கிறாள். அவன் (பிதா) பிறப்புக்கு முன்னாலேயே தனக்குக் குமாரனைவிட்ட அவனைப் பிறப்புக்கு முன்னும் பின்னும் போற்றுகிறான். எதனால் குமாரனைப் பிறப்புக்கு முன்னும் பின்னும் போற்றுகிறானோ அதனால் அவன் தன்னையே தான் போற்றிக்கொள்கிறான். இது இவ்வுலகத் தொடர்பு நீடிப்பதற்காகவே. இவ்வாறே (புத்திரோத்பத்தியாலேயே இம்மையும் மறுமையுமான) உலகங்களின் தொடர்பு (ஸந்ததி) அறுபடாமல் பெருகி வருகின்றது. (இங்ஙனம் ஸ்திரீயிடமிருந்து பிறக்கும்) இது இவனுடைய இரண்டாவது பிறப்பு.

2.4. (பிதாவினுடைய) ஆத்மாவேயாகிய இவன் புண்ணிய கருமங்களில் இவ்வுலகில் (பிதாவுக்குப்

ஸா பாவயித்ரீ பாவயிதவ்யா பவதி, தம் ஸ்த்ரீ கர்பம் பிபர்த்தி, ஸோऽக்ர ஏவ குமாரம் ஜன்மனோऽக்ரேऽதிபாவயதி | ஸ யத்குமாரம் ஜன்மனோऽக்ரேऽதிபாவயத்-யாத்மான-மேவ தத்பாவயத்-யேஷாம் லோகாநாம் ஸந்தத்யா ஏவம் ஸந்ததா ஹீமே லோகாஸ்-ததஸ்ய த்விதீயஞ் ஜன்ம || 2.3 ||

ஸோ ऽஸ்யாய-மாத்மா புண்யேப்ய: கர்மப்ய: ப்ரதிதீயதே | அதாஸ்யா ऽயமிதர ஆத்மா க்ருதக்ருத்யோ வயோகத: ப்ரைதி ஸ இத: ப்ரயந்நேவ புனர்-ஜாயதே ததஸ்ய த்ருதீயம் ஜன்ம || 2.4 ||

---

பிரதிநிதியாகிறான். (பிதாவின் உடலிலுள்ள) அவனுடைய மற்றொரு ஆத்மா வயது சென்றதாய் இங்கு செய்வனவற்றைச் செய்து முடித்ததாய்ப் பிரயாணப் படுகின்றது. பிரயாணப்படும்போது மீண்டும் (வேற்றுடலில் புகுந்து) பிறப்பை யடைகின்றது. அது அவனுடைய மூன்றாவது பிறப்பு.

---

2.3. பிறப்புக்கு முன்னும் பின்னும் போற்றுகிறான்:—கர்ப்பாதானம், பும்ஸவனம் முதலிய ஸம்ஸ்காரங்களால் பிறப்புக்கு முன்னும், ஜாதகர்மா, நாமகரணம், உபநயனம், வித்யாப்பியாஸம் முதலியவற்றால் பின்னும் போற்றுகிறான்.

2.4. மூன்றாவது பிறப்பு :—தகப்பனிடமிருந்து தாயிடம் புகுந்தது முதல் பிறப்பு. தாயிடமிருந்து உலகில் புகுந்தது இரண்டாவது பிறப்பு. இவ்வுலகை விட்டு அவ்வுலகிற் புகுந்தது மூன்றாவது பிறப்பு. இறப்பும் மற்றோரிடத்தில் பிறப்பேயாகின்றது.

स एवं विद्वा-नस्माच्छरीरभेदा-दूर्ध्व उत्क्रम्य, अमुष्मिन् स्वर्गे लोके सर्वान् कामानाप्त्वा ऽमृतः समभवत्, समभवत ॥ २.६ ॥

## तृतीयोऽध्यायः

कोऽयमात्मेति वय-मुपास्महे, कतरः स आत्मा, येन वा पश्यति, येन वा शृणोति, येन वा गन्धा-नाजिघ्रति, येन वा वाचं व्याकरोति, येन वा स्वादु चास्वादु च विजानाति ॥ ३.१ ॥

2.5 ரிஷி கூறியதாவது:— "கர்ப்பத்திலிருந்து கொண்டே நான் தேவஜன்மங்கள் அனைத்தையும் அறிந்தவனானேன். நூற்றுக் கணக்கான இரும்புக் கோட்டைகள் என்னை முன்னம் கீழே காவல் கொண்டன. (வலையை அறுத்துக்கொண்டு கிளம்பும்) பருந்துபோல் வேகமாக வெளிக்கிளம்பிவிட்டேன்" கர்ப்பத்தில் சயனத்திலிருக்கையிலேயே இதைக் கூறினார் ரிஷி வாமதேவர்.

2.6. இவ்வண்ணம் ஞானியாகிய அவர் சரீரத்தை விட்டு உயர்நிலை சென்று ஆத்ம உலகில் எல்லா விருப்பங்களின் பூர்த்தியும் எய்தியவராய் அழியாத பதவியை அடைந்தவரானார்.

## மூன்றாவது அத்தியாயம்

3.1. எதனால் ஒருவன் உருவத்தைப் பார்க்கிறானோ, எதனால் ஓசையைக் கேட்கிறானோ, எதனால் வாசனையை முகர்கிறானோ, எதனால் வார்த்தையைப் பேசுகிறானோ எதனால் இனிப்பையுங் கசப்பையும் உணர்கிறானோ, எதை 'அயம் ஆத்மா' (இது ஆத்மா) என்று நாம் உபாசிக்கிறோமோ அந்த ஆத்மா எவ்வகைத்து?

தந்துக்தம் ருஷிணு | கர்பே நு ஸந்-நன்வேஷாமவேத-மஹம் தேவானும் ஜனிமானி விச்வா | சதம் மா புர ஆயஸீ-ரரக்ஷந்-நத: ச்யேனோ ஜவஸா நிரதீயமிதி, கர்ப ஏவைதச் சயானோ வாமதேவ ஏவமுவாச || 2.5 ||

ஸ ஏவமவித்வா-னஸ்மாச்-சரீரபேதா-தூர்த்வ உத்க்ரம்ய, அமுஷ்மின் ஸ்வர்கே லோகே ஸர்வான் காமா-னுப்த்வா ऽம்ருத: ஸமபவத் ஸமபவத் || 2.6 ||

## த்ருதீயோऽத்யாய:

கோऽயமாத்மேதி வய-முபாஸ்மஹே, கதர: ஸ ஆத்மா யேன வா பச்யதி, யேன வா ச்ருணோதி, யேன வா கந்தா-னுஜிக்ரதி, யேன வா வாசம்-வ்யாகரோதி, யேன வா ஸ்வாது சாஸ்வாது ச விஜாநாதி || 3.1 ||

---

2.5. கர்ப்பத்தில் சயனித்திருக்கையிலேயே :—

ஓ—(அத நவமே மாஸி ஸர்வலக்ஷண-ஜ்ஞானகரண-ஸம்பூர்ணோ பவதி பூர்வஜாதிம் ஸ்மரதி சுபாசுபஞ்ச கர்ம விந்ததி) ஒன்பதாவது மாதத்தில் எல்லா லக்ஷணங்களும் ஞானேந்திரிய கர்மேந்திரியங்களும் பூர்த்தியடைந்தவனுகிறான். முன் ஜன்மத்தை நினைக்கிறுன். புண்ணிய பாவங்களை உணர்கிறுன் (கர்ப்போபநிஷத்து : 3)

வாமதேவர் மட்டுமின்றி எல்லா ஜீவர்களுமே கர்ப்பத்திலிருக்கும்போது இந்த ஞானத்தை யடைவதாய் இவ்வுபநிஷத்துக் கூறுகிறது. ஆனல் வாமதேவருக்குப் பிறந்த பின்னும் அந்த ஞானம் நழுவாமல் நிலைத்திருந்தது. மற்றவர்களுக்கு நழுவிவிடுகிறது. (ஜாதமாத்ரஸ்து வைஷ்ணவேன வாயுனு ஸம்ஸ்ப்ருஷ்டஸ்—ததா ந ஸ்மரதி ஜன்மமரணானி ந ச கர்ம சுபாசுபம் விந்ததி) பிறந்தவுடனேயே

यदेतत् हृदयं मनश्चैतत्। संज्ञान-माज्ञानं विज्ञानं प्रज्ञानं मेधा दृष्टि-र्धृति-र्मति-र्मनीषा जूतिः स्मृतिः संकल्पः क्रतु-रसुः कामो वश इति। सर्वाण्येवैतानि प्रज्ञानस्य नामधेयानि भवन्ति ॥ ३.२ ॥

3.2. இங்கு இருதயம் எனப்படுவதும், மனம் எனப்படுவதும் அதுவே. ஸம்ஜ்ஞானம் (உணர்வு), ஆஜ்ஞானம் (ஆட்சி), விஜ்ஞானம் (கலைஞானம்), ப்ரஜ்ஞானம் (பகுத்தறிவு), மேதை (அறிவின் கூர்மை) திருஷ்டி (மனக்கண்கொண்டு காணுதல்), த்ருதி (மனோ திடம்), மதி (மனனசக்தி), மனீஷா (நிச்சயபுத்தி) ஜூதி (மனக்கலக்கம்), ஸ்ம்ருதி (ஞாபகசக்தி), ஸங்கல்பம் (விருப்பம்), க்ரது (தீர்மானம்), அஸு (பிராண சக்தி) காமம் (ஆசை), வசம் (விஷயங்களில் கவர்ச்சி) என்ற இவையெல்லாம் ப்ரஜ்ஞானத்தின் (வெவ்வேறு) பெயர்களேயாகின்றன.

---

விஷ்ணுமாயையின் வாயுவால் தொடப்பட்டதும் முன் பிறப்புக்களையும் புண்ணிய பாவ கர்மங்களையும் மறந்து விடுகிறான். (கர்ப்போபநிஷத்து : 4).

ஒ. கேன. 1. 1.

3.2. பதினாறு கலைகளுடன் சித்தாகாசத்தில் பிரகாசிப்பவனே இந்த ஆத்மா. பதினாறு கலைகளின் பெயர்கள் கூறப்படுகின்றன.

ஒ—ப்ரச்ன. 6.5.

மோக்ஷகாலத்தில் பதினைந்து கலைகளும் தத்தம் மூலஸ்தானத்துக்குச் சென்றுவிடுகின்றன. இந்திரியங்கள் அனைத்தும் தத்தம் அதிஷ்டான தேவதைகளிடம் சென்றுவிடுகின்றன. எல்லாக் கருமங்களும் ஆத்மாவும் அழிவில்லாப் பரம் பொருளில் ஒன்றுபடுகின்றன. (மு. 3.2.7.)

யதேதத் ஹ்ருதயம் மனச்சைதத் | ஸம்ஜ்ஞானமாஜ்ஞானம் விஜ்ஞானம் ப்ரஜ்ஞானம் மேதா த்ருஷ்டிர்-த்ருதிர் மதிர்—மனீஷா ஜூதி: ஸ்ம்ருதி: ஸங்கல்ப:க்ரது-ரஸு: காமோ வச இதி | ஸர்வாண்யேவைதானி ப்ரஜ்ஞானஸ்ய நாமதேயானி பவந்தி || 3.2. ||

ஏஷ ப்ரஹ்மைஷ இந்த்ர ஏஷ ப்ரஜாபதி-ரேதே ஸர்வே தேவா, இமானி ச பஞ்ச மஹாபூதானி, ப்ருதிவீ வாயு-ராகாச ஆபோ ஜ்யோதீம்ஷீத்யேதானீமானி ச க்ஷுத்ரமிச்ராணீவ | பீஜானீதராணி சேதராணி சாண்டஜானி ச ஜாருஜானி ச

ஒ.—(அத்ர ப்ரஜ்ஞா சப்தேன சிவ ஏவோச்யதே | ஸ்காந்தே ப்ரஹ்மகீதாயாம் ததைவோபப்ருஹ்மணா தர்சநாத் | 'சங்கராக்யந்து விஜ்ஞானம் பஹுதா சப்த்யதே புதை: | கேசித்த்ருதயமித்யாஹு' ரித்யாரப்ய 'வச இத்யாஸ்திகா: கேசித் ஸர்வாண்யேதானி ஸந்ததம் | ப்ரஜ்ஞானஸ்ய சிவஸ்யாஸ்ய நாமதேயான்யஸம்சய' மித்யந்தம்) இங்கு 'ப்ரஜ்ஞா' சப்தத்தால் கூறப்படுவது பரசிவமாகிய பரமாத்மாவே. ஸ்காந்தபுராணம் பிரம்மகீதையில் அங்ஙனமே விளக்கப்பட்டுள்ளது : சங்கரனே ஆகிய விஞ்ஞானம் புத்திமான்களால் பல பெயர்களால் கூறப்படுகிறது. சிலர் ஹ்ருதயம் என்கின்றனர் என்று ஆரம்பித்து 'வச' என்று சில ஆஸ்திகர்கள் கூறுகின்றனர் இவை எல்லாம் பரசிவனுடைய நாமதேயங்களே என்பதில் சந்தேகமில்லை என்பது வரைக்கும்.

—(லலிதாஸஹஸ்ரநாமபாஷ்யம்—பாஸ்கரராயர்

ஸ்ரீவித்யோபாஸகர்களால் ஷோடச (பதினாறு) கலைவடியாய் உபாசிக்கப்படும் பராசக்தியின் பிரபாவமும் இங்கு சூசிப்பிக்கப்பட்டதாகும்.

एष ब्रह्मैष इन्द्र एष प्रजापतिरेते सर्वे देवा इमानि च पञ्च महाभूतानि, पृथिवी वायु-राकाश आपो ज्योतींषीत्येतानीमानि च क्षुद्र-मिश्राणीव। बीजानीतराणि चेतराणि चाण्डजानि च जारुजानि च स्वेदजानि चोद्भिज्जानि चाश्वा गावः पुरुषा हस्तिनो यत्किंचेदं प्राणि जंगमं च पतत्रि च यच्च स्थावर। सर्वं तत्प्रज्ञानेत्रं प्रज्ञाने प्रतिष्ठितम्। प्रज्ञानेत्रो लोकः, प्रज्ञा प्रतिष्ठा, प्रज्ञानं ब्रह्म ॥ ३.३ ॥

स एतेन प्रज्ञेनात्मनास्माल्लोका-दुत्क्रम्य अमुष्मिन् स्वर्गे लोके सर्वान् कामानाप्त्वा ऽमृतः समभवत् समभवत् इत्योम् ॥ ३.४ ॥

*3.3.* இதுவே பிரம்மாவாயதும் இந்திரனுயதும் பிரஜாபதி ஆயதும், தேவர்களெல்லாமும்; மண், காற்று, ஆகாசம், நீர், நெருப்பு என்ற ஐம்பெரும் பூதங்களும்; அற்பமான பலவகை ஜந்துக்களும், பீஜங்களும்; முட்டையில் உண்டாவன, கருப்பையில் வளர்வன, வியர்வையில் வளர்வன, வித்திலிருந்து முளைப்பன; குதிரைகள், யானைகள், பசுக்கள், பக்ஷிகள், மனிதர்: இன்னும் எங்கெந்தப் பிராணிகள் உண்டோ அவைகளும், அசையும் பொருட்களும் அசையாப் பொருட்களும் எல்லாமும் பிரஜ்ஞையையே நேதாவாக உடையன; பிரஜ்ஞானத்திலேயே நிலைபெற்றுள்ளன. உலகம் பிரஜ்ஞானத்தால் நடத்தப்படுகிறது. பிரஜ்ஞானத்தில் நிலைபெறுகிறது. 'பிரஜ்ஞானமே பிரம்மம்.'

*3.4.* அவர் (வாமதேவர்) இந்தப் பிரஜ்ஞாத்மஞானத்தால் இவ்வுலகைவிட்டுக் கிளம்பி இங்கேயே

ஸ்வேதஜானி சோத்பிஜ்ஜானி சாச்வா காவ: புருஷா ஹஸ்திநோ, யத்கிஞ்சேதம் ப்ராணி ஜங்கமஞ்ச பதத்ரி ச, யச்ச ஸ்தாவரம் | ஸர்வம் தத் ப்ரஜ்ஞா நேத்ரம், ப்ரஜ்ஞாநே ப்ரதிஷ்டிதம் | ப்ரஜ்ஞா நேத்ரோ லோக:, ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டா, ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம || 3.3 ||

ஸ ஏதேன ப்ரஜ்ஞேனாத்மனாஸ்மால்லோகா-துத்க்ரம்ய, அமுஷ்மின் ஸ்வர்கே லோகே ஸர்வான் காமானாப்த்வாऽம்ருத: ஸமபவத் ஸமபவத் இத்யோம் || 3.4 ||

---

ஆத்ம உலகில் எல்லா விருப்பங்களின் பூர்த்தியும் எய்தியவராய் அழியாப் பதவியை அடைந்தவரானார், (அழியாப் பதவியை) அடைந்தவரானார்.

---

3.3. 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்பது ருக்வேத மஹா வாக்கியம். 'ப்ரஹ்மைவாஹமஸ்மி' என்பது யஜுர்வேத மஹாவாக்கியம். 'தத் த்வம் அஸி' என்பது ஸாமவேத மஹா வாக்கியம். 'அய-மாத்மா ப்ரஹ்ம' என்பது அதர்வவேத மஹாவாக்கியம்.

'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' என்ற தத்துவத்தைக் கண்டு கொண்ட வாமதேவரை ஸத்யோமுக்திக்கு உதாரணமாய்க் கூறுவர்.

ஓ. ஸாதன மார்க்கங்கள் மூன்று வகைப்படும்: பக்ஷி ரீதி, மர்க்கடரீதி, பிபீலிகாரீதி. பக்ஷி பழத்தைக் கொத்திப் பறக்கும்போது பழந்தவறி விடலாம். குரங்கு ஆகாரத்தைக் கௌவிக்கொண்டு தாண்டுகையில் நழுவவிடலாம். ஆனால் எறும்பு (பிபீலிகா) மெதுவாகவும் விடாமுயற்சியுடனும் ஆகாரத்தைச் சிறுகச் சிறுகச் சேகரித்துச் சாவதானமாய் அதை அனுபவிக்கிறது. (ரா. கி.)

ॐ वाङ्मे मनसि प्रतिष्ठिता मनो मे वाचि प्रतिष्ठितं....

अवतु मामवतु वक्तारम् अवतु वक्तारम् ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

॥ इति ऐतरेयोपनिषत् समाप्ता ॥

ஓம். என் வாக்கு மனதில் ஊன்றி நிற்கட்டும். மனமும் வாக்கில் ஊன்றி நிற்கட்டும்....அது என்னைக் காப்பாற்றட்டும்; ஆசாரியனைக் காப்பாற்றட்டும், ஆசாரியனைக் காப்பாற்றட்டும்.

ஓம். முவ்வகையிலும் சாந்தி நிலவுக !

---

**உபநிஷத்தின் விஷயச் சுருக்கம்—**

ஞானத்திற்கு அடிப்படை வைராக்கியம். ஸம்ஸாரத்தில் ஜீவன் பல பிறவியும் எடுத்து உழல்வதைச் சிந்தித்தால் வைராக்கியம் தோன்றும்.

ஜீவன் தகப்பனிடமிருந்து விந்துவடிவாய்த் தாயிடம் புகுவது முதல் பிறப்பு. தாயிடமிருந்து உலகில் ஜனிப்பது இரண்டாவது பிறப்பு. இவ்வுலகைவிட்டு அவ்வுலகிற் புகுவது மூன்றாவது பிறப்பு. வேறுலகங்களில் சுற்றிவிட்டு மீண்டும் அதே முறையில் கணக்கற்ற பிறப்பிறப்பு.

கர்ப்பத்திலிருக்கும்போதே இதையெல்லாம் சிந்தித்துப் பார்த்து ரிஷி வாமதேவர் ஞானம் எய்தினர்; "வலையை அறுத்துக்கொண்டு கிளம்பும் பருந்து போல் ஸம்ஸார வலையிலிருந்து வெளிக் கிளம்பி விட்டேன்" என்று கூறினார். வாமதேவரைப்போல் எல்லோரும் ஆத்ம ஞானத்தையடைந்து உய்யவேண்டும்.

ஐதரேயோபநிஷத்து மூன்றுமத்தியாயம்

ஓம். வாங்மே மனஸி ப்ரதிஷ்டிதா மனோ மே வாசி ப்ரதிஷ்டிதம்... | அவது மாம், அவது வக்தாரம், அவது வக்தாரம் ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

இதி ஐதரேயோபநிஷத் ஸமாப்தா

---

பதினாறு கலைகளுடன் சித்தாகாசத்தில் பிரஜ்ஞான வடிவினனாய்ப் பிரகாசிப்பவன் இந்த ஆத்மா என்று உணர வேண்டும். உலகம் பிரஜ்ஞானத்தாலேயே நடத்தப்படுகிறது; பிரஜ்ஞானத்தாலேயே நிலைபெறுகிறது; **பிரஜ்ஞானமே பிரம்மம்.**

இங்ஙனம் ஐதரேயோபநிஷத்திற்கு
ஸ்ரீ ராமகிருஷ்ண தீபம் என்னும்
உரை முற்றும்

---

# உபநிஷத மந்திரங்களின் அகராதி

# உரையின் அகராதி

# ஸ்ரீமத் பகவத் கீதை

ஆருவது பதிப்பு வெளி வந்துவிட்டது

அழகான பதிப்பு

பக்கம்-xiv + 510 ஸைஸ்-க்ரௌன் 1/8

உரை ஆசிரியர்— "அண்ணு"

மூலம் நாகரத்திலும் தமிழிலும் உள்ளது.

சாதாரண பைண்டு ரூ. 8-00

காலிகோ பைண்டு ரூ. 9-50



புதிய மூன்ரும் பதிப்பு

# ஸ்ரீ தேவீ மாஹாத்மியம்

(ஸ்ரீ துர்காஸப்தசதீ)

உரை ஆசிரியர்: 'அண்ணு'

மூலம் நாகரத்திலும் தமிழிலும் உரையுடன்-கவசம்
அர்க்கலம், கீலம், ராத்ரிஸூக்தம், நவாக்ஷரீ,
தேவீஸூக்தம், ரஹஸ்யத்ரயம்,
முதலியனவும் கூடியது.

அழகான பதிப்பு

பக்கங்கள்: xii + 392 ஸைஸ்: க்ரௌன் 1/8

விலை: ரூ. 9-00

# தேவீ மாஹாத்மியம்

தமிழில் - மூலம் பாராயணத்திற்கு உரியது

பக்கம்: iv + 146 ஸைஸ்: க்ரௌன் 1/8

விலை: ரூ. 2-00



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் : சென்னை-600 004

உபநிஷத்ஸாரம் விலை ரூ. 5.00